# கதிரைச் சிலேடை [illegible]பா




சோமசுந்தரப் புலவர்

# கதிரைச் சிலேடை வெண்பா

★

நூலாசிரியர் :

**திரு. க. சோமசுந்தரப்புலவர்**

★

உரையாசிரியை :

**பண்டிதை பா. பரமேசுவரியார்**

உ

திருச்சிற்றம்பலம்

# கதிரைச் சிலேடை வெண்பா

இது
யாழ்ப்பாணத்து

**நவாலியூர், க. சோமசுந்தரப்புலவர்**
அவர்களால் இயற்றப்பட்டுப்

**பண்டிதை பா. பரமேசுவரியார்**
எழுதிய விரிவுரையுடன்

யாழ்ப்பாணம்
நாமகள் அச்சகத்தில் அச்சிடப்பட்டது

மன்மத — சித்திரை

உ

# பதிப்புரை

கதிரைச் சிலேடை வெண்பா வென்னும் இந் நூலைச் சென்ற ஆண்டிலே வெளியிட வேண்டும் என்று எண்ணி யிருந்தேமுக்குப் பல்வேறு தடைகள் வந்தன. கதிரை முருகப்பெருமான் அருளால் அத்தடைக ளெல்லாம் நீங்க நூல் இப்பொழுது வெளிவருகின்றது.

முருகப்பெருமானே புலவருடைய குலதெய்வம். நவாலியூர் அட்டகிரியிற் கோயில் கொண்டருளிய அப்பெருமானின் அருளினாற் புலவர் பிறந்தா ரென்று அவர் வரலாற்றி லறிகின்றோம். புலவருடைய நீண்டநாள் வாழ்க்கையில் மிகுதியும் வந்து வருத்திய வறுமையும் பிணிவகையும் பகையும் இடரும் முதலாய வின்னல்கள் நீங்குமாறு முருகக் கடவுளைக் குறையிரந்து வேண்டிப் பாடிய நூல்கள் பல. *ஒரு காலத்திற் றீராத வறுமை வந்து புகுந்துகொண்டு விட்டுநீங்காது வாட்டிற்று. அப்பொழுது **மிடிமாலை** யென்னும் ஒருநூல் செய்து முருகனை வழிபட்டார். சிலநாளில் வறுமை நீங்கிற்று. அந்நூலில் ஒரு செய்யுள் வருமாறு.

---

* கி. பி. 1915 ஆம் ஆண்டிலே உலகப் பெரும்போர் நிகழ்ந்தபோது தமக்குற்ற மிகக்கொடிய வறுமைப் பிணி நீங்குமாறு வேண்டிப் பாடப்பட்டது. முப்பது செய்யுள்களைக்கொண்ட மிடிமாலை என்னும் இந்நூல், வணக்கஞ் செய்தற்குரிய அமைதி சான்றது.

பொன்னின்மலை வெள்ளிமலை யுன்முதுசொ; மாயவன்
　　பூமிமற் றுன்சீதனம்;
போதிலய ஞதியிமை யோருலக நீயருள்
　　புரிந்தளித் திட்டகுடிமை;
மன்னளகை நகராளி யேவல்புரி பொருளாளி;
　　மலர்மங்கை யுனதுமாமி
மாதா பிதாக்களோ ரேழேழு புவனமும்
　　வைத்தளித் திடுமாண்பினர்;
பின்னைநீ யென்னிலோ மன்னுயிர்கள் வேண்டுவன
　　பிழையா தளிக்குமுதல்வன்;
பேதையே னிலம்பாடு போக்கிநிதி தந்திடுதல்
　　பெரியகா ரியமாகுமோ?
துன்னுமர கதகலவ மஞ்ஞைமிசை யேறியென்
　　துயரழித் திடவருகுவாய்
சோதிவடி வேலனே யாதியுமை பாலனே
　　சுப்ரமணி யக்கடவுளே.

பின்ஞெருமுறை, கொடிய சன்னிநோய் வந்து புலவரை இரண்டு திங்கள் காறும் வருத்தியது அப்பொழுது, புதுமை மிகுந்த **கந்தவனக் கடவை** யென்னுந் திருப்பதியிற் கோயில் கொண்டருளிய முருகப்பெருமான் மேலதாக **நான்மணி மாலையும் பதிகமும் திருப்பள்ளியெழுச்சியும்** பாடி நோய் நீங்கப் பெற்ருர்.

பிறிதொருமுறை, புலவர் மூலநோயினல் வருந்தியபோது, **அட்டகிரிக் கலம்பகம்** என்னும் ஒருநூல் செய்து வழிபட்டு அது நீங்கப் பெற்ருர். இச் சிலேடை வெண்பாவும் தமக்கு ஒருகால் வந்துற்ற கண்ணேய் நீங்குமாறு பாடப்பட்டது. அதன் வரலாற்றை நூலகத்திற் கண்டுகொள்க.

இச்சிலேடை வெண்பாவை யெழுதுதற்குக் காரணமாயிருந்த **கதிர்காம வேலவர் பதிகத்தினையும்** வேறு சில தனிப் பாடல்களையும் நூலின் பிற் சேர்க்கையாக அமைத்துள்ளோம். புலவர் தாஞ் செய்த **கதிர்காம யாத்திரையைப்** பாட்டிலெழுதியுள் ளார். அது பின்னர் வெளியிடப்படும்.

சிலேடை வெண்பாக்களினல் ஒருநூல் யாப்பது எளிதான செயலன்று. பழுத்த புலமையும் விழுத் தகு செஞ்சொல்லாட்சியும் உடைய ஒருவரே அத்த கைய நூல்செய்ய வல்லவராவர். இந்த இருபதாம் நூற்றூண்டில் ஒரு சிலேடை வெண்பாத் தானும் செப்பமாய்ப் பாடவல்லாரைக் காண்டல் அரிது. சிலேடை வெண்பா வேண்டாம், ஒரு நேரிசை வெண்பாவினைப் பிழையின்றிப் பாடுவோரைக் காண்பதே இலைமறைகாயாகி விட்டது. ஏனெனிற் கூறுதும்:-

நல்லாசிரியன் ஒருவனைத் தலைப்பட்டு அன்பும் பணிவும் பூண்டு, வரன்முறையாகப் பாடங்கேட்டு அழுத்தமாக நூல்களைக் கற்றுத் தேடிக் கொள் ளும் **புலமை ஆக்கம்** இந்நாளில் இல்லை. முயல் புறக்கறிப்பது போலவும், ஆடு தழை தின்பது போலவும், சில நூல்களை மேல்வாரியாகப் பார்வை யிட்டுத் தாங்கல்விக்கடலைக் கரைகண்டு விட்டதா கப் பாவனை செய்து இறுமாப்படைந்து கொள் வதே இந்நாட்கல்வியாளர் வழக்கமாகிவிட்டது. நாட்டில் மெய்ப்புலமை மலையேறிவிட்டது; பொய்ப் புலமை ஆட்சிபுரிகின்றது. அதற்குப் **பொன்னுடை புனைதல் பட்டங் கட்டுதல்** முதலியன மரபறியா வழக்காகி விட்டன.

ஒருசாரார் பழந்தமிழ் நூல்களையும் அவற்றுக்குப் பண்டைச் சான்றோர் கண்ட நல்லுரைகளையும் திட்ப நுட்பமாய்க் கற்றுத் தெளிந்து புலமை யெய்துதற்கு ஏலாராகிப் **புதுத்தமிழ்** எனப்படும் செய்தித் தாள்களில் வருங் **கொடுந்தமிழே** இந்நாளுக்கு உவந்ததென்று தாமே முடிவுகட்டி அம்முடிபினை அவைகளிலும் செய்தித் தாள்களிலும் வெளியிட்டும், அதற்கென்றே விழாவெடுத்தும் வெற்றாரவாரஞ் செய்து, தமிழ்நாட்டிலே மெய்ப்புலமை வளராவாறு தடைசெய்து வருகின்றனர்.

பிறிதொரு சாரார், வெண்பா ஆசிரியப்பா கலிப்பா முதலாம் பாக்களின் இலக்கணங்களையாதல், துறை தாழிசை விருத்தம் முதலாம் பாவினங்களின் இலக்கணங்களை யாதல், கும்மி, தெம்மாங்கு, சிந்து முதலாம் வரிப்பாட்டுக்களின் இலக்கணங்களை யாதல், கற்றுத் தெளிந்து கொள்ளும் மதிவள மில்லாமையால், அவைகள் இனி வேண்டப்படாவென்று முழுவதூஉம் நீக்கி, ஓசையிலுஞ் சொல்லிலும் பொருளிலும் வறுமை கூர்ந்து மரபு கெட்ட போலிப் புதுமைப் பாட்டுத் திறங்களை ஆயிரமாயெழுதப் புகுந்து, இதோ! தமிழ்மொழிக்கு ஆக்கந் தேடிவிட்டோம், **"சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின் பற்றுமின்"**, என்று நாடெல்லாம் வாய்ப்பறை சாற்றி மிகப்பெருங் கேட்டினையே ஈட்டி வருகின்றனர். ஐயகோ! தமிழைக் கேட்பவர் யார்!! ஆயிரக்கணக்கான அருமைக் **கலைக் களஞ்சியங்களைப்** பழுக்கப் பயின்று நற்புலமை

கொள்ளாது விடுதலோ டமையாது வண்டமிழிலே வாழையடி வாழையாக வந்த பாமரபினையும் உரை மரபினையும் அழித்தும் வருகின்றார்களே! இவைக ளைப் பண்டுபோல் நிறுத்தி வளம்படுத்த வல்ல ஆறுமுகநாவலர் மீண்டு மொருகால் வாராரோ என்று முறையிட்டுத் தவங்கிடப்போம்!

★

இனிச் சிலேடையாவது 'உச்சரித்தற்கண் ஒரு வடிவாக நின்ற சொற்றொடர் பலபொருளுடைய தாக வருவது' என்றும், 'பலபொருளுடையதாகச் சொற்களைத் தொடுத்தல்' என்றும் அதற்கு இலக் கண முரைப்பர். புலவனுடைய உள்ளக் கருத்து அழகுறப் புனையப்படுவதே அணியாகும்.

சிலேடை என்னும் பொருளணி தானே தனித்து நின்று புலவன் கருத்தை யழகுபடுத்து வது மல்லாமல், ஏனைய அணிகளுக்கு உறுப்பாய் நின்றும் அழகினை மிகுவிக்கும். எதுபோலவெனின், உப்பானது தானே சுவைகளுள் ஒன்றாயமைவ துடன் ஏனைச் சுவைகளையும் சிறப்பிப்பது போல வென்க.

இவ்வணி, செம்மொழி பிரிமொழி, யெனப் பொது வகையில் இரண்டாகியும், ஒருவினைச் சிலேடை, பல வினைச் சிலேடை, முரண்வினைச் சிலேடை, நியமச் சிலேடை, நியமவிலக்குச் சிலேடை, விரோதச் சிலேடை, அவிரோதச் சிலேடை எனச் சிறப்பு வகையில் ஏழா கியும் நடைபெறும். சிலேடை யுருவகம், சிலேடைத் தீவகம், சிலேடை விலக்கு, சிலேடையின் முடிக்கும் வேற்றுப் பொருள் வைப்பு, சிலேடை வேற்றுமை, சிலே

டைக் குணவவநுதி யெனப் பிறவணிகளுக்கு உறுப் பா யமைவதையுங் கண்டுகொள்க.

ஒரு சிலேடை வெண்பாவில் முதலாமடி சிலேடைக்கு உபகாரப்பட்டு இரண்டு பொருட் கூறுகளைக் கொண்டு நிற்ப, இரண்டாமடி சிலேடித்து நின்று, அவ்விரண்டு பொருட் கூறுகளையும் தனித் தனி தழுவி, இருவேறு பொருள்களைத் தந்து நிற்கும். பின்னிரண்டு அடிகளும் மடக்காய் அமைந்து இரண்டு முதலிய பலபொருள்களைத் தந்து நிற்கும். ஆகவே, பெரும்பான்மை நான்கும், சிறுபான்மை நான்கிறந்த பலபொருளும் ஒரு சிலேடை வெண்பாவில் அமைந்திருப்பதைக் காண லாம். புலவனின் நினைவு வளத்திற்குத் தகப் பொருள்கள் ஏற்றமுறும்.

சிலேடை வெண்பாக்களில் முன்னிரண்டு அடிகள் பொருளணியாகவும், பின்னிரண்டு அடிகள் சொல்லணியாகவும் அமையும். பொருளணி மனத் துக்கு இன்பந் தருவது. சொல்லணி செவிக்கு இன்பந் தருவது.

இனித் தமிழ்ச் செய்யுள்களில் வடிவத்தாற் குறு கியது குறள்வெண்பா. அதனைத் திருவள்ளுவர் கருவியாகக் கொண்டு விழுமிய மணியனைய கருத் துக்களைப் பொதிந்து வெளியிட்டார். பொருட் பொதிவிற் குறள் வெண்பாக்களுக்கு அடுத்து நிற் பன சிலேடை வெண்பாக்களே.

இனிக் கதிரைப்பதியின் இயல்பினையும், அப் பதியின் தெய்வமாகிய முருகக்கடவுளின் பெருமை

களைக் கூறும் சிலேடை வெண்பாக்களின் தன்மை களையும் ஒரு சிறிது ஆராய்வாம்.

இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகளுக்கு முன்னே தோன்றித் தமிழ்நாற் பரவையில் ஓர் இளஞாயிறு போல்த் திகழ்கின்ற முழுமுதற் றொல்காப்பியத்திலே அகத்திணையியலிலே,

மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும், என்னும் அடிகள் வருகின்றன. அவற்றுக்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் "கடல்வண்ணன் காதலித்த காடுறை யுலகமும், செங்கேழ் முருகன் காதலித்த வான்தங்கிய வரைசூழுலகமும்", என்று பொருள் செய்தார். கடல் வண்ணன் காதலித்த காடுறை யுலகம் என்றது முல்லை நிலத்தை. செங்கேழ் முருகன் காதலித்த வரையுலகம் என்றது குறிஞ்சி நிலத்தை. இந்நூலின் பாட்டுடைத் தலைவனாகிய முருகப்பெருமான் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்குங் கதிர்காமம் குறிஞ்சியும் முல்லையும் விரவிய நிலப்பகுதியாகும். குறிஞ்சி நிலத்தைப் பெரிதும் விழைந்து ஆண்டுக் கோயில் கொள்ளுதலின் அவர்க்குக் குறிஞ்சிக் கிழவன் என்றும், மலைகிழவோன் என்றும் பெயர்கள் எழுந்தன.

வரம்பி லழகும் வரம்பி லின்பமும் உடைய செந்தமிழ் முருகப்பெருமானுக்கு, இயற்கைக் கவினெல்லாம் குடிகொண்டிருக்கும் குறிஞ்சி நிலம் எத்துணை யியையுடையது! வண்ணமயிலூர்தியும் மதுரம் பிலிற்றுங் கடப்ப மாலையும் அப்பெருமானின் எழினலத்துக்கு எத்துணையியையுடையன!

குறிஞ்சிக்குப் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் உரிப் பொருள்களாதலின், இருவினை யொப்பும் மலபரிபாகமும் எய்திய நல்லுயிர்களைக் களவுங் கற்புமாகிய இருதிறத்திலாட் கொண்டு பேரின்பப் பெருவாழ்விற் புணர்த்துவதே முருகன் திரு விளையாட்டாம். அம்மையார் இருவரை யாட்கொண்டதூஉம் அத்திறத்ததேயாம். முல்லைக்கு இருத்தலும் இருத்தல் நிமித் தமும் உரிப்பொருள்கள். தலைவனைப் பிரிந்து அவன் வருந்துணை யும் ஆற்றியிருப்பது போலவே, முருகப்பெருமானைப் பிரிந்த நல்லுயிர்கள் அவன் வந்து தம்மையாட்கொள்ளுந் துணையும் ஆற்றியிருக்கும் இருப்புமுண்டு. ஆதலின் கதிர்காமம் முல்லை யையுங் குறிஞ்சியையுங் கொண்டிருத்தல் பெரிதும் இயை புடைத்தாம்.

இவ்விரு நிலப் பண்புகளுங் கருப்பொருள் களும் இந்நூலில் மிக அழகாக எடுத்துக் கூறப் படுகின்றன. குறிஞ்சிநில மக்களாகிய மலைவா ணர் இயல்புகளும் முல்லைநிலமக்களாகிய இடை யர் இயல்புகளும் நன்கு உரைக்கப்படுகின்றன. தினைப்புனங் காத்தல் தினைமா விடித்தல் கிளி கடிதல் குறத்தியர் குறி சொல்லல் குரவை யாடல் ஆயர் மூவினங்களை யோம்புதல், இடைச்சியர் மோர் கடைதல், கத்தூரி மான் வளர்த்தல், பொலி தூற்றுதல், மகளிர் இசைபாடுதல், யாழ் மீட்டுதல் மயிலாடுதல், கிளிகள் புனத்திலாரவாரித் தல் முதலிய இருநிலத்துக் கருப்பொருட் டிறங்களும் இந்நூலகத் தமைந்துள்ளன. இரு நிலத்து மரங்களும் விலங்குகளும் பறவைகளும மலர் வகைகளும் இடையிடையே கூறப்பட்டுள்ளன.

இந்நூல் நூறு சிலேடை வெண்பாக்களைக் கொண்டது. வெண்பாக்களின் முன்னிரண்டடிகள்

கதிரைமலையையும் பின்னிரண்டடிகள் முருகக் கடவுளையும் புகழ்ந்து போற்றுவன. முதல் முப் பத்துமூன்று வெண்பாக்களிலும் கந்தபுராண வர லாற்றுச் சுருக்கம் கூறப்படுகின்றது. அடுத்து வரும் பத்து வெண்பாக்களில் திருப்பரங்குன்று திருவேரகம் முதலாய தமிழ்நாட்டுத் திருப்பதிகளிற் கோயில் கொண்டுள்ள முருகப்பெருமானே கதி ரைப்பதியை விரும்பிக் கோயில் கொண்டுள்ளா ரென்பது கூறப்படுகின்றது. கதிரைப்பதியோ டொத்த பழைமை யுடையனவாகிய **கந்தவனம் மாவிட்டபுரம்** என்னும் ஈழநாட்டுத் திருப்பதிகள் இரண்டும் அவற்றை யடுத்துக் கூறப்பட்டுள்ளன.

கதிரைமலையில் முருகப்பெருமான் தொண்டர் களை ஆட்கொள்ளும் முறைமையையும், தம்மை யாட்கொண்ட தன்மையையும் பலபடப் பாராட்டி யுள்ளார். முருகப் பெருமானில் அன்பு பூண்டு அவரை ஆண்டானாகவுந் தம்மை யடிமையாகவுங் கொண்டொழுகுந் தொண்டர்கள் தலைகளிலே கர்ப் பூர விளக்குகளை யேந்திச் செல்வதும், அரகர மந் திரவொலி பலகூப்பிடு தூரம் பரந்து செல்ல அம் முருகனை வாழ்த்துவதும், நேர்த்திகளைப் பூர்த்தி செய்தற்குப் பாற்காவடி யெடுப்பதும், தீக்குளிப் பதும், கழுத்தறுப்பதும், மடங்களிலே உணவு கொடுப்பதும் இப்பதியில் எந்நாளிலும் நீங்கா வியல் புகளாம். இவைகளை ஆசிரியர் பல சொல்லோவி யங்களாகத் தீட்டிய அழகு வியக்கத்தக்கது. இன் னும் குருடு செவிடு ஊமை முதலிய உறுப்பறை கள் முருகப்பெருமானைக் காதலித்து உள்ளமுருகி

வழிபடுதலினுலே நீங்குகின்றன. இத்தெய்வப் புது மைகளை ஆசிரியர் கதிரை வேலவர் பதிகத்திலே மிக நயமாகக் கூறுகின்ருர்.

........................................................................................

வெங்கலி யுகத்திலே கண்கண்ட தெய்வநீ
வேண்டியுன் றிருமுன்வரும்
விழியிலார் விழிபெறுவர் மிடியுளார் நிதிபெறுவர்
வீணர்மெய்ஞ் ஞானியாவர்
தங்குமெய்ப் பிணியாளர் சுகமடைவர்; மலடிமார்
தனையர்களை யீன்றெடுப்பர்
சாவுற்ற பேர்பிழைப் பாரிவைகள் கண்கண்ட
சான்று..............................

என வருதல் காண்க.

இனி, அவாவறுத்து மெய்யுணர்ந்த முனிவர்கள் ஆண்டுறைந்து முருகப்பெருமானை வழிபட்டுத் தவஞ்செய்து நீண்டநாள் உயிர் வாழ்கின்றனர். அதனை ஆசிரியர்,

'அருள்நாடு சிவயோகியர் கற்பங் கடக்குங் கதிரை' என்றும்

'சீலமுறு யோகியர் காலங் கடக்குங் கதிரை' என்றும்

'நிட்டைபுரி வோர்பிறவிக் கட்டங் கழிக்குங் கதிரை'

என்றும் கூறுகின்ருர். இவர்களிடத்திற் கூற்றுவன் செல்லாமைக்குக் காரணம் அவன் முன்னொருபோது வீரவாகுதேவருக்கு அஞ்சியமையே யாகுமென்பர்,

.......................................................கொம்பெருமை
மாட்டாளென் பான்வாள் வயவீரர்க் கஞ்சிவர
மாட்டாளென் பான்வாள் வரை.

என முருகப் பெருமான் அத்தொண்டர்களுக்கு அபயமருளுதல் கூறுகின்றார்.

அத்தகைய முனிவர்கள் நாவில் நாமகள் வீற்றிருந்து இன்னிசைப் பாடல்களை வரகவியாகப் பாடுவித்தலையும், ஏனை யடியார்களுக்கு நல்வாக்கு வழங்குவித்து வருதலையும் யாம் இன்றுங் கண்ணுறக் காண்கின்றோம். புலமைக் குயிலாகிய நாமகளின் அருட்செயலைச் சொல்லப்புகுந்த ஆசிரியர், அக்குயிலுக் கிணையாக வேனிற் பருவத்திலே தேமாவிலிருந்து மதுர இசைபாடி மாரனைக் கூவி மகிழும் மாங்குயிலையுஞ் சேர்த்து,

"ஓதுவார் நாவி லுயர்ந்ததே மாமரத்திற்
காதம் பரிவாழ் கதிரையே"

என்னும் ஓர் அழகிய சிலேடை யமைத்துக் கதிரைப்பதியின் இருவேறு குயில்களை ஒரு சேரக் காட்டியுள்ளார்.

இன்னுங் கதிரைப் பெருமானிடத்து நம்பிக்கை பூண்ட மெய்த்தொண்டர்கள், எல்லாம் இறைவன் செயல் என்று துணிந்து, தந்தை தாய் தமர் தாரம் மகவு என்போர் தமக்குத் தலைப்பாரம் எனக் கருதாது, "எம்பெருமானே அவர்களைத் தாங்குவார், என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்று கருதிப் பத்தி வைராக்கியமுற்று எல்லாவற்றையும் அவன் திருவடியில் ஒப்புவித்து நிற்பதையுங் காண்

கின்றேம். இதனை யாத்திரை செய்யுந் தொண்டர்கள் தமது தலைகளிற் சுமந்து கொண்டுவந்த பொதிகளை வழியிலுள்ள கற்பாறைகளின் மேலும், நிழன் மரங்களின் கீழும் இறக்கி வைத்து இளைப்பாறும் அழகிய வழிக்காட்சியுடன் சேர்த்துச் சிலேடையிலமைத்து,

> "முட்டுவழிச் செல்வோரும் மூதறிஞ ருந்தலையிற்
> கட்டிறக்கி யாறுங் கதிரையே"

என எத்துணை அழகாகக் காட்டுகின்றூர். ஓவியம் வல்லான் இவ்வாறு இரண்டு சிறந்த காட்சிகளை ஒருசேரப் புணைந்து காட்ட வல்லனே? வழிக்காட்சியைத் தனது கைவன்மையால் எழுதிக் காட்டுதல் கூடும்; ஆயின், தலைப்பாரந் தீர்ந்து ஆறுதலடைந்து முருகனை நினைந்து மனங் குழைந்து நிற்கும் மூதறிஞர்களின் உள்ளப் பான்மையை வண்ணங்களில் எழுதிக் காட்டுதல் யாங்ஙனம் அமையும்? ஆசிரியரின் சொல்லோவியமோ ஈரடிகளில் எழுதிக் காட்டிச் சிலேடையணிக்கும் ஒப்பற்ற பெருஞ் சிறப்பினை யுண்டாக்குகின்றது.

இனி, ஆசிரியர் முருகக்கடவுளுக்குந் தமிழ் மொழிக்குமுள்ள தொடர்பினை யெடுத்துக் காட்டுவதும், பொய்யாமொழியார் ஔவையார் என்னும் புலவர்களுக்கு அருளிய திறத்தைச் சொல்வதும், மிக நயமானவை. இப்பதியிற் றெண்டர்கள் இடையரு தோதி வழிபடும் அரகர மந்திரத்தைக் கூறுமிடத்து அது பலகாதத்திற்கு அப்பாலுள்ளாரையும் மெய்ம் மறந்து உருகச் செய்யுமென்கின்றூர்.

" அரகர வென்ன வரியதொன் றில்லை
அரகர வென்ன வறிகிலா் மாந்தா்
அரகர வென்ன வமரரு மாவா்
அரகர வென்ன வறும்பிறப் பன்றே"

என்று திருமூலர் கூறியபடி இம்மந்திரம் பிறப்பி னைப் போக்க வல்லது. வீடுதரும்பதிகளிலொன்ரு கிய இக்கதிரைப்பதியிற் பிறப்பறுக்கவல்ல இவ் வரகர மந்திரம் பலகாதத்திற்கு அப்பாற் கேட் கப்படுதலும், கேட்டவர்கள் அவ்விடத்தில் நின்ற வாறே தம்வயமழிந்து தாமும் அம்மந்திரத்தைப் பலகாலுரைத்து உருகிநிற்றலும், தொண்டர்களின் அன்புப் பெருக்கை நன்கு காட்டுகின்றன.

இப்பதியின் உண்மண்டபத்தில் ஒரு தந்த மணிப் பேடகத்தில் முருகப்பெருமானது ஆறெழுத் தருமறை யெழுதிய எந்திர அருட்குறி வைத்து வணக்கஞ் செய்யப்படுகின்றது. இதனைத்

" தந்தமணிப் பேடகத்திற் சார்புனத்துப் பாத்திகளிற்
கந்தமூ லஞ்சேர் கதிரையே"

என்னுஞ் சிலேடையிற் காட்டுகின்ருர். இம் மலைச் சாரலிற் கிழங்குப் பாத்திகளில் வீழ்ந்துள்ள கந்த மூலமெனப்படுங் கிழங்கினங்களையும், முருகப்பெரு மானது அருட்குறியி லமைந்துள்ள மூலமந்திரத் தையுஞ் சேர்த்துக் கூறிய சிலேடை நயத்தை நோக்குக. இந்நூலில் இவ்வாறமைந்துள்ள சிலேடை நயங்கள் கற்போர்க்குத் தெவிட்டா வின்பந் தரு வனவாம்.

இனிச் சிலேடை போலவே, இவ்வெண்பாக்களில் வரும் மடக்கணிகளும் பொருளழகும் பொருளாழமு முடையன.

"——————————————தொண்டர்க்
கறமறைந்த சேய னருளிலா வண்டர்க்
கறமறைந்த சேய னகம்"

என்னும் மடக்கில் முருகப்பெருமான் தமக்காட்பட்ட தொண்டர்களுக்கு வெளிப்பட்டுச் செம்மேனியனுய்க் காட்சிகொடுத்து, அறமுதல் நாற்பொருளு மருளிக் காக்குந் திறமும், அல்லாத நூற்றெட்டு அண்டங்களிலு முள்ள அரக்கர்களுக்கு முற்ருக மறைந்து சேயனுய் நிற்குந் திறமும், மடங்கி வந்த ஒருசொற்ருெடராற் செவ்விதாகக் காட்டப் படுதல் காண்க. இவ்வாறு மடங்கி வந்த சொற்ருெடர்கள் இந்நூலில் எழுபது வெண்பாக்களில் வந்துள்ளன. ஏனையவற்றில், முதலாமெழுத்துத் திரிந்துவந்த தாயினும், மற்றை யெழுத்தனைத்தும் ஒற்றித்து நிற்றலின் அவைகளும் இடையிட்டு வந்த மடக்கணி யென்றே வழங்கப்படும். இவ்வாற்ருன் இந்நூலில் வரும் பொருணயங்களையுஞ் சொன்னயங்களையும் அறிந்து கொள்க. விரிக்கப் புகிற் பெருகும்.

இனி, இத்தகைய சிலேடை நூற்பயிற்சியும், அவற்றில் மறைந்து கிடக்கும் பொருட்சிறப்புக்களைத் தாமே தேடிக் கண்டு உவகை கொள்ளும் சதுரப்பாடும், இக்காலத்து மாணுக்கரிடம் இல்லாமையால், இந்நூலுக்குச் செப்பமான ஓர் உரையையும்

எழுதுவித்துப் பதிப்பித்துள்ளோம். பல்லாண்டுக ளாக யாழ்ப்பாணத்தில் அடிப்பட்டுவந்த இலக்கியப் புலமைப் பயிற்சி மாய்ந்து போகாது மீண்டுந் தலை யெடுத்தல் வேண்டுமென்பதே எங்கள் குறிக்கோள்.

இந்நூற்கு அணிந்துரைகள் எழுதித்தருமாறு இலங்கைவித்தியாதிபதியாயிருந்து ஒய்வுபெற்றவரும் இப்போது இலங்கைப் பல்கலைக்கழகத்தில் அகநூற் புலமை நடாத்தி வருபவரும் எந்தைபாற் கேண்மை பூண்டவரும் ஆகிய **கலைமாச் செல்வர் திரு. க. ச. அருணந்தியார்** அவர்களையும், தமிழ் மறைக்கழகத் தலைவரும், கொழும்புமாநகரிலுள்ள ஆசிரியப் பயிற்சிக் கல்லூரிப் பேராசானும் ஆகிய **பண்டிதர் கா. பொ. இரத்தினம்**, எம். ஏ. அவர்களையும் கேட் டோம். அவர்கள் இருவரும் பெரிதும் இசைந்து தகுந்த அணிந்துரைகள் எழுதித் தந்தார்கள். அவர் களுக்கு எங்கள் நன்றி யுரியது.

**பதிப்பாளர்.**

# அணிந்துரை

இலங்கை வித்தியாதிபதியாயிருந்து ஓய்வுபெற்றவரும்
இலங்கைப் பல்கலைக் கழகத்தில் அகநூற்புலவராய்த்
திகழ்கின்றவரும் ஆகிய
**கலைமாச் செல்வர், திரு. க. ச. அருணந்தியார்**
அவர்கள் நல்கியது.

---

தன்னேரில்லாத தமிழ்த்தாயின் தவப்பெரும் புதல்வனாகிய **நவாலியூர்ச் சோமசுந்தரப் புலவர்** எமக்குச் சிறந்த செந்தமிழ் நூல்கள் பலவற்றையும், இனிய தமிழ்ப்பாடல்கள் பலவற்றையும் ஆக்கியளித்துப் போந்தனர். அந்நூல்களுட் **கதிரைச் சிலேடை வெண்பாவும்** ஒன்று. இந்நூல் கதிரைப் பதியையும் முருகப் பெருமானையுந் துதிக்குஞ் சிலேடை வெண்பாக்களாற் பாடப்பட்டது. இந்நூலை அலங்கரித்து நிற்கும் **பொருளணியாகிய சிலேடையணியும், சொல்லணியாகிய மடக்கணியும்** இதற்கு ஒப்பற்ற பெருஞ் சிறப்பைத் தருகின்றன. இவ்விரு அணிகளும் இந்நூற்கு இருகண்கள் போல்வன. சொல்லொடு சொல் விதிப்படி புணர வழங்கும் தமிழ்மொழியின் தனிச்சிறப்பும் வேறு வேறு பொருள்பட ஒருசொல் நின்று விளங்கும் அதன் பொலிவும் பொருந்த எழுகின்ற சிலேடையணி இதன் வலக்கண் போல நின்று முதலிரண்டடிகளையும் அழகுபடுத்துகின்றது. ஈற்றடிகளில் ஒரே சொற்றொடர் இருவேறு பொருள்பட இருமுறை

மடங்கிவந்து இதன் இடக்கண்போல நின்று ஈற்றடிகளிரண்டையும் அழகுபடுத்துகின்றது.

இவ்விரண் டணிகளையுந் துணைக்கொண்டு புலவர் கதிரை முருகப்பெருமானுக்கு ஒப்புயர்வற்றதோர் காப்பியத்தைப் பாடியுள்ளார். சிலேடையணிகள் கதிரைப் பதியையும், மடக்கணிகள் முருகக்கடவுளையும் போற்றித் துதிக்கு முகத்தால், அப்பெருமான் மேலதாக ஒரு காப்பியத்தையும் கூறிமுடிக்கின்றன. நூறு வெண்பாக்களினுற் புலவர் பன்னூறு சிறப்புப் பொருள்களைக் கூறியிருக்கின்றூர். எத்தனையோ தத்துவக் கருத்துக்களை நுட்பமாகச் சுட்டியுரைக்கின்றூர்.

பழந் தமிழ்ப் புலவர்கள் இவ்வகையான சிலேடைகளையும் மடக்குகளையும் மிக விசித்திரமாக நகைச்சுவை தோன்றப் பாடிவந்தார்கள் என்பதை அவர்கள் பாடல்களும் வரலாறுகளுந் தெரியக் காட்டுகின்றன. இதனை விளக்கும் பழங்கதையொன்று வருமாறு :—

புலவர் இருவர் ஒருபந்தியில் விருந்துண்ண அமர்ந்திருந்தனர். அவருள் ஒருவர் தோற்றுன்னர். மற்றவர் காருகர். அன்னம் பரிமாறிப் பருப்பு வைத்தபின் நெய் கொண்டு வந்தாரைக் காருகர் விழித்து,

"வாரும் வாரும் வாருமையர்க்கு வாரும்"

என்றனர். இவ்வாறவர் மற்றவருடைய தொழிலை விசித்திரமாகக் கூறியதும், தோற்றுன்னர்,

"வாரும் வாரும் நெய்யுமையர்க்கு வாரும்"

என்று மறுத்துரைத்துக் காருகர்தந் தொழிலையும் மற்றோராறியக் கூறினர். இவ்விருவர் கூற்றிலும் வாரும் வாரும் என்ற முதலிரு சொல்லும் வருக என்ற பொருளைத் தந்தது. மூன்றாவது சொற்றொடர் நெய்பெய்க என்னும் பொருளைத் தரும் போது இயல்பாகவும், தோலை வார்தல், நெசவு செய்தல் என்னும் இருவரது தொழிலையும் கருதும் போது இரட்டுற மொழிதலாகவும் நின்று, இரு பொருள் தந்தது. இவைபோன்ற நகைச் சுவை மிக்க தனிப்பாடல்களை நமது புலவரவர்களும் பல விடங்களிற் பாடியுள்ளார்கள். ஆனால் இக்கதிரைச் சிலேடை வெண்பாவின் நூறுபாக்களும் இவற்றிலும் பன்மடங்கு விசித்திரமாக விளங்குகின்றன.

சிலேடையணி மடக்கணி இரண்டும் ஒருங்கு சேர்ந்துள்ள பாவொன்றைத் தானும் இயற்றுவது இக்காலத்துப் புலவர்களுக்குப் பெருஞ் சிரமத்தைக் கொடுப்பதொன்றாகும். அதுவும் ஆழ்ந்த அழகிய பொருளமைய இயற்றுவதெனிற் சிரமம் எவ்வளவென்பதை எடுத்துரைத்தல் எளிதன்று. ஆனல், நமது புலவரவர்கள் சொற்சுவை பொருட் சுவை கனிந்த நூறு வெண்பாக்களினல் முருகக் கடவுளுக்கு இவ்வரிய பாமாலையைச் சூட்டித் துதித்து மகிழ்ந்தார். இன்னும் கற்பனை என்னும் தேரேறிக் கால எல்லையைக் கடந்து சென்று கதிர்காமப் பதியும் ஆங்குள்ள முருகன் திருவகமும் பண்டுகொண் டிலங்கிய பன்னருங் கோலத்தைக் கண்டு, தாமெய்திய இன்பத்தைப் பிறரும் எய்துமாறு சொல்லோவியமாக இந்நூலை எழுதி

வைத்துப் போந்தார். பொதுவாகத் தமிழ் மக்கள் எல்லோருக்கும் சிறப்பாகச் சைவ மக்களுக்கும் அவர்கள் செய்தருளிய அரும்பெருந் தொண்டுகள் பலவற்றுள் இதுவும் ஒன்றாகும்.

இவ்வாறு பல்லலங்காரம் படைத்த இந்நூலின் மணிமுடி போன்று திகழ்கின்ற இன்னுமோர் சிறப்புண்டு. புலவரவர்கள் பெருஞ் சைவத்தொண்டர். அழகுத் தெய்வமாகிய முருகனை அளவுகடந்த அன்போடு வழிபட்டு வாழ்ந்தவர்கள். முருகன் திருவிளையாடல்களைப் பொருளாகக் கொண்ட கந்த புராணத்தை நன்கு கற்று அதன் உட்பொருளை ஐயந்திரிபற விளங்கிச் சுவைத்தவர்கள். பெங்களூரிலிருந்து வந்து தம்மையாட்கொண்ட சுப்பிரமணிய குருவின் பேரருளைப் பெற்றவர்கள். இவ்வாறு பல்லாற்றானுஞ் சைவமணமுந் தமிழ்மணமுங் கமழ வாழ்ந்துவந்த இவர் தமக்குற்ற கண்ணோயை இந்நூல் செய்து தீர்த்துக்கொண்டமையே இந்நூற்குத் தலையாய சிறப்பாம்.

இந்நூலின்கண் உள்ள பாக்களின் பொருளைப் பிரித்து விளங்குதல் எளிதன்று. இக்குறையை நீக்குதற்கு முன்வந்து அரிய பதவுரையும் ஆழ்ந்த விளக்க வுரையும், புலவரவர்களின் உள்ளத்தை உட்புகுந்து கண்டவர் போன்று, தெளிவுற இனிய செந்தமிழ் நடையில் எழுதித் தந்த அவர்களது அருமை மருமகளார், **பண்டிதை பா. பரமேசுவரியாருக்கு** நாம் பெரிதுங் கடப்பாடுடை

யோம். அவரது தமிழிலக்கண இலக்கிய அறிவின் ஆழத்தை ஆங்குக் கண்டு மாமன் மருகியார் என்று அவரைத் தமிழுலகு மனமாரப் பாராட்டி வாழ்த்தும் என்க.

கரும்பென்கோ ஞானக் கனியென்கோ தேவர்
மருந்தென்கோ தென்கதிரை மன்னன்—விருந்தென்கோ
பொங்கர் கழனி பொலியு நவாலிநகர்த்
தங்கப் புலவன் தமிழ்.

"நெய்தலங்கானல்"
பருத்தித்துறை.
12-4-55

க. ச. அருணந்தி

★

உ

தமிழ்மறைக் கழகத் தலைவரும், கொழும்புநகர் ஆசிரிய கல்லூரி விரிவுரையாளரும் ஆகிய

**வித்துவான், பண்டிதர், கா. பொ. இரத்தினம்**
அவர்கள், எம். ஏ; பி. ஓ. எல்.

நல்கிய

# அணிந்துரை—II

பல்லாயிரக் கணக்கான பைந்தமிழ்ப் பாடல்களைப் பாடிப் புகழீட்டிய கம்பர் பெருமானுக்குப் பின்னர், சென்ற நூற்றாண்டிலே பதினாயிரத்துக்கு மேற்பட்ட செழுந்தமிழ்ப் பாடல்களைப் பாடித் தமிழை வளம்படுத்திய புலவர் பெருந்தகை மீனாட்சி சுந்தரம்பிள்ளையாவார். அவருக்குப் பின்னர் இந்த இருபதாம் நூற்றாண்டிற் செழுந்தமிழ்ப் பாக்களைப் பல்லாயிரக் கணக்கிற் பொழிந்த ஈழத்துப் புலவர் மாமணி, சோமசுந்தரப் புலவர் என்பதைத் தமிழ்கூறு நல்லுலகம் நன்கறியும். "செஞ்சொற் கவியின்பம்" என்னுந் தொடர் வாயிலாகக் கம்பர் புலப்படுத்திய சொன்னயப் பண்பினையுங் கருதாது "உணர்வின் வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்" என்பதையும் பொருட்படுத்ாது கொச்சைத் தமிழிலே கன்னா பின்னா என்று பாடுவார் மலிந்த இந்த நூற்றாண்டிலே, மரபு தவறாது பழைமையும் புதுமையும் இசைந்து பொலிந்து இலங்கச் செந்தமிழ்ப் பாடல்களைப் பாடித் தமிழைப் பண்டுபோல வளம்படுத்திய பெருமை நவாலியூர்ப் புலவர் அவர்களுக்கே யுரியது.

சுப்பிரமணிய பாரதியாரைப் பின்பற்றுகிறோம் என்று கூறிக்கொண்டு, புதுமை எளிமை என்னும் போர்வைகளுட் புகுந்து தமிழ் வரம்பழிக்கும் பலர், பாரதியார் போற்றிய திருக்குறள், சிலப்பதிகாரம், இராமாயணம் முதலிய நூல்களை முறையாகக் கற்பதுமில்லை; தமிழ் மரபைத் தழுவிப் பாரதமாதா நவரத்தின மாலை, பாரத தேவியின் திருத்தசாங்கம், மகாத்மாகாந்தி பஞ்சகம், விநாயகர் நான்மணி மாலை முதலிய பிரபந்தங்களைப் பாரதியார் இயற்றிய அருமைப் பாட்டை அறிந்துகொள்வது மில்லை. இதனால் இப்பொழுது பாடப்படும் பாடல்களிலே பிழைகள் இல்லாத பாடல்களைக் காணுதல் அரிதாகிவிட்டது. தமிழ்மொழிப் பயிற்சியும் ஆட்சியுமின்றிப் புலமை நலமுங் கனியாது பாடுவோர்தம் பாடல்கள் தமிழை வளம்படுத்துமா? காலங் கடந்து வாழுமா? அறியாமையுங் கட்சிச் சார்புமுடையனவாய் வியாபார விருத்தியையே கருதும் பத்திரிகைகளும், தமிழிலே போதிய பயிற்சியில்லாத மக்களும் இப்பாடல்களை வானளாவிப் புகழ்ந்து போற்றுதலை நாம் காண்கிறோம். போற்றிய சில ஆண்டுகளுள்ளே இவை மங்கி மறைந்து போதலையும் பார்க்கிறோம்.

புற்றீசல்கள் போலத் தோன்றி மடியும் இப்பாடல்களைப்போல் அழிந்துவிடாமல் என்றும் நின்று நிலவும் பெருமை வாய்ந்தன, புலவர் அவர்களைப்போன்ற பழுத்த புலமைப் பசும்பாவலர்தம் பாடல்களே யாகும். இவை தோன்றிய காலத்திலும் பார்க்கப் பிற்காலத்திலே பெருஞ் சிறப்பெய்துகின்றன; புலவர் பெருமக்களாற் பாராட்டப்படுகின்றன; போற்றப்

படுகின்றன. இப்பொழுது எமக்குக் கிடைத்துள்ள இலக்கியச் செல்வங்கள் யாவும் இவ்வாறு போற்றிப் பாதுகாக்கப்பட்டனவே.

சோமசுந்தரப் புலவர் அவர்கள் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர்ப் பேரா இயற்கைப் பெரும்பேறெய்திவிட்டார்கள். இப்பொழுது அவருடைய பாடல்கள் தமிழ் மக்களுடைய உள்ளங்களை ஆட்சி செய்கின்றன. நாமகள் புகழ்மாலை, மருதன் அஞ்சல் ஓட்டம், இலங்கை வளம், தாலவிலாசம், சிறுவர் செந்தமிழ் முதலிய நூல்கள் வெளிவந்துவிட்டன. சிறுவர் செந்தமிழுஞ் சாவித்திரி கதையும் ஈழநாட்டிலுள்ள பாடசாலைகளில் ஒலித்துக்கொண்டிருக்கின்றன. பாட நூலாகவுங் கற்பிக்கப்படுகின்றன. கதிரைச் சிலேடை வெண்பா என்னும் இந்நூல் இப்பொழுது விருத்தி யுரையுடன் வெளியிடப்படுகின்றது.

புலவரவர்கள் முருகப்பெருமான் மேல் ஆயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களைப் பாடியுள்ளார். நல்லை முருகன் திருப்புகழ், நல்லையந்தாதி, நல்லைப் பதிகம், கந்தவனக்கடவை நான்மணிமாலை—திருப்பள்ளியெழுச்சி என்பன முன்னரே அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளன. அட்டகிரிக் கலம்பகம், அட்டகிரி வெண்பா அட்டகிரிப் பதிகம் முதலியன இன்னும் அச்சிடப்படாதிருக்கின்றன. கதிரை முருகன் மேல் இச்சிலேடை வெண்பாவை மாத்திரமன்றிக் கதிர்காம வேலவர் பதிகம், கதிர்காம யாத்திரை என்னும் நூல்களையும் புலவரவர்கள் பாடியுள்ளார்.

இக் கதிரைச் சிலேடை வெண்பாவின் சிறப்பியல்புகளைப்பற்றிக் கூறுதற்கு முன்பு, சிலேடை வெண்பாவின் தோற்றம், அமைப்பு, முதலியன பற்றிச் சில கூறல் இன்றியமையாதது. தமிழிலுள்ள தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களில் ஊரைச் சிறப்பித்துப் பாடும் **ஊர்வெண்பாவும்** ஒன்றாகும். இது பத்து வெண்பாக்களைக் கொண்டது. இதனைப் பிற்காலப் புலவர்கள் நூறு வெண்பாக்கள் கொண்ட சிலேடை வெண்பாவாக வளர்த்துள்ளார். இச் **சிலேடை வெண்பா,** திருத்தலங்களைப் புகழ்ந்து பாடும் முறையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு வெண்பாவிலும் தலங்களின் பெயரை இரண்டாமடி மூன்றாஞ் சீரில் வைத்தும், முதலிரண்டடிகளிற் சிலேடையையும் பின் இரண்டடிகளில் மடக்கையேனும் திரிபையேனும் அமைத்தும், இந்நூல் பாடப்படும். முதலிரண்டடிகளிலும் திருத்தலத்தின் சிறப்பும் கடைசி இரண்டடிகளிலும் அத்தலத்தி லெழுந்தருளியிருக்கும் கடவுளின் பெருமையுங் கூறப்படும். இருபொருட் சிலேடை முப்பொருட் சிலேடை நாற்பொருட் சிலேடை செம்மொழிச் சிலேடை பிரிமொழிச் சிலேடை முதலிய சிலேடை விகற்பங்களையும் இந்நூலிலுள்ள வெண்பாக்களிலே காணலாம். இப் பிரபந்தத்தைப் பாடுதற்குப் பன்னாற் பயிற்சியும் சொல்லாட்சியும் நுண்மாணுழை புலமும் இன்றியமையாதன.

தமிழ் நாட்டுப் புலவர்களும் ஈழநாட்டுப் புலவர்களும் பாடிய சிலேடை வெண்பாக்கள் பலவுள. தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் இயற்றிய **கலைசைச் சிலேடை வெண்பா** ஏனையவற்றுக்கு வழி

காட்டியாக விளங்குகிற தென்பர். சிங்கயச் செட்டியார் அருணைச் சிலேடை வெண்பாவையும் நமச்சிவாயக் கவிராயர் சிங்கைச் சிலேடை வெண்பாவையும், மகா வித்துவான் சாபாபதி முதலியார் திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பாவையும் பாடியுளர். முருகேச பண்டிதருடைய மயிலணிச் சிலேடை வெண்பாவும், பேரம்பலப் புலவருடைய வண்ணைச் சிலேடை வெண்பாவும் ஈழநாட்டிலே தோன்றியவை.

சோமசுந்தரப்புலவர் பாடிய கதிரைச் சிலேடை வெண்பா என்னும் இந்நூல், கதிர்காமத்தையும் அங்கே யெழுந்தருளி யிருக்கும் முருகக்கடவுளையும் பற்றிப் பாடப்பட்டது. கதிர்காமம் கதிரை யெனவும் வழங்கப்படும். புலவருடைய இளைய தம்பியார் திருவாளர் சரவணமுத்து அவர்களுக்குக் கண்ணில் நோயுண்டாகி ஓராண்டு வரையும் மாறுதிருந்தமை கண்ட புலவர் அவர்கள், கதிர்காம வேலவர் பதிகத்தைப் பாடி நாற்பது நாள் அதனைப் படித்துப் பூசை செய்தார். செய்யவே தம்பியாருடைய பிணி நீங்கிற்று. ஆனல் ஓராண்டிற்குள் புலவருடைய கண்ணிலும் நோய் ஏற்பட்டது. அதனை நீக்குதற்காகவே கதிரை முருகன் மேல் இச் சிலேடை வெண்பாவினைப் பாடினர். முருகனுடைய அருளாலே தம்முடைய கண்ணோய் தீர்ந்த செயலை,

விண்ணுறை சோலை வியன்மலரும் வேண்டினருங்
கண்ணறை போக்குங் கதிரையே—கண்ணருளி
வாகா முருகா வரிமருகா பன்னிரண்டு
வாகா வெனவருவான் வைப்பு.

என்று 90-ஆவது வெண்பாவிற் புலவரவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

இந்நூலிலுள்ள வெண்பாக்களின் முதலிரண்டடிகள் கதிர்காமத்தின் பெருமையினையும் கடைசி இரண்டடிகள் முருகப் பெருமானுடைய சிறப்பியல்புகளையும் கூறுகின்றன. கடைசி இரண்டடிகளும் பல வெண்பாக்களில் மடக்காகவும் ஏனையவற்றிலே திரிபாகவும் அமைந்துள்ளன. 2-ஆம், 36-ஆம், 45-ஆம் செய்யுள்களில் முப்பொருட் சிலேடையும் ஏனையவற்றில் இருபொருட் சிலேடையும் அமைந்திருக்கின்றன. கதிர்காமத்தினைப் பற்றிய அருஞ் செய்திகள் பலவற்றையும் முருகனுடைய பேரருட்டிறனையும் இந்நூல் நன்கு விளக்குகின்றது.

" நேசமுடன் பாவடியிற் சிந்திஞற் பாடவருள்வோன் " என்றும் ( வெண்பா 80 )

' கண்டபடி, பாவையான் பாடப் பரிந்துகேட்டின்பருளும் மாவையான் ' என்றும் ( வெண்பா 45 )

செய்யதமிழ் முன்பாட்டுங் கேட்டான் முதிர்வினைகள் மாற்றவுவந் தேன்பாட்டுங் கேட்டான்' என்றும் (வெண்பா 100 ) தம்மைப் பாடப் பணித்த முருகனைப் புலவர் அவர்கள் போற்றுகிறார்கள். அவனது அழகிய திருக்கோலத்தைக் ' கண்டடக்கும் கோலம் ' என்றும் கருணை நோக்கினைக் ' கண்தூது ' என்றும் பாராட்டி மகிழ்கிறார். முருகனுடைய அருட்டிறனை வியந்து வியந்து உள்ள முருகிப் புலவர் இந்நூலைப் பாடியிருக்கிறார். இந்நூலிற் கூறப்படுஞ் சிறப்பான செய்திகள் சிலவற்றையும் அவற்றைக் கூறும் வெண்பாக்களின் எண்களையுங் கீழே காண்க:—

* **55, 56, 57** ஆம் வெண்பாக்கள் முருகக்கடவுள் சிவசத்தியென்பதைக் காட்டுவன.

இன்னும், சிலேடையில் வரும் சொற்சித்திரத்தைக் காட்ட ஓர் எடுத்துக்காட்டுத் தருகின்றேன். முருகன் சிவபெருமானுக்கு மறைப்பொருளை விளக்கினர். வள்ளிநாயகியாரை ஆட்கொள்ளும் பொருட்டு முருகப்பெருமான் மனித வடிவம் எடுத்தார். இந்த இருபெருஞ் செய்திகளையும் மான் என்னும் சொல்லாற் பொருத்தியிருக்கும் அழகுதான் என்னே!

'தண்டைக்கால் கண்டவருந் தானேர்ந்து கொண்டவருங்
கண்ட மறுக்குங் கதிரையே—பண்டொருநாள்
மானிடமா னார்க்கு மறைமொழிந்து மானுக்காய்
மானிட மானார் வரை' (வெண்பா 21)

கதிரை முருகனுடைய திருவடியை அடைந்த அடியார்களுடைய இன்னல்கள் தீருமென்பதையும் தம் நேர்த்தியை முடிக்கும் அன்பர்களின் அருந்தொண்டினையும் இச்செய்யுள் கூறுகின்றது.

இற்றை வரையும் அச்சிடப்பட்டு வெளிவந்த ஏனைய சிலேடை வெண்பாக்களுக்கில்லாததோரு தனிச் சிறப்பை இந்நூலுக்கு இதனுரை அளிக்கிறது. இவ்வளவு சிறப்பான உரை—புலமை மணங் கமழும் உரை வேறெந்தச் சிலேடை வெண்பாவுக்கும் எழுதப்படவில்லை. இந்நூலின் உரை ஆசிரியை பண்டிதை பா. பரமேசுவரியார் அவர்கள், புலவரவர்களுடைய அருமைத் திருமகனர் பண்டிதர் இளமுருகனர்தம் வாழ்க்கைத் துணைவியாவர்.

இப்பாடல்களுக்குப் பதவுரை மாத்திரமன்றித் திட்ப நுட்பஞ் செறிந்த விருத்தி யுரையினையும் இவர்கள் எழுதி இந்நூலையுந் தமிழ் மொழியையும் வளம் படுத்தியுள்ளார். நூற்பொருளைப் பல நூற்சான்றுகளைக் காட்டித் தெளிவாக விளக்கியமையும் புராண வரலாறுகளையும் பிற கதைகளையும் விரித்துரைத்தமையும் இந்நூலைப் பயில்வார் பரந்த அறிவினைப்

பெறுதற்கு வாய்ப்பளிக்கின்றன. முருகனுடைய திருமண நிகழ்ச்சிகளும் போர் நிகழ்ச்சிகளும் உண்மைநூற் பொருளை உணர்த்தும் முறைமை புலவரவர்கள் கருத்தோடமைய உரையில் விளக்கப்பட்டுளது. ஆங்காங்கே காட்டப்பட்டுள்ள சொற் பொருணயங்கள் கற்போருள்ளத்திற் கழிபேருவகை அளிக்கத் தக்கன. பூப்பயிலும் பூங்கரம் (பக். 23) மாப்பிறவி (ப-க் 24) மாமூலவேர் (ப-க் 51) மழமுதிருஞ்சோல் (ப-க் 93) முதலிய தொடர்களுக்கு எழுதிய நயப்புரைகள் நச்சினார்க்கினியர், பேராசிரியர், முதலிய பழைய உரையாசிரியர்களுடைய உரைத்திறனை நினைவூட்டுகின்றன.

இச் சிலேடை வெண்பாப் போன்ற நூல்களைப் பயிலுதல் மொழித்திறத்தின் முட்டறுத்தற்கு மிக வாய்ப்பானது. இக்காலத்திலே இந்நூல் போன்ற சிலவற்றிலாகுதல் பயிற்சி இன்மையாலேயே தமிழறிஞரென்று கூறிக்கொள்வோரும் பத்திரிகையாளர் பலரும் அணுகுண்டு, ஒழிந்தான், பால்க்கடல், இன்னுள் போன்ற பிழைகள் மலிய எழுதுகிறார்கள்.

பொதுக் கல்வித் தகுதி வகுப்பு, பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பு முதலிய உயர் வகுப்புகளிலே படிக்கும் மாணவர்கள் இந்நூலிலுள்ள செய்யுள்களையும், அவற்றின் வளமிகுந்த உரையையும் நன்கு படிப்பார்களாயின், பிழையின்றித் தெளிவான உரைநடை எழுதும் ஆற்றலைப் பெறுவர். இந்நூலைத் தமது பாடசாலைகளிற் பயன்படுத்துதல் தமிழாசிரியர்களின் கடனாகும். இந்நூலைச் சிறப்பாக வெளியிட்ட நண்பர்களுக்கு என் நன்றி.

—கா. பொ. இரத்தினம்.

★

# ஆசிரியர் வரலாறு

யாழ்ப்பாணத்து வலிகாமம் மேற்குப் பகுதியிற் றிகழ்வது மணிப்பாய்க் கோவிற்பற்று. அதனைச் சார்ந்தது நவாலியூர். அது மருதமும் நெய்தலுங் கலந்த நிலப்பகுதியை யுடையது. பல்லாண்டுகளாகக் கல்விச் சிறப்பிலுஞ் செல்வப் பெருக்கிலும் மேம்பட்டு விளங்கி வருகின்றது.

நவாலியூரிலே, இற்றைக்கு ஏறத்தாழ நானூறு ஆண்டுகளுக்கு முன்னே, வன்னியசேகரமுதலியார் என்பவர் ஒருவர் குடியேறிச் சீருஞ் சிறப்பும் பொருந்த வாழ்ந்தார். அவருடைய ஒன்பதாவது தலைமுறையிலே அருமையினூர் என்று வழங்கும் ஆறுமுகம்பிள்ளை யென்பவர் பிறந்தார். அவர் ஒரு சிறந்த தமிழறிஞர். கந்தபுராணத்துக்கும், பெரிய புராணத்துக்கும் சிறந்த உரை சொல்லுவதில் வல்லவர். அவருக்குக் கதிர்காமர் என்னும் புதல்வர் இருந்தார். அவரை அருமையினூர் கதிர்காமர் என்று ஊரார் வழங்குவர். அவரும் ஒரு சிறந்த தமிழறிஞர்.

அருமையினூர் கதிர்காமர் இலக்குமிப்பிள்ளை யென்னும் பெண்ணை மணஞ் செய்தார். இலக்குமிப்பிள்ளை, கோண்டாவிலடிச் சிங்கைநாயக முதலியின் வழித்தோன்றலாகிய விஞசித்தம்பிக்கு மகள். இலக்குமிப்பிள்ளை கடவுள் பத்தியிலும் அடியார் பத்தியிலுஞ் சிறந்து விளங்கினூர். பசித்தோர்க்கு இன்னடிசில் கொடுத்துப் பேணி மகிழ்வதே அவரின் வாழ்க்கைக் குறிக்கோள். மக்கட் பேறு இல்லாத குறை அவர்கள் இருவரையும் நாடோறும் வருத்துவ தாயிற்று. நவாலியூரிலுள்ள அட்டகிரி

முருகப்பெருமானை நோக்கிப் பல்லாண்டு நோன்பி ருந்தனர். அதன் பயனாகக் கி. பி. 1878-ஆம் ஆண் டுக்குச் சயமான விக்கிரம ஆண்டு வைகாசித் திங் கள் இருபத்தைந்தாம் நாள் சனிக்கிழமை முற் பகலிற் பரணி நாளிற் புலவர் பிறந்தார்.

பேருவகை கொண்ட பெற்றோர் முருகப்பெ ருமானுக்குச் சிறப்பு வகையான பூசைகள் செய் வித்தனர். பருத்தித்துறையி லிருந்த ஆறுமுகப் பெரியார் என்னும் சோதிடரிடஞ் சாதகம் எழுதுவித் தார். ஆறுமுகப் பெரியார் கோள்களின் நிலை களைத் திட்பமாகக் கணித்து, " இச்சாதகன் இணை யற்ற பெரும் புலவனாக விளங்குவான் ", என்று கூறினார்.

சோமசுந்தரப் புலவருக்கு ஐந்தாண்டு வந்ததும், மானிப்பாயி லிருக்கும் அருணாசலப் புலவரைக் கொண்டு ஏடு தொடக்குவித்தனர். அருணாசலப் புலவரிடம் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், விரும் பித்தொழுவார் முதலிய நீதிநூல்களைக் கற்றுக் கொண்ட பின்னர், எண்கணிதமும் நிகண்டுங் கற் றனர். புலவருடைய கல்வித் திறமையைக் கண்ட ஆசிரியர், குமரேசர் சதகம், தண்டலையார் சதகம் முதலிய சிறு நூல்களை ஆசையுடன் கற்பித்த னர். தமிழை மிக விரும்பிக் கற்று வருதலையறிந்து, புலவர் ஆங்கிலங் கற்பதும் எளிதாகுமென்று கருதி மானிப்பாயி லிருந்த மாரிமுத்து உபாத்தியா யர் வைத்து நடாத்திய ஆங்கில பாடசாலையிற் சேர்த்து விட்டனர்.

ஐந்தாண்டுகள் ஆங்கிலங் கற்று எட்டாம் வகுப் பிற் சித்தியடைந்தனர். மேலும் ஆங்கிலங் கற்க

விரும்பி, நவாலியூர் இராமலிங்க வுபாத்தியாயரிடம் ஆசிரியப் புகுமுகத் தேர்வு வரையுங் கற்றனர். புலவரின் பெரியதந்தை முறையினரான மாதவர் வேலாயுதரின் மகனே இராமலிங்க வுபாத்தியாயர், இவர்களிடம் சிவஞானசித்தியார், இராமாயணம். கந்தபுராணம் முதலிய நூல்களைப் பாடங் கேட்டனர்.

இராமலிங்க வுபாத்தியாயரின் மகன் வைத்திலிங்கமும்* புலவரும் இணைபிரியா நண்பர். இருவரும் நெடுங்காலமாகத் தமிழ் நூல்களைக் கற்று நவாலியூரிலே சைவப்பிரசங்கமும் புராணபடலமும் நடத்தி வந்தனர். புலவர் பதினைந்தாவது வயதிற் பாட்டுப் பாடத் தொடங்கிப் பதினெட்டிற் சிறந்த தமிழ்ப்பாடல்கள் யாக்கும் வன்மையைப் பெற்றுவிட்டார். இராமலிங்க வுபாத்தியாயர் அதனைக்கண்டு புலவரைப் பலமுகமாக வூக்கப்படுத்தி வந்தனர்.

அட்டகிரிப் பதிகம், அட்டகிரிமுருகன் திருவூஞ்சல், சாவித்திரி கதை, பசுவின் கதை என்பன புலவர் இளம்பிராயத்திற் செய்த நூல்கள்.

ஆசிரியத் தொழிலே தமக்குப் பெரிதும் இணக்கமான தென்று கண்ட புலவர், வட்டுக்கோட்டையிலுள்ள ஆசிரியர் சின்னத்துரை யென்பவரை யடுத்துச் சித்தங்கேணியைச் சார்ந்த கலட்டி யென்னும் இடத்திலே ஓர் ஆங்கில பாடசாலையைத் தொடங்கி இருவருமாக நடத்தி வந்தனர். அங்கே புலவர் ஆங்கிலம், தமிழ், இதிகாசம் என்னும் பாடங்களைச் செம்மையாகக் கற்

*மானிப்பாய்க் கிராமச்சங்கத்தலைவர் வை. மகேசன் அவர்களின் தந்தை.

பித்து வந்தனர். பெற்றோரும் பிள்ளைகளும் வித்தியாதரிசகரும் புலவரிடம் பெருமதிப்புக் கொண்டனர். வன்கயிலன்பேர்க்கு, கிறிக்கன்பேர்க்கு, வண்டவால் செல்லப்பா, முதலாய வித்தியாதரிசகர் பலரும், மக்கறே, பேறைரு, முதலாய வித்தியாதிபரும் புலவருடைய கற்பிக்குந் திறமையை அவ்வக் காலங்களிற் பலபடப் பாராட்டி வந்தனர். ஒருமுறை வன்கயிலன்பேர்க்கு என்பவர், "கலட்டியில் ஓர் உயர்ந்த அழகிய ஆசிரியர் கற்பிக்கின்றார்; நீங்கள் அவரிடஞ் சென்று இதிகாசம் கற்பிக்கும் முறையையும் ஆங்கில இலக்கணங் கற்பிக்கும் முறையையும் அறிந்துகோள்ளுங்கள்" என்று ஓர் ஆசிரிய சங்கத்திற் கூறியதாகப் புலவருடைய பழைய மாணவரிற் பலர் இப்பொழுதுஞ் சொல்லி மகிழ்வர்.

புலவருக்கு இருபது வயதிலே குருவருட்பேறு கிடைத்தது. தென்னிந்தியாவிலுள்ள பெங்களூரிற் பிறந்த சுப்பிரமணிய சாமியார் என்பவர் நவாலியில் ஓரன்பர் வீட்டில் வந்திருப்பதை யறிந்து, அவரைக் காணச் சென்றார். சுப்பிரமணிய சாமியார் மெய்யுணர்ந்து அவாவறுத்து விளங்கிய ஓர் யோகியர். சாமியார் புலவரை நன்கு மதித்துச் 'சோமசுந்தரம்! உனக்கு என்ன வேண்டும்', என்று கேட்டார். புலவர், 'வேண்டுவதறிவதும் வேண்டாததறிவதும் சாமிக்கே தெரியும்,' என்றார். சாமியார் சிரித்துக்கொண்டு, "முருகப்பெருமானை வழிபட்டு நீ வேண்டியவெல்லாம் பெறுக", என்று ஓர் யந்திர அருட்குறியைக் கொடுத்துப் புலவர் வீட்டிலே சில நாளிருந்து தம்மூர்க்குப் போயினர்.

அந்த அருட்குறியைப் புலவர் வைத்து வழி பாடு செய்து வருவாராயினர். அதன் பெருமை யாற் புலவருக்கு எல்லாக் கல்வியும் சீருஞ் சிறப் பும் நாடோறும் வளர்ந்து வந்தன. நூல்கள் செய் யும் விருப்பமும் உண்டாயிற்று. **மருத்துவம், சோதிடம், கைக்குறிநூல் வானநூல்** முதலிய கலை களையுங் கற்றுக் கொண்டார். அப்பொழுது புல வருக்கு இருபத்தெட்டு வயதாயிற்று. புலவருக் குப் பெற்றோர் திருமணஞ் செய்து வைக்க விரும் பினர். அதனைப் புலவர் எட்டுணையும் விரும்பாது நிற்றலை யறிந்து பெற்றோர்தங்குல குருவாகிய சுப் பிரமணிய சுவாமிமேற் பத்தி செய்து முறையிட்ட னர். சில நாட்செல்லப் பெங்களூரிலிருந்து சாமியா ரின் கடிதம் ஒன்று வந்தது. அதிலே, "நீ உன் பெற்றோர் விருப்பத்தின்படி திருமணத்தை நிறை வேற்று", என்று காணப்பட்டது. புலவர் மணஞ் செய்தற்கு ஒருப்பட்டார்.

**சங்குவேலி** யென்னுங் கிராமத்திலே எல்லா வகைச் சிறப்போடும் வாழ்ந்து வந்த புலவரின் தாய் மாமனூர் **வேலுப்பிள்ளையின்** மூத்த மகளாகிய **சின்னம்மையை** மணஞ் செய்து இல்லறத்தை நடத்தி வந்தனர். புலவருக்கு வறுமையும் பிணி யும் வந்து பெரிதும் வருத்தின. வருத்தினுலும் சிறி துங் கலங்காது நாமகளிலும் முருகப்பெருமானிலும் பத்தி வைராக்கியங் கொண்டு, தமக்குற்ற வறுமை யையும் பிணிகளையும் நீக்கி, நிலையான பேரின்பப் பெருவாழ்வு பெறுதற்கு வழிகாட்ட வேண்டுமென்று குறையிரந்து பல்வேறு பிரபந்தங்களைப் பாடி வரு வாராயினர். ஆண்டுதோறும் நவராத்திரி விரதம்

பூண்டு, அந்நாளிலே நாமகள் மேலும் முருகக்கடவுள்மேலும் புதிய புதிய வழிபாட்டு நூல்களைப் பாடிவந்தனர். ஏறத்தாழ இரண்டாயிரத்தைஞ்ஞூறு செய்யுள்கள் அத் தெய்வங்கள் மேலனவாகப் பாடப்பட்டவை.

புலவருடைய குலதெய்வம் முருகக்கடவுள். நொய்வுங் கண்ணோயும் சன்னியும் முதலாய பிணிகளால் வருந்திய காலங்களிலும், வறுமையால் வாடி வதங்கிய காலங்களிலும், தம் முறைப்பாட்டினை முருகக்கடவுளுக்கும் நாமகளுக்கும் சொல்லித் தமது தீவினைப் பயன்களைக் கழிக்க வேண்டிப் பல்வேறு பாடல்களைப் பாடிவந்தனர். ஈழநாட்டிலுள்ள முருகன் திருப்பதிகள் எல்லாவற்றுக்கும் பாடல் செய்திருக்கின்றார். பெரும்பாலானவை பதிகமும் ஊஞ்சலுமாகவே யமைந்தவை. நவாலியிலுள்ள அட்டகிரிப்பதியி லெழுந்தருளியிருக்கும் முருகக்கடவுண் மேலதாக அட்டகிரிப் பதிகமும், அட்டகிரிக்கலம்பகமும், அட்டகிரி வெண்பாவும், பிள்ளைத்தமிழும் பாடினார்.

நல்லை முருகன்மேலதாகத் திருப்புகழும் அந்தாதியும் பதிகமும் பாடினார். கதிரை வேலவர் மேலதாகப் பதிகமும் சிலேடை வெண்பாவும் பாடினார். கந்தவனம் என்னும் பதியிற் கோயில் கொண்ட முருகன்மேற் பதிகமும் திருப்பள்ளியெழுச்சியும் நான்மணிமாலையும் பாடினார்.

இப் பாடல்களை அவ்வப்போது எழுதித் தென்னிந்தியச் செய்தித் தாள்களிலும் இலங்கைச் செய்தித் தாள்களிலும் வெளியிட்டும், நூல் வடிவிலே

பலவற்றைப் பதிப்பித்தும் வந்தவர், புலவர் அவர்களின் அரும்பெறற்றனைவர் திரு. க. வேலுப்பிள்ளை அவர்களாவர். பிள்ளையவர்கள், புலவருக்கு ஊக்கமளித்து (i) உயிரிளங்குமரன் நாடகம் (ii) இலங்கை வளம். (iii) தால விலாசம். (iv) கந்தபுராண வுண்மை நூற் பொருள் முதலிய நூல்களை அவ்வப்போது எழுதுவித்தார்கள்.

இங்ஙனம் தமிழ் மொழியைச் செழிப்புறச் செய்த புலவருடைய கீர்த்தி இலங்கையிலும் தென்னிந்தியாவிலும் பரந்தது. சுவாமி வேதாசலம் என்னும் மறைமலை யடிகள், பண்டிதமணி கதிரேசச் செட்டியார், பல்கலைப் புலவர், கா. சுப்பிரமணிய பிள்ளை, சுவாமி விபுலானந்தர், பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை, பண்டிதமணி சு. வெண்ணெய்க் கண்ணனார், முதலியோர் புலவருடைய கவித்துவத் திறமையைப் பாராட்டி வந்தனர். 1927-ஆம் ஆண்டிலே புலவருக்குப் பொன்னாடை போர்த்துப் பதக்கமும் பொற்கிழியும் பரிசளித்துப் புலவர்ப் பட்டமும் நல்கினர். ஏறத்தாழ, இரண்டாயிரத்தைந்நூறு மாணாக்கரைக் கற்பித்து, நாற்பது ஆண்டுகள் வரையும் ஒரே கலாசாலையில் ஆசிரியரா யிருந்து அருந்தொண்டாற்றி 1938-ஆம் ஆண்டில் இளைப்பாறினர்.

இளைப்பாறிய காலத்திற் புலவர் தமது இல்லத்திலே மாணவர்க்குச் சைவசித்தாந்த வகுப்பும் இலக்கிய வகுப்பும் வைத்து நடத்திக் கல்வியைப் பரப்பி வந்தனர். மாணவரிடத்திலே ஒரு சிறிதேனும் வேதனம் பெறாது, உணவு முதலிய வசதிகள் செய்து தமிழ் மொழிக் கல்வியைப் பரப்பி

வந்தமை புலவரின் சான்றாண்மைக்கு ஓரறிகுறி யாகும். புலவரிடம் பாடங்கேட்ட மாணவருட் பலர் யாழ்ப்பாணத்து ஆரிய திராவிட சங்கமும் மதுரைத் தமிழ்ச் சங்கமும் நடாத்திவரும் பண்டித தேர்விற் சித்தியடைந்து தமிழை வளர்த்து வருகின்றனர்.

கலித்தொகை, திருக்குறள், திருக்கோவை யார், சிவஞானபோதம், கந்தபுராணம் என்னும் நூல்களை மிகுந்த சுவையுடன் கற்பிப்பார். செய் யுள்களில் உள்ள அழகுகளை யெல்லாம் திட்ப நுட்பமாக வெடுத்து ஆராய்ந்து நகைச்சுவை ததும்பக் கூறி மகிழச் செய்வர். புலவர், தமது எழு பத்தைந்தாவது வயதிலே கி. பி. 1953-ஆம் ஆண் டிலே இவ்வுலக வாழ்வை நீத்து இறைவன் திருவடி களை யடைந்தார். புலவர் எழுதிய பாடல்களின் தொகை ஏறத்தாழப் பத்தாயிரம் என்பர். அவைகள் புலவரின் புகழுடம்பைப் பேணி வளர்க்கின்றன.

## சிவபதமெய்திய நாள்

ஆண்டு விசயத்தில் ஆனியிரு பத்தாறிற்
பூண்டபுனர் பூசம் புகர்நாளின்—மீண்டுகதிர்
நண்ணுமொரு வைகறையில் நற்றந்தை சென்றடைந்தான்
கண்ணுதலா லின்பக் கழல்

ஐந்து புலனும் அருண்முருகன் றாளேறச்
சிந்தையொரு சாந்தத் திடமேறச்—செந்தமிழின்
மந்திரங்கள் காதேற வாழ்க்கை குறிக்கொண்டு
சுந்தரனு ருற்றார் சுகம்

—சோமசுந்தரக் குருமணிமாலை

★

உ

திருச்சிற்றம்பலம்

# கதிரைச் சிலேடை வெண்பா.

காப்பு

## விநாயகர்

கானுயிர்பூஞ் சோலைக் கதிரைச்சி லேடைவெண்பா
நானுரைக்கச் செஞ்சொ னயந்தருமே—வானவர்க்கு
முன்ஞனை மாமுகவன் முன்னருளு மைந்துகரத்
தன்ஞனை மாமுகவன் ருள்.

**இதன் பொருள்:—**

*வானவர்க்கு முன்ஞன்—தேவர்களுக்கு முதல்வனும், ஐம்மாமுகவன்—ஐந்து பெருமைமிக்க திருமுகங்களையுடையவனும் ஆகிய சிவபெருமான், முன் அருளும்—முதலிற் ரேற்றுவித்தருளிய, ஐந்து கரத்தன்—ஐந்து திருக்கரங்களை யுடையவனும், ஆனை மா முகவன்—யானையினது பெரியமுகத்தை யுடையவனும், ஆகிய விநாயகப் பெருமானது, தாள்—திருவடிகள், கான் உயிர் பூஞ்சோலை—மணங்கமழும் பூஞ்சோலைகள் சூழ்ந்த, கதிரைச் சிலேடை வெண்பா—கதிரைமலை முருகக்கடவுளின் சிலேடைவெண்பா என்னும் நூலை, நான் உரைக்க—அடியேன் சொல்ல, செஞ்சொல் நயம் தரும்—சீரிய சொற்களையும் அவற்ருலுணர்த்தப் படுஞ் சிறந்த பொருணயத்தையுந் தந்தருளும் என்றவாறு.*

கதிரைமலை இலங்கையின் தென்பகுதியில் உள்ள முருகன் திருப்பதி. அது மிகுந்த பழமையுந் தெய்வப் புதுமையுஞ் சான்றது. அருட்சான்றோராற் பாடப்பட்ட பெருமை வாய்ந்தது. அதனைக் கதிர்காமமலை யென்றும், கதிரை யென்றும், தேன்கதிரை யென்றும் வழங்குப. கதிர் என்பது ஒளி; ஐ யென்பது வினை முதற்பொருள் விகுதி. ஒளியையுடைய தென்பது பொருள். ஞாயிறுந் திங்களுஞ் செந்தீயுமாகிய முச்சுடர்களின் ஒளிப்பிழம்பினைத் தன்பாலுடைமையால் இப்பெயர் பெற்றதென்ப. தக்கண கைலாய மான்மியமும் இவ்வாறே கூறும். இதுவன்றி அப்பெயர்க்கு வேறு காரணங் கூறுவாருமுளர். அவை பொருந்தா.

முருகப்பெருமான் சூரனையழித்து விண்ணவரைக் காக்கத் திருவுளங் கொண்டஞான்று, பூதகணங்களுடன் இம்மலையில் ஏமகூடம் என்னும் பாசறை சமைத்து வைகினரென்றும், போர் முடிந்த பின், விண்ணவர் இங்கே ஒளி மிக்கதொரு நகரையுங் கோயிலையும் அமைத்து முருகப்பெருமானை ஆண்டிருத்தி வழிபட்டு வருவாராயினரென்றும் நூல்கள் கூறும். இப்பொழுது காணப்படுங் கோயில் கி. பி. 1581-ஆம் ஆண்டளவில் அரசுபுரிந்த முதலாம் இராசசிங்கனாற் கட்டப்பட்டதென்பது சிலர் கொள்கை. வேறு சிலர் 1634-ஆம் ஆண்டளவில் அரசுபுரிந்த இரண்டாம் இராசசிங்கனாற் கட்டப்பட்டதென்பர். இக் கதிரைமலையைச் சூழ ஏழு மலைகளும் வேறு வேறு கோயில்களும் மெய்யடியார் வைகுந் திருமடங்களும் பிறவும் அமைந்துள்ளன.

இத்தகைச் சிறப்பு வாய்ந்த இத்திருப்பதியில் வீற்றிருக்கும் முருகக் கடவுள் மேலதாக நூல்செய்த

இந்நூலாசிரியர், "கானுயிர் பூஞ்சோலைக் கதிரை" என்று அடியெடுத்து அதனைத் தொடங்குகின்றார். கான் என்பது மணம். உயிர்த்தலென்பது கமழ்தல். எனவே மணங் கமழும் பூக்கள் மலிந்த சோலைகள் சூழ்ந்த கதிரைமலை என்பது இதன் திரண்ட பொருளாம்.

இனி, இதன் நுண்பொருளையுங் கூறுதும்:— ஆசிரியர் முருகனுக்கும் பூவுக்கும் நெருங்கிய ஒப்புமைத் தொடர்புகண்டு வியந்து மகிழ்ந்தவர். அவர் "சிறுவர் செந்தமிழ்" என்னுந் தந்நூலிற் 'பூ' என்னும் பாடத்திற் பூவின் நறுமணமும் முருகு; அழகும் முருகு; கட்டிளமையும் முருகு; தேனின் இனிமையும் முருகு; எம்மை ஆளுடைய பன்னிரு தடந்தோட் புண்ணிய முதல்வனும் முருகன்; நறும்பூவில் அமைந்த மணமும் அழகும் இளமையும் இனிமையும் முருகனின் அருட்குணங்களையெல்லாம் உய்த்துணர வைக்கின்றன என்னுந் தமது நுணுகிய ஆராய்ச்சியை மிகத்தெளிவாக விளக்கியுள்ளார். அப்பாடத்தைப் படித்து முருகனுக்கும் பூவுக்குமுள்ள ஒப்புமைத் தொடர்புகளை அறிக.

இனி, இப்பதியின் வழிபாட்டு முறையை நோக்குமிடத்தும், பூவின் நறுமணம் முதலிய தன்மைகள் அதன் அரும்பிலே மறைந்திருத்தல்போல, முருகப்பெருமானின் அருட்குணங்களுந் திரைமறைவில் வைத்து வழிபாடு செய்யப்படும் அருட்குறியிலமையக் காணலாம். அரும்பிலே மறைந்து கிடக்கும் நறுமணம் செவ்வி தலைப்படும்போது வெளிப்பட்டு அணிவார்க்கு இன்பம் பயத்தல்போல, அருட்குறியில் மறைந்துள்ள முருகனின் கருணை ஆண்டு

வழிபடும் மெய்த்தொண்டர்களின் செவ்விய உள்ளங்களிலே வெளிப்பட்டு அருள்செய்யுமென்க.

இனி, ஞாயிற்றின் வெம்மையால் உடம்பு காய்ந்து உணர்வழிந்து வெதும்பி வாடும் வழிப்போக்கர்க்கு இடையிலே தண்மைமிகுந்த பூஞ்சோலை வாய்க்குமாயின் அவர்களின் சோர்வு நீங்குமன்றோ! அதுபோலவே நோயும் வறுமையுங் கவலையும் இடையீடின்றி வாட்டுதலினுல், வாழ்க்கையிற் றழைவு பெருது அல்லற்படுவோரும், பிறவியெடுத்தெடுத்து உழன்று வருந்துதற்கு ஆற்ருத தொண்டர்களும் முருகனின் அருட்சோலைத் தண்ணிழலில் வைகுவாராயின் ஆன்ம விளக்கமும் பெரும் பேரின்பமும் எய்துவரென்க.

இவ்வாறு முருகனின் தெய்வ இலக்கணங்களையும் அழகையும் இளமையையும் அருட் குணங்களையும், கதிர்காம வழிபாட்டியல்பையும், திருவருளின் தண்மையையும் இவைபோன்ற பல உண்மைகளையும் அக் கான் உயிர் பூஞ்சோலை காட்டுகின்றது. உள்ளே யிருக்கும் முருகனைப் புறத்தே காட்டும் பளிங்குபோல இச்சோலை கதிரைமலையைச் சூழ்ந்திருக்கின்றது. இவ்வுண்மைகள் புலனுமாறு "**கான் உயிர் பூஞ்சோலைக் கதிரை**" என அடியீடு செய்தாரென்க.

**கதிரைச் சிலேடை வெண்பா** என்பது இந்நூற்கு ஆசிரியர் இட்டபெயர். முருகப்பெருமான் தம்மடியார்க்கெளியராய் அருள் செய்யுமாறு வீற்றிருக்குங்கதிரைப்பதியைச் சிறப்பித்துப் பாடிய சிலேடை வெண்பாக்களா லாகிய நூல் என்பது பொருள்.

பாக்களை அழகுசெய்யும் அணிகள் பல; அவற்றுட் சிலேடையணி இந்நூலைப் பெரிதும் அழகு செய்கின்றது. இந்நூல் நூறு சிலேடை வெண்பாக்களைக் கொண்டது.

சிலேடையணியாவது உச்சரித்தற்கண் ஒருவடிவாக நின்ற சொற்றொடர் பல பொருளுடையதாய் வருவது. இந்நூலின் எல்லா வெண்பாக்களிலும் இரண்டாமடி சிலேடையாக நின்று முதலாமடியிற் கூறப்படும் இரு தொடர்களோடுந் தனித்தனி சேர்ந்து இருபொருள் தருகின்றது. ஒரு சிலவிடங்களில் மூன்று பொருள் தழுவியும் நிற்கின்றது.

ஆசிரியர் கி. பி. 1918 ஆம் ஆண்டிலே கதிர்காம யாத்திரை செய்தார். இஃது அவரெழுதிய கதிர்காம யாத்திரையிற்

**"பிங்கள வாண்டு பீடுசே ராடித்**
**திங்க ளகவையிற் றேதிமற் றென்பான்**
**மங்கல வாரம் வழிக்கொடு பெயர்ந்து"**

எனவரும் அடிகளிற் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆசிரியர் தம்மிளைய துணைவர் திரு. க. சரவணமுத்துப் பண்டிதர் அவர்களுக்கு உண்டாய கண்ணோய் தீருமாறு கதிர்காம வேலவர் பதிகத்தைக் கி. பி.1923-ஆம் ஆண்டிற் பாடியருளினார். துணைவர், அப்பதிகத்தை மெய்யன்புடன் ஓதி நோய் நீங்கப் பெற்றார். பின்னர் அந்நோய் ஆசிரியரைத் தொடர்ந்து வருத்தியது. அப்போது ஆசிரியர் இக் கதிரைச் சிலேடை வெண்பாவைப் பாடித் தமக்குற்ற நோயும் நீங்கப்பெற்றார். இது நூலுரைத்த வரலாறு.

செஞ்சோல்—சீரிய சொல். சீரிய சொன்னயமும் விழுமிய பொருணயமும் சிலேடையலங்காரச் சிறப்பும் ஒருங்கமையப் பாடுதலை விரும்பி இக்காப்புச் செய்யுளால் விநாயக வணக்கஞ் செய்கின்றார். ஏகாரந் தேற்றங் குறித்தது.

வானவர்— வானுலகத்தவர். வான்—வெளி. இம் மண்ணுலகிலுள்ள மன்னுயிர்கள் நல்வினை தீவினை என்னும் இரண்டையுஞ் செய்கின்றன. நல்வினையை மிகுதியாக ஈட்டுவன வானுலகிற் றேவராய்ப் பிறந்து நல்வினைப் பயனை நுகருகின்றன. தேவர்களின் உருவம் மக்கள் கண்ணிற்குப் புலனாகாது. அவர்கள் கால்கள் நிலத்திற் பொருந்தா. கண்கள் இமையா. உடம்பு நுண்மையானது. அதனால் நினைத்த இடங்களுக்கு நொடிப்பொழுதில் விரைந்து செல்வர். முக்கால நிகழ்ச்சிகளையும் அறிபவராய்த் தெய்வத்தன்மை யுடையவராயிருப்பர். மக்கள் அவர்களைக் கடவுளரென்று வழிபடுவர். இத்துணைச் சிறப்புடையவராயினும் மும்மலப்பிணிப்புடையவராதலின் அப்பிணிப்பு நீங்குதற் பொருட்டும் முத்தி நிலை எய்துதற் பொருட்டும் முழுமுதலாகிய சிவபெருமானை இடையறாது சிந்திப்பர். சிவபெருமானின் அருள்வடிவங்களைக் காணும் பேறுடைய அவர்கள் எஞ்ஞான்றுஞ் சிவபெருமானைச் சூழ்ந்திருந்து வழிபடுவர். அத்தேவர் கூட்டத்திற்கு முதல்வனயிருந்து அருளுதலினலே சிவபெருமானை "வானவர்க்கு முன்னன்" என்றார்.

இறைவன் தன்னை வழிபடும் அடியவர்களை ஆட்கொள்ளும் பொருட்டுப் பலவேறு உருவங்களைக் கொள்ளு மியல்பினன்.

"வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நூறுநூ றுயிரம் இயல்பின தாகி
ஏறுடை ஈசனிப் புவனியை யுய்யக்
கூறுடை மங்கையுந் தானும்வந் தருளி"

என்பது திருவாசகம். இவ்வாறு கொள்ளப்படுந் திருமேனிகளிற் சதாசிவ வடிவம் ஐந்து திருமுகங்களுடன் கூடியது. ஈசானம் தற்புருடம் அகோரம் வாமதேவம் சத்தியோசாதம் என்பன அவ்வடிவிலமைந்த ஐம்முகங்களாம். இவற்றுள் ஈசானம் சிறு குழந்தைகளின் முகம்போல்வதாய்த் தூயபளிங்கின் ஒளியுடையதாய் வடகிழக்கை நோக்கி உச்சிமேல் இருப்பது. இதன்கீழ் இளைஞர்க்குரிய முகம்போல்வதாய்க் கோங்கம் பூவின் நிறத்துடன் கிழக்கு நோக்கியிருப்பது தற்புருடம். முதியோர் முகம்போற் றுடியும் எயிறுந்தோன்ற அச்சந்தருங் கரிய நிறத்துடன் வலத்தோண்மேல் தெற்கு நோக்கியிருப்பது அகோரம். மாதர் முகம்போல் வெட்சிப் பூவின் நிறந்தோன்ற இடத்தோண்மேல் விளங்குவது வாமதேவம். பிடரிமேல் நின்று அரசர் முகம் போன்று பால்போற்றிகழுவது சத்தியோசாதம். 'ஐம்மாமுகவன்' எனச் சதாசிவ வடிவத்தையும் ஆசிரியர் வழிபாடு செய்துகொள்கின்றுர்.

சிவனுக்கு, விநாயகக்கடவுள் வீரபத்திரக்கடவுள் வைரவக்கடவுள் முருகக்கடவுள் என்னும் நால்வரும் மைந்தர்கள். மைந்தர்கள் என்பது உபசார வழக்கு. அவை மெய்யடியார்களுக்கு அருளுதல் கருதி எடுத்த வேறு வேறு வடிவங்களாமென்க.

தேவர்களை வருத்திக் கொடுஞ் செயல்கள் புரிந்த கயமுகன் என்னும் அசுரனை அழித்து

உலகிற்கு அருள்புரிதற் பொருட்டு இறைவன் விநாயகத் திருமேனி கொண்டருளினர். இத்திருமேனி யானை முகமும் ஐந்து கரமும் மூன்று கண்ணும் பேழைவயிறும் இரண்டு அடிகளும் உடையது. இறைவன் விந்துநாத வடிவுடைய ஓங்காரத்தை ஆணும் பெண்ணுமாகிய இருவேறு யானை வடிவு கொண்டு கலக்கச் செய்து அதிலிருந்து விநாயகத் திருவுருவைக் காட்டியருளினரென்பர்.

**தாள்**—திருவடிகள். இந்நூல் இடையூறு தீர்ந்து இனிது முடியுமாறு விநாயகப் பெருமானின் திருவடிகளை வணங்குகின்றார்.

**ஆனைமாமுகவன்** என்ற தொடர் மூன்றாமடியிற் போலவே நான்காமடியிலும் வந்தது **மடக்கணி** யாகும். இந்நூன்முழுவதும் மூன்றாம் நான்காம் அடிகளில் மடக்கணி அமைந்துளது. மடக்கு—மடங்கி வருதலுடையது.

ஆனைமுகன்றாள் கதிரைச்சிலேடை வெண்பாவை உரைக்கச் செஞ்சொல் நயந்தரும் என்று கூட்டிப் பொருளுரைக்க.

—★—

## மாணிக்கப் பிள்ளையார்.

தேவரு மேத்துங் கதிரைச்சி லேடைவெண்பா
நாவரு மேத்தி நனிபணிந்தாற் — பூவருளு
மாதங்கம் பாதி வளர்வரையீ மாணிக்க
மாதங்கம் பாத மலர்.

**இதன் பொருள்:—**

பூ அருளும் மாது — இப்பூவுலகை ஈன்றருளிய உமையம்மையார், அங்கம் பாதி வளர்—தமது திருவுருவின் இடப்பாகமாகிய பாதியிடத்திற் பொருந்தப் பெற்ற, வரை—பவளவரைபோலுஞ் சிவபெருமான், ஈ மாணிக்க மாதங்கம் — தோற்றுவித் தருளிய மாணிக்கப் பிள்ளையாரது, பாதமலர் ஏத்தி நனி பணிந்தால் — திருவடித் தாமரைகளைப் போற்றி செய்து மிகுதியாக வழிபட்டால், தேவரும் ஏத்துங் கதிரை — தேவர்களும் வந்து வழிபட்டுச் செல்லுங் கதிர்காமக் கடவுளது, சிலேடை வெண்பா நாவரும் — சிலேடை வெண்பாக்கள் நாவின்கண்ணே தாமாக வந்து அமையும் என்றவாறு.

தேவர்கள் தமது குலப்பகைவராகிய சூரன் முதலாய அசுரரை வேரறப்பொருது கொலைத்துத் தம்மை ஆட்கொண்ட முருகப்பெருமானைக் கதிரை மலையிற் கோயிலுந் தீர்த்தமும் அமைத்து வழிபட்டார்களென்பது முற்கூறினும். அது போரினுலுண்டான மாசகலவுந் தமது அளவிலடங்காத பெருமகிழ்வை இனிதே நுகரவும் நன்றியுடைமையைப் புலப்படுத்தவும் புரிந்த வழிபாடாகும். அதுவன்றி, அக்கால முதலாக அவர்கள் நாள்தோறுந் திரள் திரளாக வந்து கதிரைமலையை வழிபட்டு

வருவாராயினர் என்பது ஈண்டுத் 'தேவருமேத்தும்' என்றதனாற் பெறப்படும். உம்மை சிறப்பும்மை.

இந்நூலுக்கு வேண்டிய சொல்லும் பொருளும் அணியும் ஆகிய சிறப்புக்களை மேலே வேண்டிப் பெற்றுக்கொண்ட ஆசிரியர் இதனாலே அவற்றை இனிதே தொடுக்கும் யாப்பையும் பெற்றுக்கொள் கின்றார். 'அவனருளாலே அவன்றாள்' வணங்குபவ ராதலின் தமது நாவன்மையால் நூல்செய்து மென்று கருதாது 'நாவரும்' என்று அவனருளையே கருதுகின்றார். நனி—மிகுதி மாதங்கம்—யானை.

யானை வரைபோலுந் தோற்றமுடையது. எனவே வரைபோலுயர்ந்து விளங்கும் விநாயகப் பெருமானைத் தோற்றுவிக்குஞ் சிவபெருமானும் அத்தோற்ற முடையராதல் வேண்டும், என்று கருதிப்போலுஞ் சிவபெருமானை 'வரை' என்றார். வரையென்றது பவளவரையை; 'பவளமால் வரையி னிலவெறிப் பதுபோற் பரந்த நீற்றழகு பச்சுடம்பிற் றிவள மாதுடன் நின்றாடிய பரமன்' திருவடிகளையுங் காப்பாக நினைந்து கொள்கின்றமை அறிக. அம்மையார் மரகதவரைபோலப் பாதியிடத்தில் வளர்ந்திருந் தமை 'வளர்' என்றதனால் அறியப்படும். 'மாதங்கம்' என்றது மடக்கணி.

கதிரை மலையில் எழுந்தருளிய மாணிக்கப்பிள்ளை யார் வணக்கம் இதனாலே சிறப்புவகையாற் கூறப் பட்டது. மாணிக்கம்—சிவப்புக்கல். மேலே விநாயகப் பெருமானின் உருவத் திருமேனியி லமர்ந்த முகத் தினதும் கரங்களினதும் உருவப்பொலிவை நோக்கி இதன்கண் நிறப்பொலிவையும் பெரிய தோற்றத் தையும் நோக்குகின்றாராதலின் 'மாணிக்கமாதங்கம்' என்றார்.

★

## நாமகள்

காசிப் பதிநேர் கதிரைச்சி லேடைவெண்பா
பேசிப் பரவப் பெரிதருளும்—ஆசைமுகன்
அம்புயத்தி ஞவி லகத்திற் சிரத்தில்வெள்ளை
அம்புயத்தில் வாழு மனம்.

## இதன் பொருள்:—

*ஆசைமுகன் அம்புயத்தில்—திசை முகனது அழகிய தோள்களிலும், நாவில்—அவனது நாவிலும், அகத்தில்—அவனது நெஞ்சிலும், சிரத்தில்—அடியேனது சிரத்திலும், வெள்ளை அம்புயத்தில்—வெண்டாமரை மலரிலும், வாழும் அனம்—கோயில் கொண்ட அன்னம்போலுங் கலைமகள், காசிப்பதி நேர் கதிரை—காசிப்பதியை ஒத்துள்ள கதிரைப் பதியினது, சிலேடைவெண்பா—சிலேடைவெண்பா என்னும் நூலை, பேசிப் பரவப் பெரிது அருளும்—சொல்லித் துதிக்க மிகுதியும் அருள் செய்யும் என்றவாறு.*

*வடநாட்டிற்* காசி *சிறந்த முத்தித்தலம்.* "காசியிலிறக்க முத்தி கமலையிற் பிறக்க முத்தி, தேசமர் தில்லை தன்னிற் றிருநடங்காண முத்தி" *என்பது ஆன்றோர் வாக்கு. காசிப்பதிக்கு நிகராகத் தென்னாடாகிய ஈழத்தில் விளங்குவது கதிர்காமம்.*

ஆசை—*திசை. நான்குதிசையையும் நோக்கிய நான்கு முகமுடையவனாதலின் பிரமன் ஆசை முகன் எனப்பட்டான். பிரமனின் நாவிலும் தோளிலும் நெஞ்சிலும் நாமகள் விற்றிருப்பாளென்பர். இவளது இருக்கை வெண்டாமரை மலர்.*

வெண்டாமரையில் வசிப்பது அன்னம். அது பாலையும் நீரையும் பிரித்துப் பாலையுண்டு நீரை நீக்குந் தன்மையுடையது. இத்தன்மை இதன் நாவிற்கோர் சிறப்பியல்பு.

புலவரும் நாமகளை 'அன்னம்' என்றார். வெள்ளை நிறமுடைமையுந் தாமரையிலுறைதலும் இவ்விரு மையிற் பொதுத்தன்மைகள். இதுவேயுமன்றி இக்கலையரசி புலவர் நாவில் வீற்றிருந்து நீதிநூல்களையும் அறிவுரைகளையும் பாமாலைகளையும் பசுங் கொண்டல் பொழிந்தாற் போலப் பயன்சிறக்க உலகிற் பொழிவித்தாள். இவரும் தீயது நீக்கி நல்லது கூறிப் பெருமகிழ்வடைந்தார். எனவே இவர் தமது நாவில் இத்தகைச் சிறப்புட னுறைந்த நாமகளை அன்னமென்றது நாச்சிறப்பானும் பொருந்துவதாயிற்றெனக.

நாமகளின் அருண் மிகுதி தோன்றப் 'பேரிது' என்றார். இதனாலே நாமகள் வணக்கங் கூறப்பட்டது.

★

## நூல்

பூமருவு தண்டலையும் பொன்னனையார் பூங்கரமுங்
காமருவண் டார்க்குங் கதிரையே—ஓமருவும்
அத்தமறை தந்தா னறியா னனுங்கமுடி
யத்தமறை தந்தா னகம்.

**இதன் பொருள்:—**

ஓம் மருவும் அத்தம்—ஓம் என்னும் பிரணவத்திற்குப் பொருந்திய மெய்ப்பொருளை, அறியான் அனுங்க—அறியாத பிரமன் வருத்தமுற, முடி அத்தம் அறைதந்தான்—அவனது முடித்தலைகளிற் றமது திருக்கரத்தாற் குட்டியருளியவனும், ஓம் மருவும் அத்தம்—ஓங்கார மந்திரப் பொருளை, அறைதந்தான் — சிவபெருமானுக்குச் சொல்லியருளியவனும் ஆகிய முருகக்கடவுளின், அகம்—திருப்பதி, பூ மருவு தண்டலை—பூக்கள் செறிந்த சோலைகளில், காமரு வண்டு ஆர்க்குங் கதிரையே—அழகிய வண்டுகள் ஒலிக்குங் கதிரைப் பதியேயாகும். பொன் அனையார் பூங்கரம்—திருவை யொத்த அழகிய மகளிரது பூப்போலுங் கைகளில், காமரு வண்டு ஆர்க்குங் கதிரையே — அவரால் விரும்பி யணியப்பட்ட கைவளைகள் ஒலிக்குங் கதிரைப்பதியே யாகும்.

ஓம்—ஓங்கார மந்திரம். இதன் விளக்கம் வருமாறு:—மன்னுயிர்கள் தம் இருவினைகளையும் நுகர்ந்து மெய்யுணர்ந்து அவாவறுத்து வீடு பெறுதற்கு, உலகங்களும் உடம்புகளும் கரணங்களும் போகப் பொருள்களும் வேண்டப்படும். இவற்றைப் படைத்தற்குத் துணைக்காரணமான மூலப்பொருள் மாயை எனப்படும். இம்மாயை நுண்ணிய அணுக்களா

லாகிய இருள் வடிவமானது. இது சுத்த மாயை அசுத்த மாயை பிரகிருதிமாயை என மூவகைப்படும்.

இறைவன், உயிர்கள் வீடுபேறடைய வேண்டுமென்னும் பெருங்கருணையால் அவ்வுயிர்களின் பொருட்டு உலகங்களைத் தோற்றுவிக்கத் திருவுள்ளங் கொள்வர். கொள்ளும்போது, தமது திருவருட் சத்தியினாற் சுத்தமாயையை இயக்க அது சொல்லொணு இயக்கமுடைத்தாய்ச் சுழலும். சுழல, அதினின்றும் 'ஓம்' என்னும் ஒங்காரவொலி பிறந்து எங்குஞ் செறியும். அவ்வொலி அசுத்த மாயையின் அணுக்களைத் திரட்டிச் சேர்ப்பதினாலே உலகங்கள் படைக்கப்படுகின்றன.

இவ்வோங்காரவொலி, அகரம் உகரம் மகரம் என்னும் மூன்றொலிகளின் கூட்டமாகும். அகரவொலி முதற்பிறந்து படைத்தலைச் செய்யும். உகரவொலி அதன்பின்னே தோன்றிச் சிறிது நேரம் நிற்பதாய்ப் படைக்கப்பட்ட உலகங்களை அவற்றின் கால வெல்லை யளவும் நிலைபெறச் செய்யும். மகரவொலி நிலைபெற்ற உலகங்களை யழியச் செய்யும்.

அகரவொலி படைப்புத் தொழிலை நிகழ்த்துதற்குப் பொருந்த, அங்காத்தலாற் பிறக்கும். உகரவொலி காத்தற் ரொழிலை நிகழ்த்துதற்குப் பொருந்த, இதழ்குவியப் பிறக்கும். மகரவொலி அழித்து முடிப்பதாகலின், இதழிரண்டும் பொருந்தி முடியப் பிறக்கும்.

இவ்வொலி இயற்கையொலி யாதலின் எவ்விடத்தும் எப்போதுங் கேட்கப்படும். நமது செவி

களை வேற்றொலிகள் உட்புகாவாறு அடைத்துக் கேட்க இவ்வியற்கையொலி உடம்பின் அகத்தே கேட்கப்படும். புறத்தே யமைதியான கடலினுங் காற்றிலும் இவ்வொலியே கேட்கப்படுகின்றது. இவ்வொலியின் இயக்கத்தாலேயே உலகங்கள் இயங்குகின்றன.

இவ்வொலி எழும்போது ஒரு வட்டவடிவும் வரிவடிவும் உண்டாகின்றன. சுத்தமாயை விந்து மாயை என்றும் பெயர்பெறும். எனவே சுத்த மாயை சுழலும்போதுண்டாகும் வட்டவடிவும் விந்து என வழங்கப்படும். இனி, இவ்வொலி திசைகள் தோறும் நேரே சென்றுசேர வரிவடிவமாங் கீற்று வடிவமுண்டாகும். இது நாதமெனப்பட்டது. விந்துவும் நாதமும் சேர்ந்த வடிவமே ஓங்காரத்துக்கு வடிவமாயிற்று. மூல வடிவங்களாகிய இவ்விரு வடிவங்களுமே இறைவனாற் படைக்கப்பட்ட உலகங்களுக்கும் உலகப் பொருள்களுக்கும் வடிவங்களாயின.

இறைவனின் திருவருட்சத்தி நடுநிற்கப் பிறந்த இவ்வியற்கை ஒலியும், விந்து நாத வடிவுமே இறைவனுக்குரிய மந்திரமும் வடிவமுமாகும். பிள்ளையார் சுழி இவ்விருவடிவினாலும் எழுதப்படுதல் காண்க. சிவலிங்கம் இவ்வடிவாயமைக்கப்படுதலும் இவ்வுண்மையை விளக்குவதாகும்.

தமிழிலுள்ள எழுத்துக்கள் எல்லாம் அகர உகர மகரமாகிய இம்மூன்றொலிகளையுமே மூல வொலிகளாக வுடையன. எழுத்துக்களாலே சொற்களும் சொற்களாலே கலைகளுந் தோன்றின. எனவே வேதம் முதலிய கலைகளுக்கு ஓங்காரம்

மூலவொலியாக முதலிற் சொல்லப்பட்டது. செம்பொருட்சிவத்தை நடுவே கொண்ட இவ்வொலியே சிவத்தை நினைந்து வழிபடுதற்கு ஏற்ற மந்திரமுமாயிற்று. இம்முறையே 'ஓம் சிவாயநம' 'ஓம் குமாராயநம' 'ஓம் சரவணபவ' என்ற மந்திரங்கள் போற்றப்பட்டன. இவையே ஓங்கார மந்திரத்தின் விளக்கமாக ஆன்றோராற் கூறப்பட்டவை. இவற்றின் விரிவுகளை விரிந்த நூல்களிற் காண்க.

மருவுதல் — பொருந்துதல். அத்தம் — பொருள். அனுங்க—வருந்த. அத்தம்—கை.

ஓம் மருவும் அத்தம் அறியான் என்றும், ஓம் மருவும் அத்தம் அறைதந்தான் என்றுங் கூட்டியுரைக்க.

முருகக்கடவுள் பிரமனைக் குட்டிச் சிறையிட்ட வரலாறு:—

'ஒருமுறை பிரமதேவன் கைலையிலெழுந்தருளியிருந்த சிவபெருமானை வணங்கச் சென்றான். சென்றவன், சிவபெருமானை முறைப்படி வணங்கிய பின் முருகக் கடவுளைப் பாலனென்றெண்ணி அம்முறையே வணங்காது கும்பிட்டு மீண்டான். அவனது செருக்கை அறிந்த முருகக்கடவுள் அவனைத் திருத்தி ஆட்கொள்ளும் பெருங்கருணையைத் திருவுளத்துக் கொண்டவராய் அருகழைத்துப் பிரணவ மந்திரத்தின் பொருளைக் கேட்டார். பிரமன் வேதங்களை அறிந்தானாயினும், உண்மைப் பொருளை நுணுகி யுணர்ந்த மெய்யறிவிலனாதலின் அதன் பொருளை அறியாது திகைத்தான். முருகப்பெருமான் சினந்து 'இதனை யறியாத நீ படைப்புத் தொழில் செய்வதெங்ஙனம்' என்று கூறி, நான்கு

தலைகளும் அதிரக் குட்டிக் கந்தவெற்பிலே சிறை யிடுவித்தார்' என்பது.

அதன்பின் முருகக்கடவுளே படைத்தற் றொழிலைச் செய்தார். இவ்வாறு அளப் பில்லாத காலங் கழிந்தது. கழியப் பிரமனுக்குத் தந்தையாகிய திருமால் மனம் வருந்தி மைந்தனை மீட்கக் கருதிச் சிவபெருமானிடஞ் சென்று பல வாறு குறையிரந்தார். சிவபெருமான், முருகக்கட வுளிடம் அழைத்துச் சென்று பிரமனைச் சிறை விடுமாறு கேட்டருளினர். முருகப்பெருமான் 'பிரண வத்தின் பொருளறியாதவன் படைத்தற்றொழிலுக் குத் தகுதியிலன்' என்று மறுத்தார். சிவபெரு மான் மீண்டும் வேண்டியமையால் ஒருவாறு இரங் கிச் சிறைவிடுவித்தார்.

அப்போது சிவபெருமான் முருகக்கடவுளை மடி மீதிருத்திக், "குழந்தாய்! பிரணவப் பொருளை நீ அறிவையோ? அறிவையாயின் அதனை எனக்குங் கூறுதி", என்று கேட்டருளினர். முருகக்கடவுள் "தந்தையே எனதன்னைக்குத் தேவரீர் மறைவா யுரைத்த அப்பொருளைப் பலருங் கேட்கக் கூறு தல் தகுமோ?", என்றார். அதற்குச் சிவ பெருமான் நகைத்துத் தமது வலச்செவியைச் சாய்த்துக் கூறும்படி கேட்க, முருகக்கடவுள் அத னைக் கூறியருளினர். இது முருகக்கடவுள் சிவபெருமா னுக்குப் பிரணவப் பொருளுரைத்த வரலாறுகும்.

நெருக்கத்தாலே பலவினப் பூக்களும் ஒன்றை யொன்று பின்னிச் செறிதலை 'மருவுதல் என்றார்.

தண்டலை—சோலை. தண்மை தலைப்பட்ட இட மென்பது உறுப்புப் பொருள். குளிர்ச்சி மிக்க இடமென அன்மொழித்தொகையுமாம்.

போன்—திருமகள். மகளிர் திருமகள் அனையர்; எனவே, மைந்தர் திருமால் அனையர் என்பதுங் கொள்க.

தண்டலை வளங்கூறவே ஏனைய கழனிகளும் புனங்களும் படப்பைகளும் வளமுடையன என் பது கூறாதேயமையுமென்க. இவ்வாறு சோலையை யும் மகளிரையும் முதற்கண்விதந்து கூறியது நக ரச் சிறப்பைத் திரட்டிக் கூறியதுபோலுமென்க.

பூவும் போன்னும் மங்கல மொழிகளாதலின் நூன் முகத்து வைத்தார், நூல் மங்கலமாக முடிதல் வேண்டி.

மகளிர் தமது மனத்திற் குவந்த வளையல் களையே விரும்பி அணிவாராதலின் 'காமரு வண்டு' என்றார். காமருதல்—விரும்புதல். வண்டு—கைவளை.

'காமரு வண்டார்க்கும்' என்னுந் தொடர், தண் டலையில் அழகிய வண்டினம் ஒலிக்கும் என்றும், பூங்கரத்தில் அழகிய கைவளைகள் ஒலிக்கும் என் றும் இருபொருள் தந்தது சிலேடையணியாம்.

உம்மை எண்ணுப்பொருளில் வந்தது. 'அத்த மறை தந்தான்' என்பது மடக்கு.

அறைதந்தான், அறைதந்தான், அகம், தண் டலையும், பூங்கரமும், வண்டு ஆர்க்கும் கதிரை என வினைமுடிபு செய்க.

ஆசிரியர் தந்நூல்களிற் காப்புச் செய்யுளாக விநாயக வணக்கமும் நாமகள் வணக்கமுங் குரு வணக்கமுங் கூறுவது வழக்கம். இந்நூலிற் குரு வணக்கங் காப்பினுட் கூறாராயினும் நான்முகத் துக் கூறினரென்றே கொள்ளல் வேண்டும். 'ஓம் மருவும் அத்தம் அறைதந்தான்' எனச் சிவகுரு வடிவா யெழுந்தருளிய முருகப்பெருமானை ஈண்டு வழிபடு கின்றார்.

இந்நூலில் வரும் வெண்பாக்களின் முன்னி ரண்டடிகள் கதிரைமலையையும் பின்னிரண்டடிகள் முருகக்கடவுளையும் புகழ்ந்துபோற்றுந் துதிகளாம்.

—★—

**பாவலருங் கண்டும் பணிமொழியா ருஞ்சுரும்புங்**
**காவலரைக் கூடுங் கதிரையே—தேவ**
**னுருக்குளத்து வந்தா னொருமுருகா காவென்**
**றுருக்குளத்து வந்தா னுறை.** (2)

**இதன் பொருள்:—**

தேவன் உருக்குளத்து வந்தான் — சிவனது அச்சந்தரும் நெற்றிக் கண்ணில் உதித்தவனும், ஒரு முருகா காஎன்று — ஒப்பற்ற முருகக்கடவுளே காத்தருளுவீர் என்று வணங்கி, உருக்கும் உளத்து வந்தான் — தம்மை உருக்கும் அடியவர்களது உள் ளங்களில் எழுந்தருளுபவனும் ஆகிய முருகக்கட வுளின், உறை—இருப்பிடம், பாவலர் — புலவர்கள், காவலரைக் கூடுங் கதிரையே—அரசர்களைப் பாடிச் சென்று சேருங் கதிரைப்பதியே யாகும். கண்டும் பணிமொழியார் — கற்கண்டும் பணிகின்ற இனிய மொழியைப் பேசும் மகளிர், காவலரைக் கூடுங் கதிரையே — தலைவர்களை மணங்கூடுங் கதிரைப்பதி

யேயாகும். சுரும்பு—வண்டுகள், கா அலரைக் கூடுங் கதிரையே — சோலையிலுள்ள விரிந்த மலர்களைத் தேடிச்சென்று சேருங் கதிரைப்பதியே யாகும்.

பாவலர்—நால்வகைக் கவிகளும் வல்ல புலவர் கள். ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் எனக் கவி கள் நால்வகைப்படும். செந்தமிழ் முருகனின் திருப் பதியாதலின் பாவலர்கள் பலர் இப்பதிக்கண்ணு றைந்தனர். இவருட் சிலர் காவலரைப் பாடிச் செல்வர். சிலர் அரசவையில் நூலரங்கேற்றச் செல் வர். சிலர் நூலாராய்ச்சியின் பொருட்டுச் செல்வர். சிலர் பரிசில் வேட்டுச் செல்வர். சிலர் அரசன் செய்யும் சிறப்புக்களைப் பெறுதற்குச் செல்வர். இவ்வாறாக இவர்கள் அரசர்களை நாடிச் செல்வ தும் அரசர்களாற் சிறப்புச் செய்யப்படுவதும் இப் பதிக்குப் பெருஞ்சிறப்பாமென்க.

கதிர்காமங் குறிஞ்சி நிலமாதலின், இந்நிலத் துத் தெய்வமாகிய முருகவேள், இந்நில மக்களைக் குறிஞ்சி யொழுக்கமாகிய களவுமுறைப்படி மணங் கூட்டுவித்தலும் இயல்பாயிற்று. இவ்வாறு பான் மையின் வழியே தெய்வத்தாற் கூட்டப்பட்ட தலை வர்களை நாடித் தலைவியர் செல்வரென்பது 'சண் டும் பணிமொழியார் கவாலரைக்கூடும்' என்றதனாற் கூறப்பட்டது.

மேலே நகரச் சிறப்பையும் நகர மக்களையுங் கூறி னார். ஈண்டு அரசர் புகழையும் மக்கள் வாழ்வையுங் கூறு கின்றார். பாவலர் பாடும் புகழுடையராதல் அரசர்க் குச் சிறப்பாம். காதன்மணங் கைகூடப்பெற்று அறந்தலைப்பட வாழ்தல் மக்களுக்குச் சிறப்பாம்.

சண்டு—கற்கண்டு. இது மகளிரின் மொழிக்கு ஒவ்வாது இழிந்தமையாற் பணிந்தது.

தேவன்—சிவபெருமான். உரு—அச்சம் குளம்—நெற்றிக்கண். முருகக்கடவுள் சிவனது நெற்றிவிழியிலுதித்த வரலாறு வருமாறு:— மாயையின் பிள்ளைகளான சூரன் சிங்கன் தாரகன் ஆதியோர் தேவர்களை அடிமைகளாக்கி ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகங்காறும் அரசு செய்தனர். அதனாலே துன்பமுற்ற தேவர்கள் இவ்வரக்கரை அழித்துத் தம்மைக் காக்கவல்ல மைந்தன் ஒருவனை அருளுமாறு சிவபெருமானை வேண்டினர்.

சிவபெருமான் அவர்களுக்கு அருள்புரியுந் திருவுள்ளத்துடன், தமக்கு இயல்பாகவுள்ள ஆறு திருமுகங்களுடன் எழுந்தருளி, அம்முகங்களின் நெற்றிவிழிகள் தோறும் ஒவ்வொரு பொறியாக ஆறு பொறிகளை தோற்றுவித் தருளினர். அவற்றைத் தீக்கடவுள் ஏற்றுக் கங்கையில் விடுப்பக் கங்கை சரவணப் பொய்கையில் விட்டது.

ஆங்கே ஆறுபொறிகளும் ஆறு குழந்தைகளாகி அறுமீன் செவிலிய ரூட்டிய பாலமுதுண்டு வளர்ந்தன. அக்குழந்தைகளை உமையம்மையார் அன்போடும் எடுத்து அணைத்தபோது ஆறு திருமுகமும் பன்னிரண்டு திருக்கரங்களு முடைய அறுமுகக் கடவுள் தோன்றியருளினர்.

உயிர்களைப் பிணித்த மலங்கள் மூன்று. ஆணவம் கன்மம் மாயை எனப்படும் அம்மூன்றும் கந்த புராணத்திலே சூரன் சிங்கன் தாரகனாகச் சொல்லப்படும். தேவர்கள் இந்த மும்மலங்களாலுந் துன்

புறம் உயிர்களாவர். தேவரைச் சிறையிட்டது மும்மலப் பிணிப்பினுல் உயிர்கள் உடம்பெடுத்து வருந்துதலைக் குறிக்கும். முருகக்கடவுள் சூரன் முதலியோரைக் கொன்று தேவர்களைச் சிறையினின்றும் மீட்டல், இறைவன் பெருங்கருணையால் அவ்வுயிர்களை மும்மலப் பிணிப்பினின்றும் நீக்கி ஆட்கொள்ளுதலைக் குறிக்கும். இவ்வாறு பசுபதி பாசவிலக்கணங்களை உலகிற்குக் காட்டியருளிய தெய்வத் திருவிளையாடலே இறைவன் முருகக்கடவுளைத் தோற்றுவித்துச் சூர சங்காரத்தை முடிப்பித்த வரலாருமென்றுணர்க.

'காவலரைக் கூடும்' என்றது மூன்று பொருளில் வந்த சிலேடையணி. 'உருக்குளத்து வந்தான்' என்றது மடக்கு. இவ்வாறு இந்நூலில் வருஞ் சிலேடையணிகளையும் மடக்கணிகளையும் நயந்துகொள்க.

—★—

**பூப்பயிலும் பொன்னன்னுர் பொன்புனைவார் பூங்கரத்தைக்**
**காப்பணியுஞ் செல்வக் கதிரையே—மாப்பிறவி**
**யாறக் கரத்தா னணைத்தெம்மை யாள்குமரன்**
**ஆறக் கரத்தா னரண்.** (3)

## இதன் பொருள்:—

மாப்பிறவி ஆற — பெரிய பிறவித் துன்பந் தணிய, கரத்தால் எம்மை அணைத்து—தம்முடைய திருக்கரங்களால் எம்மை அஞ்சலென்றணைத்து, ஆள் குமரன் — ஆட்கொள்ளுங் குமரக்கடவுளும், ஆறு அக்கரத்தான்—'சரவணபவ' என்னும் ஆறெழுத்து மந்திரத்தை உடையவனும் ஆகிய முருகக் கடவுளின், அரண்—அரணமைந்த திருப்பதி. பூப் பயிலும் பொன் அன்னுர் பூங்கரத்தை—கொய்தற்

காகப் பூங்கொத்துக்களைப் பிடிக்கும் திருமகளை ஒத்த அழகிய மகளிரது பூப்போலுங் கைகளை, கா பணியுஞ் செல்வக் கதிரையே — சோலைகள் தாழ்ந்து வணங்குஞ் செல்வமிக்க கதிரைப்பதியே யாகும். பொன் புனைவார் பூங்கரத்தை—பொன் புனைந்து வரைதலாகிய கற்புமணம் பூண்ட மண மக்களின் பொலிவமைந்த கைகளை, காப்பு அணி யும் செல்வக் கதிரையே—மணச்சடங்கை நிகழ்த் தும் மறையோர் நூற்காப்பினுற் கட்டுஞ் செல்வ மிக்க கதிரைப்பதியேயாகும்.

பூ—பூங்கொத்து. பயிலுதல்—பிடித்தல். பொன்—திருமகள். பூங்கரம்—பூப்போலுங்கை. கா—சோலை.

மகளிர் பூங்கொத்துக்களைப் பிடிப்பது அவற் ளுெடு பழகுவது போலும் அழகிய காட்சியதாக லின் 'பூப் பயிலும்' என்ருர். பூக்களொடு பயிலுதற் கேற்ற தண்மையும் மென்மையு மாகிய ஒற்றுமை யுடைமையிற் 'பூங்கரம்' என்ருர்.

பூங்கொத்துக்கள் மிகுந்திருக்கும் மென்சினை கள் தாழ்ந்து வளைதல் இயல்பாயமைந்தது. அதனை மகளிரின் பூங்கரங்களைக் கண்டு பணிந்து வளைந் தன வென்றது தற்குறிப்பேற்றவணியாகும்-

பொன்புனைதல்—தலைவன் தலைவிக்கு உலகியற் படி பலவித அருங்கலங்கள் கொடுத்து அந்தணரை யுஞ் சான்ருேரையும் முன்னிட்டு மணச்சடங்கு டனே வதுவை முடித்துக்கொள்ளுதல்.

காப்பு அணிதல்—காப்புக் கட்டுதல். காப்பணிதல் கூறவே ஏனை மாலை சூடலும், மங்கல மணிதலும்

விருந்து நயத்தலும் வாழ்த்துரைத்தலும் முதலாய திருமண வைபவங்க ளெல்லாங் கொள்ளப்படும். 'செல்வக் கதிரை' என்றமையாலே திருமண வைபவஞ் செல்வச் சிறப்போடு நிகழுமென்பதும் பெறப்படும்.

இனி, இம்மைக்கு வேண்டப்படும் பொருட் செல்வமும் மறுமைக்கு வேண்டப்படும் அருட்செல் வமும் முருகக்கடவுளால் அருளப்படுதல் தேன்றச் 'செல்வக் கதிரை' என்றார் எனவும், 'செல்வக் கதிர்காமம்' என்னும் மலைப்பெயர் குறித்துரைத்தா ரெனவும் கருதிக்கொள்க.

பொன்னன்னார் பூங்கரத்தை எனவும், பொன் புனைவார் பூங்கரத்தை எனவுங் கூட்டியுரைக்க.

மேலே களவுமணங் கூறியவர் இதனாற் கற்பு மணங் கூறினார். முருகக்கடவுள் வள்ளியம்மையார் பாற் களவுந் தெய்வயானை யம்மையார்பாற் கற்புங் காட்டி யுலகத்தை அந்நெறிக்கண் நிறுத்தியது முணர்க.

படைப்புக் காலந்தொட்டு இடைவிடாது தொடர்ந்து வருதலின் 'மாப்பிறவி' என்றார். 'தொல்லை யிரும்பிறவி' என்றார் பிறரும்.

மேலே 'தேவனுருக் குளத்து வந்தான்' என முருகக் கடவுளின் பிறப்புக்கூறி ஈண்டுச் 'சரவணபவ' என் னும் ஆறெழுத்துக் கூறியவாற்றால் அவர் சரவ ணப் பூம்பொய்கையில் வளர்ந்தமையுங் கூறினார்.

'பொன்புனைவார் பூங்கரத்தைக் காப்பு அணி யும்' என்பதனால் இல்லறமும் 'பிறவி ஆற' என்பதனாற் றுறவறமுங் கூறினார், இவ்விரு நெறிகளுமே உயிர் களின் மலமாசு நீக்கும் இருகண்ணாதலின்.

★

**மங்கலிமார் வாண்முகமும் வண்டலைபூந் தண்டலையுங்**
**கங்கண மேவுங் கதிரையே — வெங்கலிதீர்**
**காசரவ ணத்தன் கமலத்தன் கைகுவிக்கு**
**மாசரவ ணத்தன் மலை** (4)

**இதன்பொருள்:—**

வெங்கலி தீர்—கொடிய வறுமைத் துன்பத்தை நீக்குகின்ற, காசு அரவு அணத்தன்—மணிகளை யுடைய பாம்பணையிற் பள்ளிகொள்ளுந் திருமாலும், கமலத்தன் — தாமரையி லுறையும் நான்முகனும், கைகுவிக்கும்—கைகூப்பி வணங்கும், மா சரவணத் தன்—பெருமைவாய்ந்த சரவணப் பூம்பொய்கையிற் பிறந்த சரவணபவனது, மலை—குன்று, மங்கலி மார் வாள் முகம்—மங்கலநாணையுடைய மகளிரது ஒளி மிக்க முகங்களில், கங்கணம் மேவுங் கதிரையே —மஞ்சட்காப்புப் பொருந்துங் கதிரைப் பதியே யாகும். வண்டு அலை பூந் தண்டலை—வண்டுகள் தேனுகர அங்கு மிங்குமாக அலைந்து திரியும் பூக்கள் நிறைந்த சோலைகளில், கம் கணம்மேவுங் கதிரையே —மேகக் கூட்டங்கள் பொருந்துங் கதிரைப் பதியே யாகும்.

இப்பதியில், மங்கலமடந்தையர் ஒளி மிக்க முகங்களில் மஞ்சட்காப்பை அணிந்திருப்பர். வண் டுகளுலாவும் அழகிய சோலைகளில் மேகங்கள் படிந் திருக்கும்.

கலி—வறுமை. உலகில் வறுமைமிகாது பொருட் செல்வத்தை நல்கிக் காக்குங் கடவுள் திருமால் எனப்படுவர். காசு — மணி. இங்கே நாகரத்தினத் தைக் குறித்தது. ஆதிசேடனென்னும் பாம்பு

திருமால் பள்ளிகொள்ளுதற்குத் தன்னுடலை அணையாகவும், மணிகளையுடைய ஆயிரந்தலைகளைக் குடையாகவுங் கொண்டுள்ளது. அதன் மேலே திருமால் பள்ளிகொள்கின்றார். அணத்தல்—மேலிருத்தல். அணத்தன்—மேலிருப்பவன்.

சரவணப்பொய்கையில் வளர்ந்தமையாற் 'சரவணத்தன்' எனப்பட்டான். இதுபற்றியே 'சரவணபவ' என்னும் மந்திரமுமுண்டாயிற்று. திருமாலும் நான்முகனும் ஏனைத்தேவர்களுஞ் சரவணப்பூம் பொய்கையிற் குழந்தையாயிருந்த முருகக்கடவுளை நாள்தோறுஞ் சென்று வழிபட்ட வரலாறு மூன்றாமடியிற் கூறப்பட்டது.

மேலே இருவகை மணவினையுங் கூறினாராதலின், ஈண்டு அவ்வாறு மணமுடிக்கப்பட்ட மகளிர் மங்கலமாக வாழ்ந்த இல்லறச் சிறப்புக் கூறினார்.

கங்கணம்—மஞ்சட்காப்பு. கம்—மேகம். கணம்—கூட்டம். குறிஞ்சிநிலமாதலின் மேகங்கள் கூட்டங் கூட்டமாக உலாவுமென்க.

—★—

உண்ணேய மிக்கோரு மோங்குமிளங் காவுமலர்க்
கண்ணீர் சொரியுங் கதிரையே — யெண்ணுமறை
பன்னிருகை யாரின்பம் பாவமறுத் தீயுமருட்
பன்னிருகை யாரின் பதி. (5)

## இதன்பொருள்:—

எண்ணும், மறை பன் இரு கையார்— எண்ணிச் சொல்லப்படுகின்ற மந்திரங்களை ஓதித் தொழுகின்ற இரு கைகளையுடைய மக்களது, பாவம்

அறுத்து இன்பம் ஈயும்—பாவக்கட்டை அறுத்துப் பேரின்பத்தை அருளும், அருட் பன்னிருகையாரின் பதி—திருவருள் சுரக்கின்ற பன்னிரண்டு திருக் கரங்களையுடைய முருகக்கடவுளின் திருப்பதி, உள் நேயம் மிக்கோர்—உள்ளன்பு நிறைந்த தொண்டர்கள், மலர்க் கண்ணீர் சொரியுங் கதிரையே—தாமரை மலர்போன்ற அழகிய கண்களினின்றும் உவகைக் கண்ணீரைச் சொரிகின்ற கதிரைப்பதியேயாகும். ஓங்கும் இளங்கா—உயர்ந்து வளர்ந்த இளமரச் சோலைகள், மலர் கள் நீர்சொரியுங் கதிரையே — மலர்களினின்றும் தேனை மழைநீர் போலச் சொரிகின்ற கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் உள்ளன்புடைய தொண்டர்களின் கண்கள் கண்ணீர் சொரிந்தவண்ணமிருக்கும். இளமரச் சோலைகள் தேனைச் சொரிந்தவண்ண மிருக்கும். நேயம்—அன்பு. கள்—தேன். மறை—மந்திரம்.

இத்திருப்பதியில் நிகழும் பல்வேறு அற்புதங்களுட் கண்ணீரருவி எல்லாத் தொண்டர்மாட்டும் பொதுவாகவும் இயல்பாகவும் நிகழுமாதலின் இவ்வற்புதக் காட்சியை முற்கூறினர்; ஏனைய அற்புதங்களை இடம் நோக்கிச் சிறப்பித்துக் கூறுவார். 'மலர்' என்றது தலைமைபற்றித் தாமரையைக் குறிக்கும். 'பூவினுக்கருங்கலம் பொங்குதாமரை' 'பூவெனப்படுவது பொறிவாழ் பூவே' என வருதல் காண்க.

மந்திரங்கள் நூற்றெட்டும் ஆயிரத்தெட்டும் பிறவுமாக எண்ணியுரைக்கப்படுதலின், 'எண்ணுமறை' எனப்பட்டன. "ஆறெழுத்தடக்கிய அருமறைக் கேள்வி நாவியன் மருங்கி னவிலப்பாடி" என வருந் திருமுரு

காற்றுப்படை அடிகளினுலே இம்மந்திரங்கள் அவ் வெல்லேக்கு அப்பாலும் எல்லேயின்றி உரைக்கப் பட்டமை அறிக.

மறை—மந்திரங்கள். அவை ஓம் முருகாயநம, ஓம் குமாராயநம, ஓம் சரவணபவ என்பன. நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழிகள் ஆத லின், இம்மந்திரங்கள் அவ்வாணேப்படியே விணக் கட்டிஃன யறுத்து மன்னுயிர்க்குப் பேரின்பத்தை நல்குவனவாமென்க.

'கானுயிர் பூஞ்சோலைக் கதிரை' என்று அடி யெடுத்து நூல்தொடங்கினுராதலின், முதல் ஐந்து வெண்பாக்களிலுஞ் சோலைவளங் கூறினுர்.

★

பாயிருள்சீக் கும்பகலும் பண்ணேவாய்ப் பைங்கூழுங்
காய்கதிரைக் காட்டுங் கதிரையே—மேயசடை
ஆரு னனத்தனவ னத்தற் கிறைமைதரும்
ஆரு னனத்த னகம் (6)

**இதன்பொருள்:—**

மேயசடை ஆறன்—திருமுடியிற் பொருந்திய கங்கையை உடையவனுகிய சிவனும், அனத்தன் —அன்ன வூர்தியை உடைய பிரமனும், அவன் அத்தற்கு — அவனுடைய தந்தையாகிய திருமா லும் ஆகிய மும்மூர்த்திகளுக்கும், இறைமைதரும் ஆறு ஆனனத்தன் — மேலான தலைமைவாய்ந்த ஆறு திருமுகங்களையுடைய முருகக்கடவுளது, அகம் —கோயில், பாயிருள் சீக்கும் பகல்—பரந்த இருளை நீக்குகின்ற ஞாயிறு, காய்கதிரைக் காட்டுங் கதிரையே—வெப்பமுடைய கிரணங்களேக் காட்டுங்

கதிரைப்பதியேயாகும். பண்ணையாய்ப் பைங்கூழ்—புனங்களிடத்துப் பசிய தினைப்பயிர்கள், காய் கதிரைக் காட்டுங் கதிரையே—முற்றிக் காய்ந்த தினைக்கதிர்களைக் காட்டுங் கதிரைப்பதியேயாகும்.

இப்பதியிற் பகற்பொழுது கதிரவனின் காய்ந்த கிரணங்களால் வெப்பமுடையதாயிருக்கும். பண்ணைகளிலுள்ள பசிய தினைகள் முற்றிக் காய்ந்த கதிர்களையுடையனவாயிருக்கும்.

பாயிருள்—பரந்தவிருள். சீத்தல்—நீக்குதல். பண்ணை—தினைப்புனம். பைங்கூழ்—தினைப்பயிர். நெற்பயிருமாம். இந்நிலத்துக் குரியது தினையும் மலைநெல்லும் எனப்பட்டாலும் வள்ளியம்மையாராற் காக்கப்பட்டதும் இந்நிலத்திற்குச் சிறப்பானதும் தினையாதலின் தினையென்றே கொள்க. ஆறு—கங்கை. அனத்தன்—பிரமன். அன்னத்தன் என்பது அனத்தன் எனக்குறைந்து நின்றது. அத்தன்—தந்தை. இறைமை—தலைமை. ஆனனம்—முகம்.

'பன்னிரு கையார்' என மேலேகூறி ஈண்டு 'ஆறுனனத்தன்' என்றமையாலே சரவணப்பொய்கையிற் றேவரும் மூவரும் போற்ற ஆறு குழந்தைகளாக வளர்ந்த முருகப்பெருமான், உமையம்மையாரால் அணைக்கப்பட்டு, ஆறுமுகங்களும் பன்னிரு கைகளுமுடைய அறுமுகக் கடவுளாயினமை கூறியவாறும்.

முருகக் கடவுளுக்குரிய முற்றறிவு, வரம்பிலின்பம், இயற்கையறிவு, தன்வய முடைமை, பேரருளுடைமை, வரம்பிலாற்றல் என்னும் ஆறுகுணங்களும் ஆறு திருமுகங்களாம்.

இவ்வாறு முகங்களுள் ஒரு திருமுகம், உலகங்களின் இருளை நீக்கி ஒளியைக் கொடுக்கின்றது. ஞாயிறுந் திங்களுஞ் செந்தீயும் முதலிய ஒளியுடைப்பொருள்களெல்லாம் அத்திரு முகத்தினாலே ஒளியைப் பெற்று விளங்குகின்றன.

ஒரு திருமுகம், அன்புடையவர்கள் தாந்தாம் அறிந்தவாறு வழிபட அவர்தம் அன்புக்கு மகிழ்ந்து அவர்கள் விரும்பியவாறு ஒழுகி வரங்கொடுக்கின்றது.

ஒரு திருமுகம், உண்மைநூற்பொருளை யறிந்த பெரியோர்கள் விதிமுறையே செய்கின்ற பூசனையை ஏற்று அவர்தமக்கு அருள்புரிகின்றது.

ஒரு திருமுகம், அவ்வுண்மை நூல்களாலே உணர்த்தப்படாது எஞ்சி நிற்கும் மெய்ஞ்ஞான விளக்கத்தைப் பக்குவமுடைய சான்றோருக்கு உணர்த்தி அவர்கள் உள்ளத்திருளை யோட்டிச் சிவசோதியை உண்டாக்குகின்றது.

ஒரு திருமுகம், தீமை செய்தவரைத் தண்டித்து நல்வழிப்படுத்தி யவர்களுக்கு அருள்புரிகின்றது.

ஒரு திருமுகம், வள்ளிநாயகியாருடன் கலந்து உயிர்களுக்குப் போகங்களை நுகர்விக்கின்றது.

பன்னிரு திருக்கரங்களும், அறுமுகங்களாலுஞ் செய்யப்படும் அறுதொழில்களுக்குந் துணைபுரிகின்றன.

சிவனுக்கு மைந்தனாகிய அறுமுகக்கடவுள் சிவனுக்கு இறைமைதருங் கடவுளாதல் அமையுமோவெனின்? முருகக்கடவுள் சிவசத்தி யாதலாலுஞ் சிவகுருவாதலாலும் அமையுமென்க.

★

விற்கொண்ட காளையர்கண் மெல்லியலார் தோண் [மொழியிற்
கற்கண்டங் கூறுங் கதிரையே—அற்பார்
உறுவர்பய முண்டாண் டொருவாவின் பீந்தான்
அறுவர்பய முண்டா னகம். (7)

**இதன்பொருள்:—**

*அற்பார் உறுவர் பயம் உண்டு—அன்புநிறைந்த தேவர்களது நெஞ்சிலிருக்கும் அச்சத்தைப் போக்கி, ஆண்டு ஒருவா இன்பீந்தான் — அச்சரவணப்பொய்கையிற் றன்னை வழிபட்டு நிற்கும் அவர்களுக்கு ஒப்பற்ற பெருமகிழ்ச்சியைக் கொடுத்தவனும், அறுவர் பயமுண்டான்—கார்த்திகைப் பெண்கள் அறுவரது திருமுலைப்பாலை உண்டவனும் ஆகிய முருகக்கடவுளின், அகம்—கோயில், விற்கொண்ட காளையர்கள் தோளில்—வில்லேந்திய இளைய வீரர்களது தோள்களில், கற்கண்டங் கூறுங் கதிரையே—கற்பார்களின் வலிமை பொருத்திக் கூறப்படும் கதிரைப்பதியேயாகும். மெல்லியலார் மொழியில்—மெல்லிய சாயலையுடைய மகளிரது இன்சொற்களில், கற்கண்டு ஊறுங் கதிரையே—கற்கண்டின் இன்சுவை ஊற்றெடுத்துப் பெருகுங் கதிரைப்பதியே யாகும்.*

*இப்பதியில் வில்லேந்திய வீரர்களது தோள்களின் வலிமையோடு கற்பாறைகளின் வலிமை ஒப்பிட்டுக் கூறப்படும். மகளிரின் இன்சொற்களில் கற்கண்டின் இனிமை ஊற்றெடுத்துப் பெருகும்.*

அற்பு—*அன்பு.* ஆர்தல்—*நிறைதல்.* உறுவர்—*தன்னைச்சேர்ந்தோர். ஈண்டுத்தேவர்களை உணர்த்தியது.* ஆண்டு *என்னுஞ் சுட்டுச் சரவணப்பொய்கையைச் சுட்டியது.* ஒருவுதல்—*நீக்குதல். நீங்காத*

பெருமகிழ்ச்சியைத் தேவர்களடைதலின் ஒருவா வின் பீந்தான் என்றார். அறுவர்—கார்த்திகைப்பெண் கள் அறுவர். பயம்—முலைப்பால். கற்கண்டம்—கற்பார்.

காளையர்கள் தோளில், மெல்லியலார் மொழியில் என்று நிரனிறையாகக் கொள்க.

சரவணப்பொய்கையில் ஆறு குழந்தைகளாகத் தோன்றிய முருகப்பெருமான் தேவர்களின் அச்சத்தைப் போக்கி அவர்களெல்லோருங் கண்டு களிக்குமாறு பலவிளையாடல்களைச் செய்து கார்த்திகைப் பெண்களது பாலுண்டு வளர்வாராயினர் என்பது வரலாறு.

★

வாசமடத் தேழையரும் வாவியிடைத் தாமரையுங்
காசிலன முண்ணுங் கதிரையே—மோசக்
கருவிளையாட் டம்மாயக் காமருல கெல்லாந்
திருவிளையாட் டம்மான் சிலம்பு. (8)

**இதன்பொருள் : —**

மோசக் கரு விளை ஆட்டம் மாய—உயிர்களை வஞ்சிப்பதாகிய பிறவிகள் தருகின்ற துன்பங்கள் அகல, காமர் உலகெல்லாம்—அழகிய பதினன்கு உலகங்களினும், திருவிளையாட்டு அம்மான்—திருவிளையாடல்களைச் செய்கின்ற முருகக்கடவுளின், சிலம்பு—மலை. வாச மடத்து ஏழையர்—அடியார்கள் வாசமாகிய திருமடங்களில் உணவருந்தும் ஏழையர்கள், காசு இல் அனம் உண்ணுங் கதிரையே—பொருட்செலவில்லாத தருமச்சோற்றை உண்ணுங் கதிரைப்பதியே யாகும். வாவியிடைத்

தாமரை—தடாகங்களிற் பூக்குந் தாமரைமலர்களை, காசு இல் அனம் உண்ணுங் கதிரையே—மறு வில்லாத வெள்ளை அன்னங்கள் உண்ணுங் கதி ரைப்பதியே யாகும்.

இப்பதியில், மடங்களில் ஏழைகள் தருமச் சோற்றை உண்டு பசிநீங்குவர். மறுவில்லாத வெள்ளை அன்னங்கள் தாமரை மலரையும் இலைச் சுருளையும் உண்டு வாழும்.

காசு—பொருள். காசு — குற்றம். வேற்றுநிறங் கலந்து குற்றமடையாத தூய வெள்ளை அன்ன மென்க. அன்னம் அனமெனக் குறைந்தது. கரு —பிறவி. பிறவிகளினுல் உயிர்கள் அலைந்துதிரிதலை ஆட்டம் என்ருர். ஆட்டம்—அலைவு. காமர்—அழகு.

சூரனை அவன் கிளையுடனழிக்கத் திருவவ தாரஞ் செய்தருளிய முருகக்கடவுள் அவன் வரமா கப் பெற்ற நூற்றெட்டு யுகமும் முடிபுபெருமையி ஞல், அக்காலவெல்லையளவும் பலதிருவிளையாடல் களைச் செய்தருளினுர். அவற்றைக் கந்தபுராணத் திலே திருவிளையாட்டுப் படலத்திற் காண்க.

மும்மலங்களின் வலியழித்து உயிர்களை ஆட் கொள்வதற்குத் திருவருட்சத்தி பல அற்புத நிகழ்ச் சிகளைக் காட்டும். அவை திருவிளையாடல்களெனப் படும். அவ்விளையாடல்கள் உயிர்களின் பிறவிப் பிணியைத் தணித்தற்கு ஏது வாதலின், 'மோசக் கருவிளைஆட்டம் மாய' என்ருர்.

—★—

அற்பூரு மன்பர் சிரத்து மலையகத்துங்
கற்பூர மேவுங் கதிரையே—பொற்பூரு
மஞ்சத்தான் றோற்று மறுகவரு வானடியே
மஞ்சத்தான் றோற்று மரண். (9)

**இதன்பொருள்:—**

பொற்பு ஊரும் மஞ்சத்தான்—அழகு விளங்கும் மேக வாகனனாகிய இந்திரன், தோற்று மறுக வருவான்—தோல்வியடைந்து வீழ்ந்து மயங்குமாறு எதிர்த்தவனாகிய முருகக்கடவுள், அடியேம் அஞ்சத் தான் தோற்றும் அரண்—அடியேங்கள் அஞ்சும் போது தான் அஞ்சலென்று காத்தற்கு எழுந்தருளி யிருக்குந் திருப்பதி; அற்பு ஊரும் அன்பர் சிரத்து—அன்பு மிக்குவிளங்குந் தொண்டர்களது சிரங்களில், கற்பூரம் மேவுங் கதிரையே—கருப்பூர விளக்கங்கள் பொருந்துங் கதிரைப்பதியே யாகும். மலையகத்து—மலைச்சாரல்களில், கற்பூரம் மேவுங் கதிரையே—கற்பாறைகளில் நீர்க்குண்டுகள் பொருந்துங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில், அடியார்கள் கருப்பூரச்சட்டிகளை வேப்பிலைச் சும்மாடுகளின் மேல் வைத்து, உள்ளே திருநீறு பரவிக், கருப்பூரத்தையெரித்து, வீதி முழுவதுஞ் சுமந்து நிற்பர். மலைச்சாரல்களில் நீர்க்குண்டுகள் இடையிடையே காணப்படும்.

அற்பு—அன்பு. பூரம்—நீர்க்குண்டு. பொற்பு—அழகு. ஊருதல்—விளக்கமுறுதல். மஞ்சு—மேகம். மழைக்குத் தெய்வம் இந்திரனாதலின் மேகவாகனன் எனப்பட்டான்.

முருகப் பெருமானது திருவிளையாடல்கள் எல்லாவுலகிலும் அதிசயத்தை யுண்டாக்கின. இவற்றைச் செய்பவர் யாவர் என்பதை ஒருவருங் கண்டிலர். இஃது அரக்கர்களின் மாயமென்றஞ்சிய தேவர்கள் இந்திரனிடம் முறையிட்டனர். இந்திரன் தம்மைக் காத்தற்பொருட்டு அவதரித்த பெருமானை அறியாதவனாய்ப் போருக்கெழுந்தான். அரக்கர் செயலே இஃது என்று துணிந்து ஐராவதத்திலேறி அதனை முருகப்பெருமானுக்கெதிரே செலுத்தினான். முருகப் பெருமான் மனத்தினாலே சில அம்புகளை உண்டாக்கி இந்திரன் மேலுந் தேவர்கள் மேலுஞ் செலுத்தினார். இந்திரன் ஐராவதத்துடன் மயங்கி வீழ்ந்தான். தேவர்கள் அழிந்தார்கள். தேவர்கள் அறியாமையாற் செய்த இச்செயலை அறிந்த வியாழகுரு முருகப் பெருமானை வணங்கி அவர்கள் அறியாமையைப் பொறுத்தருளுமாறு வேண்டினார். முருகப்பெருமான் எல்லோரையும் உயிர்பெற்றெழச் செய்தார். இஃது இந்திரன் தோற்று வீழ்ந்த வரலாறாகும்.

திருவருளினாலே உயிர்கள் மெய்யுணருமிடத்து மலக்குணங்கள் அறிவை மறைத்துச் சேட்டை செய்யும். அச்சேட்டைக் குணங்களைத் திருவருள் மடங்கச்செய்து அருள் விளக்கத்தைக் காட்டும். இதுவே இவ்வரலாற்றின் உண்மைப் பொருள்.

★

**மேயகொடி மாளிகையு மெய்யடியார் கூட்டமுமா**
**காயங் கடக்குங் கதிரையே — தீய**
**மடக்குஞ் சரத்தானை மாமுகனைப் போரின்**
**மடக்குஞ் சரத்தான் மலை.** (10)

**இதன்பொருள்:—**

*தீய மடக் குஞ்சரத்தானை — தீயோனும் அறியாமைநிரம்பியவனும் ஆகிய தாரகாசுரனையும், மாமுகனை—சிங்கமுகனையும், போரில் மடக்குஞ் சரத்தான் — போரில் வலியழிக்கும் அம்புகளையுடைய முருகப்பெருமானது, மலை—மலைநிலம், மேய கொடி மாளிகை — மேலேபொருந்திய கொடிகளசையும் மாடங்கள், ஆகாயங் கடக்குங் கதிரையே—ஆகாய எல்லையைக் கடந்துயர்ந்த கதிரைப்பதியே யாகும். மெய்யடியார் கூட்டம்—உண்மைத் தொண்டர் கூட்டம், மா காயங்கடக்குங் கதிரையே—பெரிய பிறவித் தொடர்பைக் கடந்து முத்திபெறுங் கதிரைப் பதியே யாகும்.*

*இப்பதியில், அழகிய கொடிகளசையும் மாளிகைகள் உயரத்தால் ஆகாயவெல்லையைக் கடக்கும். வழிபாடு செய்து தவம்புரியுந் தொண்டர்கூட்டம் பிறவியைக் கடந்து முத்தி பெறும்.*

*இது முதல் ஒன்பது வெண்பாக்கள் சூரசங்கார நிகழ்ச்சிகளைக் கூறுவனவாம். தாரகனுஞ் சிங்கனுஞ் சூரனுக்குத் தம்பியர். இவர்கள் மூவருங் காசிபமுனிவரின் மைந்தர்கள். காசிபர் பெருந்தவத்தினர். ஒருநாள் அத்தவமுனிவர் முன்னே மாயை என்னும் அழகிய பெண் தோன்றினள். முனிவர் தவநிலை குலைந்து ஆசையால் அவளை*

மணந்தார். அவர்களுக்குச் சூரன் சிங்கன் தாரகன் என்னும் இம் மைந்தர்கள் பிறந்தார்கள். சூரன் மனித முகத்தினன். சிங்கன் சிங்கமுகத்தினன். தாரகன் யானைமுகத்தினன். மூவருக்குங் காசிபர் நல்லுபதேசஞ் செய்தார். அவர்கள் அதைக்கேட்க விரும்பவில்லை.

அதன்பின் தாயாகிய மாயை உபதேசித்தாள். அவற்றையே மூவரும் விரும்பிக் கேட்டனர். அதிகாரத்தையுஞ் செல்வத்தையும் மேலாக மதித்தனர். அவற்றைப் பெறுதற்குச் சிவபெருமானைக் குறித்து வீரயாகஞ் செய்தனர். சிவபெருமான் சூரனுக்கு வச்சிரயாக்கையும் அழியா வலிமையும் இந்திரமாஞாலத் தேரும் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டுயுகமாளும் நீண்ட ஆயுளும் பெருவாழ்வுங் கொடுத்தருளினார். மற்றவர்களுக்கும் வேண்டிய வரங்கள் கொடுத்து, "எமது சத்தியே உங்களை வெல்லும்", என்றுகூறி மறைந்தருளினார்.

வரம்பெற்று வந்த சூரனுக்கு அவர்கள் குலகுருவாகிய சுக்கிரன் உபதேசித்தான். "நீயே கடவுள்; ஆதலால் நீ தேவரைப்பணியாதே; அவர்களைச் சிறையிடு; அவர்கள் பதவிகளைக் கவர்; கொலை முதலியன தீமைதரா", என்பது அவனுபதேசம். சூரன் அவற்றை மகிழ்ந்தேற்றுக்கொண்டான்.

அதன்பின் சூரன் திக்குவிசயஞ் செய்து மூவுலகையும் வென்றான். தேவர்களை ஏவல்கொண்டான். இந்திரனைத் துரத்திச் சயந்தனையுந் தேவர்களையுஞ் சிறையிலிட்டான். தேவர்கள் ஆற்றாது சிவனை வழிபட்டனர். சிவபெருமான் தமது சத்தியாகிய முருகக்கடவுளைத் தோற்றுவித்தார்.

சூரன் தேவர்களை வருத்தி ஏவல்கொண்டு தான் வரமாகப்பெற்ற நூற்றெட்டு யுகத்தையுங் கொடுஞ்செயல்களைப் புரிவதிலேயே போக்கினான். அக்கால வெல்லையும் முடிந்தது. அந்நாளில் முருகப் பெருமான் வீரவாகுதேவர் முதலிய ஒன்பது வீரர் களும் பூதகணங்களும் புடைசூழச் சூரனது மகேந் திரபுரிக்குப் படையெடுத்து வந்தார்.

வழியிலே தாரகனது மாயாபுரிப் பட்டினம் எதிர்ப்பட்டது. குமரநாயகனது வரவுகேட்டதுந் தாரகன் போருக்கெழுந்தான். வீரவாகுதேவர் அவனை எதிர்த்துப் பொருதார். தாரகன் தனது வஞ்சனையால் வீரவாகுமுதலிய வீரர்களைக் கிரவுஞ்ச மலையுள் மயங்கச்செய்தான். அதன்பின் முருகப் பெருமான் எதிர்த்துப் பொருது தமது கைவே லாற் றாரகனையுங் கிரவுஞ்சத்தையும் ஒருசேர வழித்தார்.

அதன்பின் முருகக்கடவுள் திருச்செந்தூரை அடைந்து அங்கிருந்துகொண்டு வீரவாகுதேவரைச் சூரனிடந் தூதனுப்பினார். சூரன் தேவர்களைச் சிறைவிட விரும்பவில்லை. போரையே விரும்பினான். முருகப்பெருமான் சூரனையழித்துத் தேவரைச் சிறைமீட்கத் திருவுளங்கொண்டார். மகேந்திரபுரிக் குப் படையெடுத்து வந்து ஏமகூடமென்னும் பாச றையில் வைகினார். போர்நிகழ்ந்தது. சூரனது மைந்தரும் அமைச்சரும் போரில் மாண்டனர். அதன்பின் அவன் தம்பியாகிய சிங்கன் வந்து பொருதான். சிங்கன் வெட்டவெட்ட முளைக்கும் பலசிரங்களையுங் கரங்களையும் உடையவன். முரு கப்பெருமான் அம்புகளை ஏவி அவன் தலைகளையுங்

கைகளையும் வெட்டினர். வெட்டவெட்ட அவைகள் முளைத்தெழுந்தன. ஈற்றில் ஒருதலையும் இருகை களும் நிற்க ஏனையவை யடங்கின. பின்பு அவ் வொரு தலையையும் இருகைகளையுங் குலிசத்தினு லறுத்துச் சிங்கனைக் கொன்ருர். சூரனை யழித்த வரலாறு பின்னர்க் கூறுவாம்.

முருகக்கடவுள் சூரன் முதலியோரைக் கொன்று தேவர்சிறை மீட்ட இவ்வரலாறு இறை வன் உயிர்களை மும்மலப்பிணிப்பினின்றும் நீக்கி ஆட்கொள்ளுதலைக் கருதும் என முன்னர்க் கூறி னும். சூரன் சிங்கன் தாரகன் என்னும் மூவரும் மும்மலங் களாகக் கருதப்படுவர். தேவர்கள் உயிர்களாகக் கருதப்படு வர். முருகப்பெருமான் உயிர்களை ஆட்கோள்ளுஞ் சிவசத் தியாவர். வீரவாகுதேவராதியோர் அருட்குணங்களாவர். மலக் குணங்களை அடக்க அருட்குணங்கள் செய்யுந் தொழில் களே போர் என்று குறிக்கப்படும்.

“ஞானவா ளேந்து மையர் நாதப் பறையறைமின்
மானமா வேறு மையர் மதிவெண் குடைகவிமின்
ஆனநீற் றுக்கவச மடையப் புகுமின்கள்
வானநா டாள்வோநாம் மாயப்படை வாராமே”

—என்பது திருவாசகம்

தாரகன் மாயாமலம். உயிர்கள் கன்மப்பலனை நுகர்தற்பொருட்டுப் பிறவியெடுக்கும். அப்போது உலகபோகங்களில் மயங்கும், அம்மயக்கநிலையினின் றும் நீங்கி உயிர் தன்னை யறிவது மாயாமலநீக்கம்; இதை உணர்த்துவது தாரகாசுரயுத்தம் என்றறிக.

சிங்கன் கன்மமலம். உயிர்கள் பிராரத்தத்தை அனுபவிக்கும் போது ஆகாமியம் வந்து சேர்ந்து கொண்டேயிருக்கும். இஃது அவன் தலைகள் வெட்டவெட்ட முளைத்தன என்பதாற் குறிக்கப்பட்டது. அவனுயிரைக் கொன்றது குலிசாயுதம். அது மேலுங் கீழும் நுதிகளையுடையது. உயிர்களின் நல்வினைப்பயன் மேலுலகிலும் தீவினைப்பயன் கீழுலகிலும் அனுபவிக்கப்படத்தக்கது என்பதை அந்நுதிகள் காட்டும். இச் சிங்கனழிவு கன்மமலநீக்கத்தை உணர்த்தும். இவற்றின் விரிவுகளை இந்நூலாசிரியர் எழுதிய, "கந்தபுராணக் கதைகளும் அவைகளுணர்த்தும் உண்மைநூற்கருத்தும்," என்னும் நூலிற் காண்க.

மடக்குதல் — வலியழித்தல். முருகப்பெருமான் தாரகனை வேற்படையாலுஞ் சிங்கமுகனைக் குலிசப்படையாலுங் கொன்றாராதலின், இவ்வெண்பாவிற் கூறப்பட்டது அம்புகளால் வலியழித்த கொடும் போரையே குறிக்கும். போரில் மாண்டவரலாறுகள் பின்னர்க் கூறப்படும்.

பிறவிகள் பலவாய்த்தொடருதலின், மாகாயம் என்றார்.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"

என மணிவாசகப்பெருமான் பிறவிகளின் விகற்பங்களைக் கூறுகின்றார்.

காயம்—உடம்பு. உயிர்கள் உடம்பை எடுப்பது பிறவி; பிறவியினின்றும் நீங்குவது முத்தி; எனவே, காயங் கடத்தல் முத்தியடைதலைக் கருதுமென்க.

மிக்க குறத்தியரு மென்புனப்புள் ளோப்புநருங்
கைக்குறி பார்க்குங் கதிரையே—கைக்குங்
கடமலையு மையற் கடமு மழித்துப்
படமலையு மையன் பதி. (11)

**இதன்பொருள்:—**

*கைக்குங் கடமலையும்—கோபித்தெழுந்த தாரகனாதியோராகிய யானைமலையையும், மையற்கடமும்—கிரவுஞ்சமாகிய மயக்கஞ்செய்யும் மலையையும், பட அழித்து மலையும்—இறந்தொழியுமாறு வேலாலழித்துப் பொருதலைச் செய்யும், ஐயன் பதி—தலைவனாகிய முருகக்கடவுளது கோயில், மிக்ககுறத்தியர்—அந்நிலத்தில் மிகுதியாக வாழும் குறமகளிர், கைக்குறி பார்க்குங் கதிரையே—கையிரேகை பார்த்துப் பலனுரைக்குங் கதிரைப்பதியே யாகும். மென் புனப் புள் ஓப்புநர்—மென்மைத் தன்மை யுடையனவாகிய தினைப்புனத்துப் பறவைகளை யோட்டுங் காவன் மகளிர், கைக்குறி பார்க்குங் கதிரையே—அவற்றை யெறிதற்குக் கையிலக்குப் பார்க்குங் கதிரைப் பதியே யாகும்.*

*இப்பதியில் வாழும் குறமகளிர் கையிரேகை பார்த்துக் குறிசொல்லும் வழக்கமுடையர். தினைப் புனங் காக்கும் மகளிர் பறவைகளை யோட்டுதற்குச் சிறிய மணிக்கற்களைக் கவணில் வைத்துச் சுழற்றிக் கையிலக்குப் பார்த்துநிற்பர்.*

புனப்புள்—*தினைப்புனத்தில் வாழும்பறவைகள். அவை கிள்ளைகள் பூவைகள் மயில்கள் புறாக்கள் குயில்கள் என்பன. அவற்றைக் கிள்ளைகாள் ஆலோலம் பூவைகாள் ஆலோலம் என்றிவ்வாறு*

கூறியோட்டுவர். எஞ்சியவற்றைக் கவண்கற்களால் எறிந்து துரத்துவர். புள்ளினங்களேயன்றி மான் மரை முதலிய சிறு விலங்குகளையும் அவ்வாறெறிந்து துரத்துவர். கவண்—கல்லெறிகயிறு.

கைத்தல்—கோபித்தல். கடம்—யானைக்கூட்டம். தாரகனுடன் அநேகம் யானைமுகத்தையுடைய அரக்கர்கள் தோன்றி அவனுக்குத்துணையாயிருந்தார்கள். அவர்கள் எல்லோரும் இப்போரிலழிந்தார்கள் என்று காட்டுதற்குக் 'கடமலை' என்றார். தாரகன் தேரூர்ந்துவர ஏனைய யானைமுகத்தரக்கர்கள் சூழ்ந்தெழுந்த இப்படையெழுச்சி யானைக் கூட்டங்களினுலமைத்த பெரிய குலமலையை நிகர்த்ததென்க.

மையற் கடம்—மயக்கஞ்செய்யும்மலை. அது கிரவுஞ்சமென்னும் மாயங்கள் வல்லமலை.

கிரவுஞ்சத்தின் வரலாறு:— தாரகனுடைய பட்டினத்திலே கிரவுஞ்சன் என்னும் ஓர் அரக்கன் இருந்தான். அவன் மலையுருக்கொண்டு வழிச்செல்வோரை மயக்கி மாயவழியினுற்றன்னுள்ளே புகச்செய்து கொன்றுவந்தான். ஒருநாள் அவ்வழியே வந்த அகத்தியமுனிவர் அவன் காட்டிய மாயவழியின் தன்மையை ஞானத்தால் அறிந்தார். உடனே கடுங்கோபமுற்று, "நீ இம்மலையுருவாகவே நின்று முருகக்கடவுளது வேலால் அழியக்கடவாய்," என்று சபித்துச் சென்றார். அதன்பின் கிரவுஞ்சன் அரக்க வடிவத்தை இழந்து மலைவடிவாகவே யிருந்தான். தாரகாசுர யுத்தத்தில் அம்மலை தாரகனுக்குப் பெருந்துணையாயிருந்தது. போரில் வலியழிந்த தாரகன் அம்மலையுட் புகுந்தான். அவனைத்

தொடர்ந்தோடிய வீரவாகுமுதலியோரும் உள்ளே புகுந்து அதன் மாயத்தில் மயங்கினர்.

படைவீரர்கள் மயங்கியதைக் கண்டதாரகன் மீண்டும் போர்க்களத்தையடைந்தான். முருகப்பெருமானின் அம்புகளுக்காற்றாது மீண்டும் அம்மலையையே துணைக்கொண்டான். கிரவுஞ்சம் முப்புரங்களாய் வரத் தாரகன் அப்புரங்களிலுள்ள அசுரர்களாய் வந்தான். மலை பல முகில்களாய் வரத் தாரகன் இடிகளாய்வந்தான். மலை பல கடல்களாய் வரத் தாரகன் அக்கினியாய் வந்தான். மலை இருளாய் வர அவன் அவ்விருளிற் பூதர்களாய் வந்தான். இவ்வாறு பலப்பல மாயைகள் செய்து கிரவுஞ்சனுந் தாரகனும் பூதகணங்களை மயங்கி யழியச் செய்தார்கள்.

இவர்களது மாயத்தை ஒருசேர அழிக்குமாறு குமரக்கடவுள் வேலாயுதத்தை யேவினர். அது தாரகனது மார்பைத் துளைத்துக் கிரவுஞ்சத்தைப் பிளந்து உள்ளே மயங்கிக்கிடந்த எல்லோரையும் எழுப்பிமீண்டது.

மலைதல்—போர்செய்தல்.

கிரவுஞ்சனுந் தாரகனுஞ் செய்தமாயங்கள் மாயாமலத்தைக் காட்டுவன. அகத்தியமுனிவர் ஞானமுடையவராதலால் அம்மலையின் மாயத்தில் மயங்காது உண்மையை உணர்ந்தார். வீரர்களும் பூதகணங்களும் மயங்கினுர்கள். வேற்படையாகிய ஞானசத்தி அவ்விருவரையும் ஒருசேர அழித்து எல்லோரது மயக்கத்தையுந் தெளியவைத்ததென்பது, உயிர்கள் திருவருட்டுணையினுல் மெய்யுணர்ச்சி பெற்று மாயமலத்தினின்றும் நீங்குவதைக் காட்டும்.

★

அஞ்சநடை யார்கதுப்பு மம்மவிணை யுஞ்செயிரில்
கஞ்சனை கடுக்குங் கதிரையே—விஞ்சுபல
மாயத்தா னுடல் வரைபகவை வேல்விடுமு
பாயத்தா னுடற் பதி. (12)

**இதன்பொருள் :—**

*விஞ்சுபல ஆடல் மாயத்தான் வரை—மிகுந்த பல மாயவாடல்களைச் செய்யுங் கிரவுஞ்சனுகியமலை, பக வை வேல் விடும் உபாயத்தான் — பிளந்து அழியும்படி கூரியவேலைச் செலுத்திய தந்திரவிசே டத்தை உடையவனுகிய முருகக்கடவுளது, ஆடற்பதி —வெற்றிபொருந்திய திருப்பதி, அஞ்சநடையார்க துப்பு—அன்னநடையை யுடைய மகளிரது கன்னங் கள், செயிர் இல் கஞ்சனை கடுக்குங் கதிரையே—குற் றமற்ற கண்ணுடியை ஒத்துவிளங்குங் கதிரைப்பதி யே யாகும். அம்மவிணை— அவர்களது தனங்கள், செயிரிற் கஞ்சனை கடுக்குங் கதிரையே—கலவியிற் கலசத்தை ஒத்து விளங்குங் கதிரைப்பதியே யாகும்.*

*இப்பதியில், மகளிரது கன்னங்கள் கண்ணுடி போன்றிருக்கும். தனங்கள் கலசம் போன்றிருக்கும்.* அஞ்சம்—*அன்னம்.* கதுப்பு—*கன்னம்.* கஞ்சனை—*கண் ணுடி.* கஞ்சனை—*கலசம்.* கடுத்தல்—*ஒத்தல்.* செயிர்—*குற்றம்.* செயிர்—*கலவிப்போர்.*

*தாரகனுக்கு விடுத்த வேலினுலே கிரவுஞ்சனை யுங் கொன்றது முருகக்கடவுளது உபாயவிசேட மென்க.*

கிரவுஞ்சம் *என்றது வடமொழிப்பெயர். இதனைத் தமிழ்நூல்கள்* 'குருகுபெயர்க்குன்றம்' *என உரைக்கும்.* குருகு—*அன்றில். அன்றிலுக்குக் கிரவுஞ்சமென் பது வடமொழிப் பெயர்.*

★

வெண்ணகையார் கூந்தலிலும் வேடுவர்கள் காட்டி
கண்ணி வளைக்குங் கதிரையே—நண்ணுங் [னிலுங்
கருமாயச் சூரறுத்துக் காப்பான்கூர் வேலாற்
கருமாயச் சூரறுத்தான் காப்பு. (13)

**இதன்பொருள்:—**

*நண்ணுங் கருமாயச் சூர் அறுத்துக் காப்பான்—உயிர்கள் சென்றடையும் பிறவியின் மயக்கத்தையும் அச்சத்தையும் அழித்து ஞானமருளிக் காப்பவனும், கூர்வேலாற் கரு மாயச் சூரறுத்தான்—கூரியவேலாயுதத்தாற் கரிய வஞ்சனையுடைய சூரனைப் பிளந்தவனு மாகிய முருகக்கடவுளின், காப்பு—காவற்பதி, வெண்ணகையார் கூந்தலில்—வெண்மையான பற்களையுடைய மகளிர் தமது கூந்தலில், கண்ணி வளைக்குங் கதிரையே—சூடுங்கண்ணிகளை வளைவாகச் சுற்றுங் கதிரைப்பதியே யாகும். வேடுவர்கள் காட்டினில்—வேடர்கள் வேட்டையாடுங் காடுகளில், கண்ணிவளைக்குங் கதிரையே—வலைகளை வளைத்துக் கட்டுங் கதிரைப்பதியே யாகும்.*

*இப்பதியில், மகளிர் கூந்தலிற் கண்ணிகளைச் சூடியிருப்பர். வேடர்கள் வலைகளைச் சுற்றிக்கட்டி விலங்குகளை வேட்டையாடுவர்.*

கண்ணி—*தலையிற்சூடும் மாலை. கழுத்திலணியும் மாலை தார் எனப்படும்.* கண்ணி—*வேடர்கள் விலங்குகளைப் பிடித்தற்குக் கட்டும் வலை.* சூர்—*அச்சம்.* சூர்—*சூரன்.* கரு—*பிறவி.* கரு—*கரிய.*

*சிங்கன் இறந்தபின் சூரன் சேனைகளுடன் சென்று சிவகுமாரருடன் போர்செய்தான். வீரவாகுதேவர் முதலிய வீரர்களையும் பூதசேனைகளை*

யும் இந்திரமாஞாலத் தேரினுல் அகப்படுத்திக் கட னடுவே சிறையிட்டான். பலவகையான மாயப் போர்களைச் செய்தான். முருகக்கடவுள் அவனு டைய சேனைகள் முழுவதையுஞ் சிரிப்பினுல் எரித் தார். மாயையின் உதவியால் அவைகள் உயிர் பெற்றன. மீண்டும் முருகக்கடவுள் அவற்றை அழித்தார். சூரன் சேனைகளை இழந்து தனித்து நின்ருன். அப்போது முருகக்கடவுள் தமது உண்மை வடிவத்தைத் தெரியக் காட்டினர். சூர னுக்கு உண்மை புலப்பட்டது. சிறுபாலனென் றெண்ணிய குமரநாயகனின் பெருமையை உணர்ந் தான்.

முருகக்கடவுள் தமதுருவத்தை முன்போல மாற்றிக்கொண்டதுஞ் சூரன் மீண்டும் போரையே தொடங்கினுன். போரில் ஆற்ருதோடி மாமரவடி வாய் வந்தெதிர்த்தான். முருகக்கடவுள் அம் மரத்தை வேலினுற் பிளந்தார். அவன் அழியா வரமுடையோனுதலினுல் பிளவுபட்ட இரு கூறுஞ் சேவலும் மயிலுமாயின. சேவல் முருகப்பெருமா னுக்குக் கொடியாயிற்று. மயில் ஊர்தியாயிற்று. இது சூரனை அழித்த வரலாறு.

சூரனை ஆணவமலமென்று கூறினேம். ஆணவத்திற் குப் பல சத்திகளுண்டு. அவையெல்லாந் திரண்டு திருவருட் குணங்களோடு எதிர்த்தன. சேனைகள்முற்றும் அழிந்தது மலக்குணங்களில் அழிவைக்குறிக்கும். திருவருளின் முன்னே மலவலி குன்றுவதை முருகப்பெருமானின் உண்மைவடி வத்தைக் கண்டசூரன் வலியடங்கி மெய்யுணர்வுபெற்றது காட்டும். ஆணவமலம் அழிவில்லாததென்பதைச் சூரன் அழிந்தொழியாது சேவலும் மயிலுமாய் அடங்கியமைகாட்டும்.

வேலாயுதம் ஞானசத்தி. குருவருளினுல் உண்டாகிய உண்மை ஞானமே ஆணவத்தை வலிகுன்றச்செய்யும் என்பதை முருகப்பெருமானது வேற்படைகாட்டும். இவ்வாறு சூரசங்காரயுத்தம் ஆணவமலநீக்கத்தைக் காட்டுமென்க.

★

இந்துவத னத்த ரிளமுலையும் வீரர்களும்
கந்துகத்தே ரோட்டுங் கதிரையே—முந்தும்
பவமா வினையிடித்தான் பாதனலை மேலுற்
பவமா வினையிடித்தான் பற்று. (14)

**இதன்பொருள்:—**

*முந்தும் பவ மா வினை இடித்தான் பாதன்—உயிர்களின் பிறவிக்குக் காரணமாய் முன்நிற்கின்ற இருவினைகளையும் போக்கி ஆட்கொண்ட திருவடிகளையுடையவனும், அலைமேல் உற்பவ மாவினை இடித்தான்—கடலிற்றேன்றிய சூரனுகிய மாமரத்தைப் பிளந்தவனும் ஆகிய முருகக்கடவுளின், பற்று—விருப்புடைய கோயில், இந்துவதனத்தர் இளமுலை—சந்திரன்போன்ற முகத்தையுடைய மகளிரது இளமையுடைய தனங்கள், கந்துகத்து ஏர் ஓட்டுங் கதிரையே—பந்துகளின் அழகைத் தோற்றேடச்செய்யுங் கதிரைப்பதியே யாகும் வீரர்கள் கந்துகத்தேர் ஓட்டுங் கதிரையே—போர் வீரர்கள் குதிரைபூட்டிய தேரையூர்ந்து செல்லுங் கதிரைப்பதியே யாகும்.*

*இப்பதியில், மகளிரின் இளமையுடைய தனங்கள் பந்தை நிகர்க்கும். போர்வீரர்கள் தேரூர்ந்து செல்வர்.*

பவம்—பிறவி. வினை—நல்வினை தீவினை என்னும் இரண்டும். இவையிரண்டும் பொன்விலங்கும் இரும்புவிலங்கும் போல உயிரைச் சிவகதியடைய விடாது தடுப்பன. ஆதலால் இருவினைகளினும் விருப்பு வெறுப்பின்றிக் குருவருளையுஞ் சிவஞானத்தையுந் துணைக்கொண்டு வினையினின்றும் நீங்குதல் வேண்டும். இடித்தான் பாதன் என்றது முற்றெச்சம். மா—பெரிய. மா—மாமரம். இந்து—சந்திரன். வதனம்—முகம். கந்துகம்—பந்து. கந்துகம்—குதிரை. ஏர்—அழகு.

முருகப்பெருமான் சூரனெதிரே வேற்படையை விடுப்ப அவன் இப்படையை அழிப்பேன் என்று கடனடுவிற் சென்று மாமர வடிவாய் நின்ருன். வேற்படை அவ்வடிவை இருகூறு செய்தது. இது சூரனாகிய மாமரத்தை அழித்தவரலாறு.

★

**மன்னுகா ரிற்கடம்பு மாமணத்தி லாடவருங்**
**கன்னிகையை யேற்குங் கதிரையே—முன்னமலே**
**மாவர சத்தியத்த மால்கொளசுர் மைந்தடக்கு**
**மாவர சத்தியத்தன் வாழ்வு.** (15)

**இதன்பொருள்:—**

முன்னம் மலை — முன்னின்று போர்செய்யும், மா வர சத்தியத்த—பெரிய வரத்தினுற் பெற்ற வலிமையையுடைய, மால் கொள் அசுர்—மயக்கங் கொண்ட சூரனது, மைந்து அடக்கு—வலிமையை அடக்கிய, மா அர சத்தி அத்தன்—பெருமையுடைய சிவபிரானது சத்தியாகிய முருகக்கடவுளது, வாழ்வு

—கோயில், மன்னுகாரிற் கடம்பு—மிகுந்த கார் காலத்திற் பூக்குங் கடப்பமலர்கள், கன்னிகையை ஏற்குங் கதிரையே—இளம்பெண்களின் கையழகைப்பெற்று விளங்குங் கதிரைப்பதியே யாகும். மாமணத்தில் ஆடவர்—மாண்புடைய திருமணத்தில் ஆண்மக்கள், கன்னிகையை ஏற்குங் கதிரையே—கன்னியர்களை இல்லக் கிழத்தியராக ஏற்றுக்கொள்ளுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் கார் காலத்திற் கடப்பமலர்கள் பூக்கும். அவை அங்குள்ள கன்னியர்களின் சிவந்த கையழகை இரந்தேற்றுக் கொண்டவைபோலச் சிவந்த நிறமுடையனவாயிருக்கும். ஆடவர் மகளிரைத் திருமணஞ் செய்துகொள்ளுங் காட்சி அழகாயிருக்கும்.

சூரன் வரம்பெற்ற வரலாறு மேலே கூறப்பட்டது. அவ்வரலாற்றின் உண்மைப் பொருள் விளக்கத்தை ஆசிரியர், "உயிர் கடவுளை வழிபட்டுச் செய்யும் வினைகள் இரண்டுவகைப்படும். ஒன்று பயன் கருதாது செய்யும் நிட்காமிய வினை. அஃது உயிரிற் சிவஞானத்தை உதிப்பித்து அது வாயிலாய் முத்திப்பேற்றைக் கொடுக்கும். மற்றது பயன்களை விரும்பிச் செய்யும் காமியவினை. அஃது இம்மைப் போகங்களையும் சுவர்க்கம் முதலிய மேலுலகப் பதவிகளையுங் கொடுக்கும்; அது சிவஞானம் வாயிலாக முத்தியைக் கொடுக்கமாட்டாது. மலமறைப்பினையுடைய உயிர் போகங்களை விரும்பி வேள்வி முதலிய காமிய வினைகளையே செய்யும். சூரன் முதலியோர் வேள்வி முதலிய காமிய வினைகளையே

செய்து பயனடைந்தார்கள்", எனக் 'கந்தபுராணக் கதைகளும் அவை யுணர்த்தும் உண்மைநாற் பொருளும்' என்னும் நூலிற் கூறுகின்றமை காண்க.

மால்—மயக்கம். மைந்து—வலிமை. அர சத்தி — அரனது சத்தி. அரன்—சிவன். முருகக்கடவுள் சிவனது சத்தியாதலே,

" ஆதலின் நமதுசத்தி யறுமுகன் அவனும் யாமும்
பேதக மன்றால் நம்போற் பிரிவிலன் யாண்டுநின்றான்
ஏதமில் குழவி போல்வான் யாவையும் உணர்ந்தான்சீரும்
போதமும் அழிவில் வீடும் போற்றினர்க் கருளவல்லான்

என்னுந் திருவாக்கால் அறிக.

மன்னுதல்—மிகுதல். கார்—கார்காலம். ஆவணி புரட்டாதி மாதங்கள்.

★

சொற்புலவர் தூக்கினிலுந் தூயமலர்ச் சோலையிலுங்
கற்பு மலருங் கதிரையே---வெற்புடனே
மாமூல வேரறுத்து வாழ்வமரர்க் கீந்தவஞ்ச
மாமூல வேரறுப்பான் வைப்பு. (16)

**இதன்பொருள்:—**

வெற்புடனே—மகேந்திர மலையுடனே, மா மூல வேரறுத்து—அம்மலையிலுள்ள அரக்கர் குலத்தின் பெரியமூலவேராகிய சூரனையும் அழித்து, அமரர்க்கு வாழ்வு ஈந்த—தேவர்களுக்கு அமரவாழ்வை முன் போலக் கொடுத்தவனாகிய, வஞ்ச மாமூல வேரறுப்பான்—உயிர்களது வஞ்சனைமிக்க இருண்மலத்தின் மூலமாகிய அவாவை அறுக்கும் முருகக் கடவுளது,

வைப்பு—ஊர், சொற்புலவர் தூக்கினில்—சொல் வன்மையுள்ள புலவர்களது செய்யுள்களில், கற்பு மலருங் கதிரையே—கற்பனை நயங்கள் விரிந்த பல பொருள்களைக் காட்டுங் கதிரைப்பதியே யாகும் தூயமலர்ச் சோலையில் — தூய்மைவாய்ந்த பூஞ் சோலைகளில், கற்பு மலருங் கதிரையே—முல்லைக் கொடிகள் மலருங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் சொல்வன்மையுள்ள புலவர்கள் கற்பனை நயங்கள் மலர்ந்துள்ள அழகிய செய்யுள் களைப் பாடுவர். சோலைகளிற் கற்பொழுக்கத்தைக் குறிக்கும் முல்லைக்கொடிகள் மலர்ந்திருக்கும்.

தூக்கு—செய்யுள். கற்பு—முல்லைக்கொடி. மகளி ரின் இருத்தலொழுக்கமாகிய கற்பு முல்லைத்திணைக் குரியது. அத்திணைக்குரிய நிலம் முல்லைநிலம். அந் நிலத்திற்குரிய கொடி முல்லைக்கொடி. அதனாலே முல்லைக்கொடியும் கற்பெனும் பெயரைப் பெற்றது.

சூரசங்காரம் முடிந்ததும், முருகக் கடவுள், வருணதேவனை அழைத்து, "இம் மகேந்திரபுரியை இங்குள்ள உயிர்களோடு கடலுள் அழுத்துவாய்," என்று பணித்தருள வருணனும் அவ்வாறே அழித் தொழித்தான் என்பது வரலாறு.

ஆணவம் மூலமலமாதலின் சூரனை மாமூலவேர் என்றார். மும்மலங்களும் முற்றாக அழியவேண்டு மென்பதை, மகேந்திர மலையுடனே அரக்கர்குலம் முழுதுமழிந்த நிகழ்ச்சி காட்டும். தேவர்கள் அமர வாழ்வைப் பெற்றது உயிர்கள் முத்தியடைதலைக் காட்டும்.

மும்மலத் தொடர்பையுங் கூட்டுவிப்பது அவா வாதலின் அதனையும் மூலவேர் என்றார். தவ நிலையிலிருந்த காசிப முனிவர் மாயையிடத்துக் கொண்ட ஆசை மூவுலகையும் நூற்றெட்டு யுகத் திற்கு வருத்தியதுகாண்க. பேரின்பவீட்டை அடைய விரும்புபவன் அவாவை நீக்கிக்கொள்ள, அதுவாயி லாக எல்லாத் தீக்குணங்களும் அகலுமென்க. "ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே, பேரா வியற்கை தரும்" என்பது திருக்குறள். பேராவியற்கை—வீடுபேறு.

★

நல்லார் மதிமுகத்து நாடு முலைமுகத்துங்
கல்லாரம் பூக்குங் கதிரையே—மல்லாடி
வந்தே விடுந்தோரான் மாயவடி வேற்பணித்த
வந்தே விடுந்தோரான் வாழ்வு. (17)

### இதன்பொருள் :—

மல்லாடி வந்து ஏ விடுந்தேரான் மாய—போ ராடி எதிர்வந்து அம்புகளைத் தொடுத்த பகைவ னாகிய சூரன் அழியுமாறு, வடிவேல் பணித்த— கூரிய வேலை ஏவிய, வந்து ஏவிடுந் தேரான்—வாயு தேவன் செலுத்திய தேரையிவர்ந்த முருகக் கடவு ளின், வாழ்வு — கோயில், நல்லார் மதிமுகத்து— பெண்களது சந்திரன்போன்ற முகத்தில், கல்லாரம் பூக்குங் கதிரையே—குவளைமலர்கள் பூக்குங் கதி ரைப்பதியே யாகும். நாடும் முலைமுகத்து—விரும் பப்படுந் தனங்களின்மேல், கல் ஆரம் பூக்குங் கதி ரையே—இரத்தினமாலை பொலியுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் மகளிரது மதிமுகங்களிற் குவளை கள் பூத்துப் பொலியும்; அவர்களது மார்பில் இரத் தின மணிவடங்கள் சிறந்து பொலியும்.

கல்லாரம்—குவளை. ஏ—அம்பு. நேரான்—பகை வன். வந்து—காற்று. பூத்தல்—பொலிதல்.

முருகக்கடவுள் போருக்குச் செல்லும்போது வாயுதேவன் தேர்ப்பாகனுயிருந்து தேரைச் செலுத் தினுனென்பது இதனுற் கூறப்பட்டது.

★

**நற்குணமு ளோருமரு ளுடுசிவ யோகியருங்**
**கற்பங் கடக்குங் கதிரையே—வெற்பரிந்தோன்**
**தூவியா கத்தற் சுமப்பா னருள்புரிந்த**
**மாவியா கத்தன் மலை.** (18)

**இதன்பொருள்:—**

வெற்பு அரிந்தோன்—மலையின் சிறகை அரிந்த இந்திரன், தூவியாகத் தற் சுமப்பான் அருள் புரிந்த—மயிலாகத் தன்னைச் சுமக்குமாறு அருள் செய்த, மாவியாகத்தன் மலை — பெருமைமிக்க விசாகத் திருநாளுக் குரியவனுகிய முருகக்கடவுளது மலை—நற்குண முள்ளோர்—நற்குணமுடைய பெரி யோர், கற்பு அங்கு அடக்குங் கதிரையே—தாங் கற்குங் கல்விப்பயனை உலகியலிற் செலுத்தாது முருகனது திருவடிகளை நினைக்கும் மெய்யுணர்விலே செலுத்துங் கதிரைப்பதியே யாகும். அருள் நாடு சிவயோகியர்—திருவருளைத் தேடுஞ் சிவயோகியர் கள், கற்பங் கடக்குங் கதிரையே—தாய்வயிற்றிற் கருவாகி யுதிக்கும் பிறவிகளைக் கடக்குங் கதிரைப் பதியே யாகும்.

இப்பதியில் நற்குணமுள்ள பெரியோர் தமது அறிவுப்பயனைத் தெய்வ வழிபாட்டிற் கழிப்பர். சிவ யோகியர் தாய்வயிற்றைத் தேடுங் கருப்பவழியிற் செல்லாது தவத்தினுற் பிறப்பறுப்பர்.

கற்பம்—கருப்பம்; எதுகை நோக்கித் திரிந்தது. தூவி—மயில். வெற்பரிந்தோன்—இந்திரன். முன்னொரு காலத்தில் மலைகள் சிறகுடையனவாய்ப் பறந்தன வென்றும் அவற்றின் துயரைப் பொறுக்கலாற்றாத இந்திரன் சிறகுகளை வெட்டினனென்றும் கூறப்படுகின்றது.

முருகக்கடவுள் தேரூர்ந்து போருக்குச் சென்றமை முற்கூறப்பட்டது. அவ்வாறு போர்நிகழும் போது சூரன் சக்கரவாகப் பறவையின் உருவெடுத்துப் போர்புரிந்தான். அப்போது குமரக்கடவுள் பறவையாய் நிற்பவனைத் தேரிலிருந்து பொருதலாகாது என்றெண்ணி இந்திரனை நினைந்தார்; இந்திரன் அக்குறிப்புணர்ந்து மயிலாக வந்து நின்றான். குமரக்கடவுள் அம்மயிலை ஊர்தியாகக்கொண்டு சக்கரவாக மாகிநின்ற சூரனுடன் போர்செய்தார். இஃது இந்திரன் மயிலாகச் சுமந்த வரலாறு.

வியாகம்—விசாகம். முருகக்கடவுள் பிறந்த நாள். கற்பம்—கற்பகாலம் எனப்பொருள்கொண்டு சிவயோகியர்கள் தவத்தினுற் பல கற்பகாலங்களைக் கழிப்பார்கள் எனவும் பொருந்தும்.

★

மாலேறு சோலை மலையருகும் வண்டுகளுங்
காலாறு காட்டுங் கதிரையே—சேலேவை
மாவடுவை வேலைமலை மானோக்கி யார்தழுவு
மாவடுவை வேலை மலை. (19)

**இதன்பொருள்:—**

*சேல் ஏவை மாவடுவை வேலை மலை — சேல் மீனையும் அம்பையும் மாம்பிஞ்சையும் வேற்படையையும் பொருது வென்ற, மான் நோக்கியார் தழுவும்—மான்போலும் மருண்ட நோக்கமைந்த வள்ளி நாயகியாருந் தெய்வயானையாருந் தழுவியிருக்கின்ற, மா அடுவை வேல் ஐ மலை—மாமரத்தை வெட்டிய கூரிய வேலை ஏந்திய தலைவனது மலை, மால் ஏறு சோலை மலையருகு — மயக்க மிகுதியைத் தரும் இருண்ட சோலைகளையுடைய மலைச்சாரல்கள், கால் ஆறு காட்டுங் கதிரையே—சிற்றருவிகளை ஆங்காங்குங் காட்டுகின்ற கதிரைப்பதியே யாகும். வண்டுகள்— அங்குள்ள வண்டுகள் ஆறுகால் காட்டுங் கதிரையே —ஆறு கால்களைக் காட்டுங் கதிரைப்பதியே யாகும்.*

*இப்பதியில் இருண்ட சோலைகளையுடைய மலைச் சாரல்கள் சிற்றருவிகளை யுடையனவாயிருக்கும். அச் சோலைகளில் அறுகால் எனப்படும் வண்டினங்கள் கூட்டங் கூட்டமாக வீழ்ந்து தேனையுண்டு மகிழும்.*

மால்—*மயக்கம்*. ஏ—*அம்பு*. மாவடு—*மாம்பிஞ்சு*. மா—*மாமரம்*. அடுதல்—*பொருதல்*. வை—*கூர்மை*. ஐ —*தலைவன்*.

*வள்ளிநாயகியாருந் தெய்வயானையாரும் இரு மருங்குந் தழுவியிருக்க வெற்றிபொருந்திய வேற்*

படையைத் திருக்கரத்திற் றாங்கி யெழுந்தருளியி ருக்கும் முருகப்பெருமானின் திருமணக்கோலம் இத னுற் கூறப்பட்டது.

முருகப் பெருமான் அம்மையர் இருவரையும் மணஞ் செய்த வரலாறு, பக்குவமடைந்த உயிர்கள் முத்திப்பேற டையும் இருநெறிகளைக் காட்டுவதாகும். தெய்வயானை யம்மையார் திருமணம் மற்கடசம்பந் தத்தை உணர்த்தும். அது தாஞகவே தாயைப் பற்றிக்கொண்ட குரங்குக்குட்டி அத்தாயினுற் காக் கப்படுதல்போல உயிர் இறைவனைத் தேடியடைந்து அவனருளைப் பெறுதல். உலகியலிலுள்ள கற்பு மணமும் இதனுலுணர்த்தப்படும். வள்ளியம்மையார் திருமணம் மார்ச்சால சம்பந்தத்தை உணர்த்தும். அஃது இறைவன் பக்குவமடைந்த உயிரைத் தாஞ கத் தேடிச்சென்று ஆட்கொள்ளுவது. உலகியலி லுள்ள களவுமணமும் இதனுலுணர்த்தப்படும்.

★

**துப்பிதழி யாரிடையுஞ் சூலுடையார் மென்னடையுங்**
**கைப்பிடியை யொக்குங் கதிரையே—செப்புமொழி**
**கண்டடக்குங் கோலம் பகப்பிடிசேர் கற்பகமென்**
**கண்டடக்குங் கோலனமர் காப்பு. (20)**

**இதன்பொருள்:—**

கண்டு அடக்குஞ் செப்புமொழி—கற்கண்டின் இனிமையை அடக்கிய மழலை மொழியாளாகிய வள் ளியம்மையாரும், கோல் அம்பகப் பிடி—அம்பை யொத்த கண்களையுடைய பிடி நடையாளாகிய தெய் வயானையம்மையாரும், சேர் கற்பகம்—இருமருங்குஞ்

சேரநின்ற கற்பகதருப்போன்றவனும், என் கண் டடக்குங் கோலன்—எனது சிறிய புன்கண்கள் தனது பேரொளியைக் கண்டமையால் வேறொன் றையும் நோக்கலாற்ருது தடுமாறும் அழகிய திருக் கோலத்தை யுடையவனும் ஆகிய முருகப்பெருமான், அமர் காப்பு—உறையுங் கோயில், துப்பு இதழி யார் இடை—பவளம் போன்ற சிவந்த வாயினை யுடைய மகளிரது இடை, கைப்பிடியை ஒக்குங் கதிரையே — கையின் ஒருபிடி யளவை ஒத்துச் சிறுத்த கதிரைப்பதியே யாகும். சூல் உடையார் மென்னடை—கருப்பமுடைய மகளிரது தளர்ந்த நடை, கைப்பிடியை ஒக்குங் கதிரையே—துதிக்கை யையுடைய பெண் யானையின் அசைந்த நடையை ஒத்திருக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் மகளிரது சிற்றிடை கைப்பிடியள வினதாய்ச் சிறுத்திருக்கும். கருக்கொண்ட மகளி ரது தளர்ந்த நடை பெண்யானையின் அசைந்த நடையை ஒத்திருக்கும்.

துப்பு—பவளம். சூல்—கருப்பம். பிடி—ஒருபிடி யளவு. பிடி—பெண்யானை. கண்டு—கற்கண்டு. செப்பு மொழி—மழலைமொழி.

கோல்—அம்பு. அம்பகம்—கண். பிடி — பெண் யானை; தெய்வயானையாரைக் குறித்தது. கற்பகம்— கேட்டவற்றைக் கொடுக்குந் தெய்வதரு; தேவருலகி லுள்ளது. வேண்டுவார் வேண்டுவன ஈய வல்லா ஞதலின் முருகப்பெருமான் கற்பகத்தை யொத் தான். இந்திரனது ஐராவதத்தால் வளர்க்கப்பட்

டுத் தெய்வயானையாரெனப் பெயர்பெற்ற அம்மை யாரைத் திருப்பரங்குன்றிலே முருகப் பெருமான் முதற் றிருமணஞ் செய்துகொண்டார். பின், வள்ளி மலையிலே தினைப்புனங் காத்துக் கொண்டிருந்த வள்ளிநாயகியாரைத் திருமணஞ் செய்துகொண்டார். மனைவியர் இருவருக்கும் நடுவே கற்பகதருப்போல வீற்றிருக்கும் முருகப்பெருமானது திருமணக்கோ லத்தை நினைந்து வழிபடும்போது அது கண்ணைத் தடுக்கும் பேரொளியாய்க் காட்சி தருதலின், 'கண்த டக்குங் கோலன்' என்றார். இதுவும் அம்மணக்கோலங் கூறுகின்றது.

★

தண்டைக்கால் கண்டவருந் தானோர்ந்து கொண்டவருங்
கண்ட மறுக்குங் கதிரையே—பண்டொருநாள்
மானிடமா ஞர்க்கு மறைமொழிந்து மானுக்காய்
மானிட மாஞர் வரை. (21)

**இதன்பொருள்:—**

பண்டொருநாள்—முன்னொருநாள், மான் இட மானுர்க்கு மறை மொழிந்து—மான்கன்றை இடக் கரத்திலேந்திய சிவபிரானுக்கு வேதமுதற்பொரு ளைச் சொல்லி, மானுக்காய் மானிடமானுர் வரை— மான்போலுஞ் சாயலையுடைய வள்ளியம்மையாரை மணஞ்செய்தற்கு மானிட வடிவந் தாங்கிய முருகக் கடவுளின் மலை, தண்டைக்கால் கண்டவர்—தண்டை யணிந்த திருவடிகளை வழிபட்டுக் கண்ட மெய்யடியார் கள், கண்டம் அறுக்குங் கதிரையே—தமக்குவரக் கடவதாய் நிற்கும் நீர்க்கண்டம் தீக்கண்டம் முதலி யவற்றைத் திருவருளினல் அகற்றி வாழுங் கதிரைப்

பதியே யாகும். தான் நேர்ந்துகொண்டவர்—தன துயிரையே நேர்த்தியாக நேர்ந்துகொண்ட வன்றொண்டர்கள், கண்டம் அறுக்குங் கதிரையே—கழுத்தை அறுத்து நேர்த்தியை முடிக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் முருகனுக்காட்பட்ட மெய்யடியார்கள் நாள்கோள்களால் வரும் நீர்க்கண்டம் தீக்கண்டம் முதலாய தீப்பலன்களைக் கடந்து நெடுநாளிருப்பர். தமது உயிரையே பலியாக நேர்ந்துகொள்ளும் வன்றொண்டர்கள் கழுத்தறுத்து நேர்த்தியை முடிப்பர். தாமே தங்கழுத்தை அறுத்துக்கொண்டு வீழும் இவர்கள் எவ்வகை மருந்துமின்றி முருகப்பெருமானின் திருநீறுந் தீர்த்தமும் ஆறெழுத்து மந்திரமுமாகிய இம்மருந்துகளால் மீண்டும் உயிர் பெற்றெழுவது மிகப்பெரிய அற்புதமாகும்.

இதுமுதற் பத்து வெண்பாக்களால் வள்ளியம்மையார் திருமணங் கூறப்படும்.

வள்ளியம்மையார், சிவமுனிவரின் நோக்கினற் கருப்ப மெய்திய ஒரு மான் வயிற்றிற் பிறந்தார். வள்ளிக் குழியிலே பிறந்தமையால் அப்பெயர் பெற்றார். வேடர் தலைவனுகிய நம்பியரசன் அக்குழவியை எடுத்து வளர்த்தான். பன்னிரண்டு வயதானதும் தமது குலமுறைப்படி தினைப்புனங் காக்க வைத்தான்.

அம்மையாருக்கு அருள்புரிதலை விரும்பிய முருகப்பெருமான் திருத்தணிகையிலிருந்து நாரதர் வாயிலாக அம்மையாரின் செவ்வியை அறிந்துகொண்டு மானுட வடிவங்கொண்டு அத்தினைப்புனத்துக்கு வந்தார் என்பது ஈண்டுக்கூறப்பட்ட வரலாறு.

★

ஐயர்க் கிகுளை யடைந்தோருக் கில்வாழ்வோர்
கையடை யீயுங் கதிரையே—செய்ய
புலிமரமா ஞன்சேர் பொருப்பிடத்து முன்ஞட்
புலிமரமா ஞன்சேர் பொருப்பு. (22)

**இதன்பொருள்:—**

செய்யபுலி மரமான் ஆன் சேர் பொருப்பிடத்து—செவ்விய நற்பண்புடைய புலிகளும், மரைமான்களும் பசுக்களும் பகையின்றி ஒரிடத்திற் கூடி வாழும் மலைச்சாரலில், முன்னுட் புலிமரம் ஆனன்—முன்ஞெருநாளில் வேங்கைமரமாய் நின்ற முருகக் கடவுள், சேர் பொருப்பு — வள்ளியம்மையாருடன் சேர்ந்துவாழும் மலை, ஐயர்க்கு இகுளை—தலைமகளைத் தமதூருக்குக் கொண்டுசெல்ல விரும்பிய தலைமகனுக்குத் தோழி, கையடை ஈயுங் கதிரையே—தலைமகளை அடைக்கலமாகக் கொடுக்குங் கதிரைப்பதியேயாகும் அடைந்தோருக்கு இல்வாழ்வோர்—தமதில்லத்திற்கு வருபவர்களுக்கு இல்லிருந்து வாழுங் கிழவனுங் கிழத்தியும், கையடை ஈயுங் கதிரையே—கைகளிலேந்திய வெற்றிலைத் தட்டத்தைக் கொடுத்து உபசரிக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் களவியனெறிப்படி தலைமகளைத் தமதூர்க்குக் கொண்டு சென்று மணம் முடித்துக் கொள்ள விரும்புந் தலைமகனுக்குத், தோழி தலைவியைக் கையடைப் பொருளாகக் கொடுத்தனுப்புவாள். இல்வாழ்வோர் தமது இல்லிற்கு வரும் விருந்தினரை வெற்றிலை கொடுத்து உபசரிப்பர்.

வள்ளியம்மையாரது சிற்றூரிலே வாழும் விலங்குகள் பகையின்றி வாழுமென்பார், 'செய்ய புலி மரமான் ஆன் சேர் பொருப்பு' என்ருர். இவற்றுட் பகையைச்செய்

வது புலி; பகையொழிதற்கு அதன் குணம் பதிப் பெருமையால் மாற்றமடைந்தது ஆகலின் 'செய்யபுலி' என்றார்.

தினைப்புனத்திற்கு வந்து அம்மையாரைக் கண்ட முருகப்பெருமான் தமது வேட்கை புலனாகும்படி உரையாடி நின்றார். அப்பொழுது வேட்டுவர் தலைவன் தன் கூட்டத்தாருடன் அங்கு வந்தான். உடனே அவர் ஓர் அழகிய வேங்கை மரமானார். வேட்டுவர் தலைவன், "புதிதாகத் தோன்றிய அம்மரம் நன்மைதரும்", என்று கூறி அம்மையாரின் அச்சத்தைப் போக்கிச் சென்றான். இது வேங்கை மரமாய் நின்ற வரலாறு.

ஐயர்—தலைவர். இகுளை — தோழி. கையடை—அடைக்கலம். அடை—வெற்றிலை. மரமான்—மரைமான். இது சிலேடையும் எதுகையும் நோக்கித் திரிந்தது. ஆன்—பசு. புலிமரம்—வேங்கை.

★

வைத்த படைப்பையிலு மாமணிநீர்ப் பாறையிலுங்
கத்தரி மேவுங் கதிரையே—நத்திச்
சிவவேட மாகித் திருந்திழையைச் சேர்ந்த
சிவவேட ளாதிச் சிலம்பு. (23)

**இதன்பொருள்:—**

திருந்திழையை நத்தி—திருந்திய அணிகலன்களைப் பூண்ட வள்ளியம்மையாரை விரும்பி, சிவவேடமாகிச் சேர்ந்த—சிவனடியார்கள்போல வேடம் பூண்டு சேர்ந்துநின்ற, சிவவேள் தன் ஆதிச்சிலம்பு—சிவமுருகனது பழைய மலை, வைத்த படப்பை

யில்—செய்கையமைந்த புனங்களில், கத்து அரி மேவுங் கதிரையே—ஆரவாரிக்குங் கிளிகள் பொருந் துங் கதிரைப்பதியே யாகும், மாமணிநீர்ப் பாறை யில்—பெரிய அழகிய நீர்ப் பாறைகளில், கத்து அரி மேவுங் கதிரையே—கத்துகின்ற தவளைக் கூட் டங்கள் பொருந்துங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் றினைப்புனங்களிற் கிளிகளும் நீர்ப் பாறைகளிற் றவளைகளும் ஆரவாரஞ் செய்யும். படப்பை என்பதற்குச் சோலையெனப் பொருள் கொண்டு, சோலையில் வண்டுகள் ஒலிக்கும் என்று கூறலுமாம். கத்தரி, ஒருவகைப் பாம்பு எனப் பொருள்கொண்டு, நீர்ப்பாறைகளிற் கத்தரிப் பாம்பு கள் வசிக்கும் எனலுமாம்.

படப்பை—புனம். மணி—அழகு. அரி—கிளி. அரி— தவளை, வேள்—முருகக்கடவுள். சிலம்பு—மலை.

வேங்கை மரமாய் நின்ற பெருமான் அவ் வேடர்கள் சென்றபின் மீட்டும் மானுட வடிவங் கொண்டு அம்மையாருடன் உரையாடி நின்றார். வேட்டுவர் தலைவன் பின்னரும் வந்தான். அப்போ தவர் ஒரு முதிய சிவனடியார்போல வேடந் தாங்கி வேட்டுவர் தலைவனை ஆசீர்வதித்தார். அவன் "இப் பெரியார் நுமக்குத் துணையாக இருப்பாராக" என்று அம்மையாருடன் விடுத்துச் சென்றான். இது சிவவேடம்பூண்ட வரலாறு.

சூரசங்காரகாலமுதலாக முருகக்கடவுளுக் குரிய மலையாதலின் "ஆதிச் சிலம்பு" என்றார்.

★

கொண்டுபொருள் விற்போருங் கூறுசெபஞ் செய்வோருங்
கண்டிகையிற் சுற்றுங் கதிரையே—பண்டொருநாண்
மாப்பிடியை யுண்டநடை வள்ளியள்ளி யீந்ததினை
மாப்பிடியை யுண்டான் மலை. (24)

**இதன்பொருள்:—**

*மாப்பிடியை உண்ட நடை வள்ளி—பெரிய பிடியானையின் நடையழகை விழுங்கிய அசைந்த நடையையுடைய வள்ளியம்மையார், அள்ளி ஈந்த தினைமாப் பிடியை—அள்ளி யள்ளிப் பிடித்துக் கொடுத்த தினைமாவுருண்டைகளை, பண்டொருநாள் உண்டான் மலை—முன்னொருபோது திருவமுது செய்தருளிய முருகக்கடவுளது மலை, பொருள்கொண்டு விற்போர்—பண்டங்களைக் கொண்டுசென்று விற்கும் வணிகர், கண் திகையிற் சுற்றுங் கதிரையே—தமது கண்பார்வையை நான்கு திசைகளிலுஞ் சுற்றி நோக்குங் கதிரைப்பதியே யாகும். கூறு செபஞ் செய்வோர்—மேலாகக் கூறப்படுஞ் செபத்தைச் செய்கின்ற யோகியர், கண்டிகையிற் சுற்றுங் கதிரையே—உருத்திராக்க மாலையில் உச்சரிக்கும் மந்திரங்களை எண்ணிச் சுற்றுகின்ற கதிரைப்பதியே யாகும்.*

*இப்பதியிற் பொருள்களைச் சுமந்து செல்லும் வணிகர் வீதிகளின் நாற்றிசையுங் கூர்ந்து நோக்கிக் கொள்வோருளரோவென அறிந்தறிந்து செல்வர். மேலான செபத்தை யுடைய யோகியர்கள், தாம் உச்சரிக்கும் மந்திரங்களின் எண்ணிக்கையை அறிதற்கு உருத்திராக்க மாலையைச் சுற்றிச் சுற்றி எண்ணிக்கொண்டிருப்பர்.*

பொருள்—பலவகையான விலைப் பொருள்கள். கண் திகையிற் சுற்றுதல்—பல திசைகளையும் நோக்குதல். திகை—திக்கு. கண்டிகை—உருத்திராக்கம்.

வேட்டுவர் தலைவன் சென்றவுடன் முருகப் பெருமான் மீண்டுஞ் சொல்லத் தொடங்கினர். முதியோராகிய தம்மைப் பசியுந் தாகமும் மிகுந்து வாட்டுகின்றன வென்றார். அதனைக் கேட்ட அம்மையார் தாமுண்ணுதற்கு வைத்திருந்த இனிய தினைமாவைக் குழைத்துப் பிடித்துக் கொடுத்துப் பசியைத் தணிவித்துப், பின் சுனைநீரை உண்பித்துத் தாகத்தையுந் தீர்த்தார் என்பது ஈண்டுக் கூறப்பட்ட வரலாறு.

★

சொற்கிளியை யோட்டுபசுந் தோகையரு மாய்ச்சியருங்
கற்கரத்தைச் சுற்றுங் கதிரையே—நற்புனமே
வாசுகமே வென்றவிழி வள்ளியைய டைந்தெனுடன்
வாசுகமே வென்ருன் வரை. (25)

**இதன்பொருள்:—**

நற்புனம் மேவு—நல்ல தினைப்புனத்திற் காவலிருக்கின்ற, ஆசுகமே வென்ற விழி—கூரியதாகிய அம்பையே வென்ற கூரிய கண்களையுடைய, வள்ளியை அடைந்து—வள்ளியம்மையாரை அணுகி, என்னுடன் வா சுகம் மேவு என்ருன் வரை—பெண்ணே! நீ என்னுடன் வந்து சேர்ந்து இன்பத்தைப் பெறுவாய் என்று கூறிய முருகக்கடவுளது மலை, சொற்கிளியை ஓட்டு பசுந் தோகையர்—பேசுங் கிளிகளைத் துரத்தும் பசிய மயில்போலுங் குறமகளிர், கற்கரத்தைச் சுற்றுங் கதிரையே—

கவண்கற்களைப் பற்றிய கைகளை விரைந்து சுற்றுங் கதிரைப்பதியே யாகும். ஆய்ச்சியர்—இடைச்சியர், கற்கரத்தைச் சுற்றுங் கதிரையே—மத்தினைக் கடைகயிற்றினுற் சுற்றி வலிக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் புனங்காக்குங் குறத்தியர் குறிதவருது விரைந்தெறிதற்குக் கற்களைக் கவணிலிட்டுச் சுழற்றுவர். இடைச்சியர் மத்தைக் கடைகயிற்றினுற் சுற்றி வலித்து மோர் கரைப்பர்.

கற்கரம்—மத்து. புனம்—தினைப்புனம். ஆசுகம்—அம்பு. கூர்மையான் மிக்கது அம்பு. அதனையே வென்றவிழி என ஏகாரந் தேற்றங் குறித்தது.

இத்திருப்பதி குறிஞ்சியும் முல்லையும் விரவின நிலத்திலிருத்தலால் இருநிலத்து மகளிரையுங் கூறினுர்.

வள்ளியம்மையார் குழைத்துக் கொடுத்த தினை மாவை யுண்டு சுனைநீரைப் பருகியபின் முருகப் பெருமான் அம்மையாரை நோக்கிப், "பெண்ணே! பசியுந் தீர்ந்தது. தாகமுந் தணிந்தது. ஆயினும் என் தளர்ச்சி தவிர்ந்திலது. அதுவுந் தவிருமாறு என்னைச் சேர்ந்து மகிழுவாய்", எனக் குறையுற்று நின்ருர் என்பது ஈண்டுக் கூறப்பட்ட வரலாறு.

★

நல்லார்கள் கந்தரமு நாறுமலர்ப் பூந்தடமுங்
கல்லாரங் காட்டுங் கதிரையே—அல்லல்கெட
மாதேவா வென்றூர் வினைதுடைத்து வள்ளிபின்போய்
மாதேவா வென்றூர் மலை. (26)

**இதன்பொருள்:—**

அல்லல்கெட—தமது துன்பங்கள் கெடும் வண்ணம், மாதேவா என்றூர் வினை துடைத்து—பரம் பொருளாகிய கடவுளே! நீயே துணை என்று வழி படும் அடியவர்களது தீவினைகளைப் போக்கி, வள்ளி பின் போய்—வள்ளியம்மையார் பின்னே சென்று, மாதே வா என்றூர் மலை—"பெண்ணே! என்னைத் தனியிடத்தில் விட்டுச் செல்லாதே வந்தருள்வாய்", என்று வேண்டிக்கொண்ட முருகக்கடவுளது மலை, நல்லார்கள் கந்தரம் — மகளிரது கழுத்து, கல் ஆரங் காட்டுங் கதிரையே—ஒன்பதுவகை இரத்தி னங்களும் பதித்த இரத்தின மாலைகளை அணிந்து அழகின் மிகுந்து காட்டுங் கதிரைப்பதியே யாகும். நாறும் மலர்ப் பூந்தடம்—மணங்கமழும் மலர்களை யுடைய தடாகங்கள், கல்லாரங் காட்டுங் கதிரையே —செங்குவளை மலர்களைக் காட்டுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் நவரத்தின மாலைகளை அணிவதி னலே மகளிரின் கழுத்துப் பொலிவடைந்து காட்டு கின்றது. செங்குவளை மலர்களை மிகுதியாக மலர் தலினற் றடாகங்கள் பொலிவடைந்து காட்டுகின் றன.

கந்தரம்—கழுத்து. நாறுதல்—கமழுதல். கல்லாரம்— செங்குவளை.

சுனைநீர் காட்டச் சென்ற அம்மையாருக்கு முருகப்பெருமான் தமது வேட்கை யுரைத்துக் குறையுற்று நின்ற வரலாறு மேலே கூறப்பட்டது. அங்ஙனங் குறையுற்ற பெருமானுக்கு முன்னே நிற்றற்கு நாணிய அம்மையார் புனத்தை நோக்கி விரைந்து நடந்தார். அதனைக்கண்டு ஆற்றாதவராகிய முருகப்பெருமான் பின்னே சென்று, "பெண்ணே! என்னைத் தனியிடத்தே விட்டுச் செல்லாதே. மீண்டு வந்து என்குறை முடித்து மகிழ்விக்க வேண்டும்", என்று பரிவுடனழைத்தார் என்பது ஈண்டுக் கூறப்பட்ட வரலாறு.

★

**மட்டுவிரி தாழைகளும் வாய்த்தநடைத் தொண்டர்களுங்**
**கட்டுச்சோ றேந்துங் கதிரையே—யுட்டெளிவால்**
**ஐயவா வென்றார்க் கருளியொரு மான்பிடிக்க**
**ஐயவா வென்றா ரகம். (27)**

**இதன்பொருள்:—**

உட்டெளிவால் ஐயவா வென்றார்க்கு அருளி—அறிவுத் தெளிவினாலே ஐம்புலன்களிலுஞ் செல்கின்ற அவா வைந்தினையும் வென்ற மெய்யடியார்களுக்குத் திருவருள் சுரந்து, ஒரு மான் பிடிக்க—ஒப்பற்ற மான்கன்று போலும் அம்மையாரைப் பெறுதற்கு, ஐய! வா என்றார் அகம்—ஐயனே! வருவீராக என்று விநாயகப் பெருமானை வேண்டிய முருகக்கடவுளது மலை, மட்டுவிரி தாழைகள்—மணங் கமழுந் தாழைச் செடிகள், கட்டுச்சோறு ஏந்துங் கதிரையே — திரண்ட பூஞ்சுண்ணத்தை ஏந்துங் கதிரைப்பதியே யாகும். வாய்த்த நடைத் தொண்

டார்கள்—கால் நடையாக யாத்திரை செய்யுந் தொண்டர்கள், கட்டுச் சோறேந்துங் கதிரையே—வழியுணவாகிய கட்டுச்சோற்றைச் சுமந்து செல்லுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் ரூழைச்செடிகள் பூஞ்சுண்ணத்தினை யேந்திநிற்கும். கால் நடையாக யாத்திரை செய்யுந் தொண்டர்கள் வழியுணவாகிய கட்டுச் சோற்றைச் சுமந்து செல்வர்.

மட்டு — மணம். சோறு—பூஞ்சுண்ணம். கட்டுச் சோறு—பொதிசோறு.

இப்பதிக்குக் கால்நடையாக யாத்திரை செய்யும் மெய்யன்பர்கள் முருகப்பெருமானருளிய கட்டளைப்படியே, குறித்த நாளில் விரதமிருந்து உலக போகங்களைச் சிந்தியாது, முருக மந்திரங்களை ஓதிக்கொண்டும் புகழ்மாலைகளைப் பாடிக்கொண்டும் பத்தி வெள்ளத்தில் நீந்தியவராய்ச் செல்வர். இவ்வாறு அவனருள்பெற்று நடந்துசெல்லும் பெரும்பேறு வாய்க்கப்பெறுதல் அரிதினு மரிதாதலின் 'வாய்த்த நடைத் தொண்டர்கள்' என்றார். பிரயாண வசதியில்லாத பண்டைநாளில், அவனருளை எதிர்நோக்கியிருந்து, உத்தரவு கிடைத்ததும் நடைவருத்தமறியாது கொடிய விலங்கினங்கள் வாழுங் காட்டு வழியை எளிதாக நடந்துசென்று தாம் விரும்பியவாறே திருவருள் கைகூடப்பெற்ற மெய்யடியார்கள் பலருடைய வரலாறுகள் செவிவழக்கிற் கூறப்படுகின்றமை அறிக.

உட்டெளிவு—மனத்தெளிவு. மெய்யுணர்ச்சியினல் மனந்தெளிவடையும்.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் எனப் புலன்கள் ஐந்தாம். உலக போகங்களில் மயங்கும் உயிர் புலன்களாற் பெறப்படுஞ் சிற்றின்பத்தை விரும்பி நுகரும். மெய்யுணர்ச்சியினுல் அச்சிற்றின் பத்தின் நிலையாமையை அறிந்து ஐந்தாகிய ஆசையை அடக்கிய மெய்ஞ்ஞானிகளுக்குத் திருவருள் கைகூடுமென்க.

மான் என்றது வள்ளியம்மையாரை. முருகப் பெருமான் தம்மைப் பின்ருெடர்ந்து வருவதைக் கண்ட அம்மையார் விரைந்து செல்ல அவர் செலவு புள்ளிமான் மருண்டோடியது போலக் காட்சிதருதலின் மான் என்ருர்; உவமையாகுபெயர்.

வள்ளியம்மையார் தினைப்புனத்தை நோக்கிச் செல்வதைக் கண்டு ஆற்ருது வருந்திய முருகப் பெருமான் விநாயகக் கடவுளை நினைந்தார். "அண்ணலே! இப்போதெழுந்தருளி எனது வருத்தந் தணியுமாறு இக்குறமகளைக் கூட்டுவித்தருள்க" என்று வேண்டினர். விநாயகக் கடவுள் உடனே காட்டு யானையாகிப் புனத்தையும் அழித்து அம்மையாரெதிரே வந்தார். அம்மையார் அஞ்சி நடுங்கி விரைந்தோடிச் சென்று முருகப் பெருமானின் அழகிய புறமுதுகில் அணைந்து தோள்களைப் பற்றிக்கொண்டார் என்பது வரலாறு.

★

கும்பமுலை மங்கையருங் கோதிலடி யாருமுருக்
கம்பிடித் தார்க்குங் கதிரையே—இம்பர்
வடக்கோடு வையகத்தன் மைத்துனன்மால் யானை
வடக்கோடு வையகத்தன் வாழ்வு. (28)

**இதன்பொருள் :—**

இம்பர் வடக்கு ஓடு வையகத்தன் மைத்துனன்—இந்த மண்ணுலகில் வடக்குத் திக்கை நோக்கி ஓடுந் தென்றலாகிய தேரையுடைய மன்மதனுக்கு மைத்துனனும், மால்யானை வடக்கோடுவை அகத்தன்—பெரிய யானை வடிவெடுத்த விநாயகப் பெருமான் மணிவடஞ் சுற்றப்பட்ட கொம்புகளை அழுத்திய மார்பை யுடையவனும் ஆகிய முருகக் கடவுளின், வாழ்வு—கோயில், கும்பமுலை மங்கையர்—குடத்தையொத்த தனத்தையுடைய மகளிர், உருக் கம்பு இடித்து ஆர்க்குங் கதிரையே—சிவந்த தினையை இடித்து ஆரவாரஞ் செய்யுங் கதிரைப் பதியே யாகும். கோது இல் அடியார்—குற்றமற்ற மெய்யடியார்கள், உருக்கம் பிடித்து ஆர்க்குங் கதிரையே—மெய்யுருக்கத்தினால் விதிர்விதிர்ப்புண்டாகி ஆரவாரஞ் செய்து வழிபடுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் அழகிய குறமகளிர் செந்தினையை இடிக்குந் தொழிலில் ஆரவாரமுடையவராயிருப்பர். அடியார்கள் மெய்யரும்பி விதிர்விதிர்த்து உருக் கொண்டு ஆரவாரஞ் செய்து வழிபடுவர்.

கும்பம்—குடம். கோது—குற்றம். உரு—நிறம். ஈண்டுச் செந்நிறத்தைக் குறித்தது. உருக்கம்—உருகுந் தன்மை. அன்புமிகுதியினாலே மெய்யுருகி விதிர் விதிர்ப்படையும்போது ஆரவாரத்தோடு கூடிய

சன்னதமுண்டாகும். இம்பர்—இவ்வுலகம். மன்மதன் தென்றலைத் தேராக உடையவன்; அவன் திருமாலின் மகனுதலின் முருகப்பெருமான் அவனுக்கு மைத்துனராயினர்.

தென்றல் தெற்கே பிறந்து வடக்கே வீசுதலின் வடக்கோடு வையகம் எனப்பட்டது. வையகம்—தேர்.

வடக்கோடு—மணிவடஞ் சுற்றப்பட்ட கொம்பு. அகம்—மார்பு.

வள்ளியம்மையார் முருகக்கடவுளின் பின்னே தழுவி நிற்க விநாயகராகிய களிறு அவர்மார்பிற்றன் கொம்புகள் அழுந்த முன்னே வந்து தாக்கியது. இவ்வழகிய காட்சி,

"அன்னதொரு காலை யறுமா முகக்கடவுண்
முன்னொருசார் வந்து முதுகளிற்றின் கோடொற்றப்
பின்னொருசார் வந்து பிடியின் மருப்பூன்ற
விந்நடுவே நின்ரு னெறுழ்வயிரத் தூணேபோல்"

எனக் கந்தபுராணத்தில் வருணிக்கப்பட்டமை காண்க.

★

கொட்டிக் குளத்தலவன் கூறுகற்பி னோர்கணவன்
கட்டளையில் வாழுங் கதிரையே—இட்டிடையாய்!
பூந்தழைசேர் கஞ்சப் புரிகுழலாட் கிவ்வரிய
மாந்தழைசே ரென்ருன் வரை. (29)

**இதன்பொருள்:—**

இட்டிடையாய்!—சிற்றிடையை யுடைய தோழியே!, பூந்தழைசேர் கஞ்சப் புரி குழலாட்கு—

பொலிவாகிய தளிர்களைச் சேர்த்துக் கட்டிய தாம ரைக் கண்ணி சூடிய சுருண்ட கூந்தலையுடைய தலைவிக்கு, இவ்வரிய மாந்தழை சேர் என்றான் வரை—இந்த அரிதிற் கிடைத்த மாந்தழையைக் கொடுப்பாய் என்று கொடுத்த முருகக்கடவுளது மலை, கொட்டிக் குளத்து அலவன் — கொட்டி படர்ந்த குளத்திலுள்ள நண்டுகள், கட்டு அளையில் வாழுங் கதிரையே—குளக்கட்டின் இடிந்த பொந்து களில் வாழுங் கதிரைப்பதியே யாகும். கூறு கற்பி னோர்—மேலாகச் சொல்லப்படுங் கற்புநெறி தவ றாத மகளிர், கணவன் கட்டளையில் வாழுங் கதி ரையே—நாயகனது சொற்கடவாது வாழுங் கதி ரைப்பதியே யாகும்.

இப்பதியில் நண்டுகள் குளக்கட்டின் பொந்து களில் வாழும். மகளிர் கணவன் கட்டளை கடவாத கற்பொழுக்கம் பூண்டு வாழ்வர்.

**கோட்டி**—நீரிலுண்டாகும் ஒரு பூண்டு. **இட்டிடை**—சிற்றிடை. **இட்டு**—சிறிது. **பூ**—பொலிவு. **தழை**—தளிர். **கஞ்சம்**—தாமரை. தாமரை யிதழ்களுந் தளி ரிலைகளுஞ் சேர்த்துக் கட்டப்பட்ட கண்ணிசூடிய கூந்தலையுடைய வள்ளியம்மையார் என்றவாறு.

களிற்றுக்கும் பிடிக்குமிடையே நின்ற முருக வேள், "அண்ணலே! உமது வரவால் எனது தளர்வு தீர்ந்தது. இனி மீண்டருளுக," என அக் காட்டுயானை மீண்டு சென்றது. அதன்பின் முருக வேள் அம்மையாரைக் கலந்து மகிழ்ந்து தினைப் புனஞ் செல்ல விடுத்தார். மறுநாட் போழியின் வாயிலாகச் சேர்ந்தார். இவ்வாறு சில நாள்கள்

சென்றன. தினைக்கதிர் கொய்யப்பட்டமையால் அம்மையாரின் காவலும் முற்றியது. அம்மையார் தமது சிறு குடிலில் வைகினர். முருகவேள் வெறும் புனத்தைக்கண்டு பலவாறு புலம்பி மனங் கவன்ருர். தாம் கொண்டுவந்த தழையைச் சிறைப்புறமாக நின்ற தோழியிடங் கொடுத்து உடன்போக்கிற்கு அவளுதவியை வேண்டினர் என்பது வரலாறு.

முருகப்பெருமான் தான் கொண்டுவந்த தழையைப் புகழ்தற்கு இவ்வரிய மாந்தழை என்ருர். இனி நுமதூரிற் கிடைத்தற்கரிய இத்தழையை அணியினும் ஐயத்திற் கிடமாகித் துன்பந் தரும்; அணியாதொழியினும் அது வாடியழியுமெனத் துன்பமுண்டாம்; இத்துன்பம் எவ்வாறு தீருமெனச் சிந்திப்பீராயின், அஃது உடன்போக்கிளுற் றீரும்; ஆதலின் அதற்கு உடன்படுதல் வேண்டுமென்பதோர் குறிப்புந் தோன்ற இவ்வாறு கூறினரென்க.

இத்தழை கச்சிப்பதியில் அற்புதமாகிய வேதவடிவுடன் விளங்குங் காஞ்சிமாவின் தழையென்பது மேல்வரும் வெண்பாவிற் கூறப்படும்.

★

பேசுகா ணிக்கையிடும் பேருமலை வாணர்களுங்
காசறையிற் சேர்க்குங் கதிரையே—தூசங்
கொருகுருந்து கொண்டாண் டொழித்தான் தங்கச்சித்
தருகுருந்து கொண்ட தலம். (30)

**இதன்பொருள்:—**

தூசு—சூரனது தூசிப்படையை, அங்கு ஒரு குருந்து கொண்டு—சரவண வாவியில் ஒரு குழந்தை

வடிவாய்த் தோன்றி, ஆண்டு ஒழித்தான்—மகேந்திர மாகிய அவ்விடத்தில் வேரற அழித்தவனாகிய முருகக்கடவுள், தம் கச்சித் தரு குருந்து கொண்ட தலம்—தமது காஞ்சி நகரத்து மாவின் தழையைக் கொண்டுசென்ற விடம், பேசு காணிக்கை இடும் பேர் — முருகப் பெருமானுக்கென்று சொல்லிக் கொண்ட காணிக்கைப் பொருளைக் கொடுப்போர்கள், காசறையிற் சேர்க்குங் கதிரையே—தாம் கொடுக்கும் பணத்தை உண்டியலிற் சேர்க்குங் கதிரைப்பதியே யாகும். மலைவாணர்கள் — வேடர்கள், காசறை இற் சேர்க்குங் கதிரையே—கத்தூரி மான்களை வீடுகளிற் கட்டி வளர்க்குங் கதிரைப் பதியே யாகும்.

இப்பதியில் அடியார்கள் தாம் கொடுக்குங் காணிக்கைப் பணத்தை நிதிப்பேழை யென்னும் உண்டியலிற் போடுவார்கள். வேடர்கள் தமது சிறு குடிலிற் கத்தூரி மான்களைக் கட்டி வளர்ப்பார்கள். காணிக்கை — கையுறை. மலைவாணர் — வேடர். காசறை—கத்தூரிமான். தூசு — தூசிப்படை. அங்கு, ஆண்டு, என்பன முறையே சரவணப் பொய்கையையும், மகேந்திர மலையையுஞ் சுட்டி நின்றன. குருந்து—குழந்தை வடிவம். கந்தபுராணத்திற் சூரன் முருகப்பெருமானைச் சிறுபாலனென்று பலவிடங்களிலுங் கூறுதல் காண்க.

கச்சி—காஞ்சி. தெய்வதருவாகிய கற்பகதருப் போல அற்புதமுடைமையின் கச்சித்தரு என்றார்.

குருந்து—குருத்து. முருகப்பெருமான் வள்ளியம்மையாருக்கு மாந்தழைகளைக் கொடுத்த தலம் கதிரை யென்றது பொருந்துமோவெனின்?

தொண்டை நாட்டிலுள்ள வள்ளிமலையில் நிகழ்ந் தனவாகிய வள்ளி திருமண நிகழ்ச்சிகளைக் கதிரை மலையிலுள்ள ஏழுமலைகளி லொன்றாகிய வள்ளி மலையில் நிகழ்ந்தனவாகக் கூறுஞ் செவிவழக் கிருந்து வருதலின் அவ்வாறு கூறினரென்க. மேல் வருஞ் செய்யுளிலும் அவ்வாறே கூறுதல் காண்க

★

வேட்டுவனைக் கேட்டதுநீர் வேட்டுவினைய் வேண்டியதுங்
காட்டுவா வாகுங் கதிரையே—நாட்டமுடன்
தாமரையா மத்துத் தனித்துவள்ளி யைக்கொளும்பொற்
றாமரையா மத்தர் சரண். (31)

**இதன்பொருள்:—**

நாட்டமுடன் அரை யாமத்து—மிகுந்த விருப் பத்துடன் இடையிருள் யாமத்தில், தாம் தனித்து வள்ளியைக் கொள்ளும்—தாம் ஒருவராய்த் தனியே சென்று அம்மையாரைக் கொண்டுசென்ற, பொற் றாமரையாம் அத்தர் சரண்—பொற்றாமரை மலர் போலுஞ் செம்பொற் கரங்களை யுடைய முருகப் பெருமான் வேட்கையாற் றளர்வெய்தி அம்மையா ரிடஞ் சரண்புகுந்த தலம், வேட்டுவனைக் கேட்டது —அப்பெருமான் வேட்டுவக் கோலம் புனைந்து சென்று அம்மையாரிடங் கேட்டது, காட்டு உவா ஆகுங் கதிரையே—காட்டுயானை யாகுங் கதிரைப் பதியே யாகும். நீர் வேட்டு வினைய் வேண்டியது— அப்பெருமான் நீர்வேட்கை யுடையார்போல அம் மையாரிடங் கேட்டுப் பெற்றது, காட்டு உவா ஆகுங் கதிரையே—காட்டிலுள்ள சுனைநீர் ஆகுங் கதிரைப் பதியே யாகும்.

இப்பதியிலுள்ள வள்ளிமலையில் வள்ளிநாயகி யாருந் தோழியு மிருந்தபோது, முருகப்பெருமான் வேழம் வினவிச் சென்று அம்மையாரைத் தோழி வாயிலாகச் சேர்ந்தார். நீர்வேட்கை யுடையார்போல அம்மையாரிடஞ் சுனைநீர் பெற்றுப் பருகினர்.

உவா—யானை. உவா—கடல்நீர். காட்டு உவா என அடையடுத்தமையாற் சுனைநீரைச் சுட்டியது. நாட்டம்—விருப்பம். அரையாமம்—நடுச்சாமம். கோள்ளும்—கொளும் என விகாரத்தாற் றொக்கது. அத்தம்—கை.

முதனாள் விநாயகப் பெருமானைத் துணைக் கொண்டு அம்மையாரைச் சேர்ந்த முருகப்பெருமான், இரண்டாநாள் தோழியுமுடனிருத்தல் கண்டு, அம்பும் வில்லுமேந்திக் கச்சுடை யணிந்த வேட்டுவக் குமாரனாய்ச் சென்று, "மங்கை நல்லீர்! யான் எய்த அம்பினாற் பரந்த இரத்தமும் முழங்குகின்ற பிளந்த வாயும் புண்பட்ட மேனியுமாய் ஓர் யானை இவ்வழி வந்தது கண்டீரோ? சொல்லுவீராக", என்று வேழம் வினவி நின்றார் என்பது வேழம் வினவிய வரலாறு. சுனைநீர் பெற்ற வரலாறு மேலே கூறப்பட்டது. இது நிற்க.

தினைக்கதிர் கொய்யப்பட்டபின் சிறுகுடிலில் வைகிய அம்மையாரைக் காணப்பெறாத முருகப் பெருமான் வெறும் புனத்தில் வருந்தி நின்று, பின் தோழிவாயிலாக அம்மையாரைப் பெற்று இடையிருள் யாமத்தில் ஆண்டிருந்த காவலையுங் கடந்து சிற்றூரை நீங்கி ஒரு பூஞ்சோலையில் இருந்தார். பொழுது விடிந்ததுஞ் சிறுகுடியிலுள்ளார் அம்மை

*யாரைத் தேடுவாராகி முருகப்பெருமானுடன் செல்லக் கண்டு எதிர்த்துப் பொருதனர். எதிர்த்தோர் யாவருஞ் சேவலின் நாதத்தாலழிந்து அம்மையாரால் எழுப்பப்பட்டனர். அதன்பின் அம்மையார் திருமணம் நிகழ்ந்த தென்பது வரலாறு.*

இத்திருமண வரலாற்றில் அம்மையார் பிறந்தது, உயிர் பிறவியெடுப்பதைக் குறிக்கும். தினைப்புனத்தில் வளர்ந்தது, அது தன்னியல்பை மறந்து போகங்களை நுகர்வதைக் குறிக்கும்; பன்னிரண்டாண்டுப் பருவமடைந்தது, இருவினையொப்பினுற் பக்குவமடைதலைக் குறிக்கும். முருகக்கடவுள் அம்மையாரைத் தேடிச் சென்றது, கடவுள் பக்குவமடைந்த உயிர்க்குக் குருவடிவா யருளுதலைக் குறிக்கும். வேட்டுவ ராசன் இடையிடையே வந்தது, தத்துவங்களின் சேட்டையைக் குறிக்கும். வேங்கை மரமானது, அச்சேட்டை நீங்குமாறு இறைவன் ஞானமருளுதலைக் குறிக்கும். தேனுந் தினைமாவும் நீருங் கொடுத்தது, உயிர் தன்னையும் உடல் பொருள்களையும் இறைவனுடைமைகள் எனக் கருதும் ஆன்ம தரிசனத்தைக் குறிக்கும். விநாயகப்பெருமான் முழங்கிக் கொண்டு யானையாக வந்தது, இடையிலுண்டாகுந் தற்போதங்கெட இறைவன் பிரணவ மந்திரோபதேசஞ் செய்வதைக் குறிக்கும். அம்மையாரைக் கலந்து உண்மை வடிவங் காட்டியது, சிவதரிசனத்தைக் குறிக்கும். தோழியாற் கூட்டப்பட்டது, திருவருள் சிவபோகத்திற் கூட்டிவைப்பதைக் குறிக்கும். வேட்டுவராச னெதிர்த்தது, பழக்க வாசனையால் உயிர் சிவபோகத்தில் அலைப்புண்ணுதலைக் குறிக்கும். திருமணம், உயிர் சிவபோகப் பெருவாழ்வடைதலைக் குறிக்கும். *இவ்வாறு இதன் உண்மை நாற்பொருளை விரித்துரைக்க.*

★

செம்பொனளிப் போர்கரமுஞ் சேயிழையார் கந்தரமுங்
கம்பொருவுஞ் சீர்சால் கதிரையே—பம்புவலி
போகத் திருந்தார் புரமழித்தார் வள்ளியுடன்
போகத் திருந்தார் புரம். (32)

**இதன்பொருள்:—**

பம்புவலி போகத் திருந்தார் புரம் அழித்தார்—மிகுந்த வலிமுற்றுங் கெடப் பகைவர்களது நகரங்களை அழித்தவரும், வள்ளியுடன் போகத்திருந்தார்—வள்ளியம்மையாருடன் இன்பம் நுகர்ந்திருந்தவருமாகிய முருகக்கடவுளின், புரம்—நகரம், செம்பொன் அளிப்போர் கரம்—சிவந்த பொற்காசுகளை ஏழைகளுக்குத் தருமஞ் செய்வோரது கைகள், கம் பொருவுஞ் சீர்சால் கதிரையே—மேகத்தை ஒத்த சிறப்பமைந்த கதிரைப்பதியே யாகும். சேயிழையார் கந்தரம்—மகளிரது கழுத்து, கம்பு ஒருவுஞ் சீர்சால் கதிரையே—சங்கை விலக்கும் அழகு சான்ற கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற், சிவந்த பொன்னைத் தருமஞ் செய்யும் வள்ளல்களது செங்கரங்கள் மேகத்தை யொத்தனவாய் வரையாது வழங்குவனவாகும். மகளிரது கழுத்துச் சங்குபோல மெல்லிய வரைகளை யுடையதாய் அழகுடன் விளங்கும்.

சேயிழையார்—மகளிர். கந்தரம்—கழுத்து. கம்—மேகம். கம்பு—சங்கு. ஒருவுதல்—விலக்குதல். பம்பு வலி — மிகுந்த வலி. திருந்தார் — பகைவர். புரம் — நகரம்.

இது முருகக்கடவுள் வள்ளியம்மையாருடன் போக நுகர்ந்திருந்தமை கூறுகின்றது. முத்தியடைந்த உயிர் மீண்டும் பிறவியெடாது நித்திய இன்பத்தைப் பெறுமென்மது இதனாலறியப்படும்.

★

அச்சங்கத் தாமரைவா யன்பர்மலர்த் தாமரைவாய்க்
கைச்சங்க மூதுங் கதிரையே—மெச்சுதிருக்
கோலங்கை யானமரர் கோனுதவு வாரணத்தின்
கோலங்கை யானமருங் குன்று. (33)

**இதன்பொருள்:—**

மெச்சு திருக் கோல் அம் கையான்—புகழப்படும் வெற்றித்திரு வீற்றிருக்குந் திரண்ட அழகிய புயங்களையுடையவனும், அமரர் கோன் உதவு வாரணத்தின்—தேவதேவனாகிய இந்திரனால் மணமுடித்துக் கொடுக்கப்பட்ட தெய்வயானையம்மையாரின், கோலங் கையான்—அழகிய கோலத்தை வள்ளியுடன் போகத்திருந்தும் வெறுக்காதவனுமாகிய முருகக்கடவுள், அமருங் குன்று—கோயில்கொண்ட மலை, அச்சங்கத் தாமரைவாய்—அந்தக் கூட்டமான தாமரை மலர்களிடத்து, கைச்சங்கம் ஊதுங் கதிரையே—நாகரவண்டுகள் ஊதியொலிக்குங் கதிரைப்பதியே யாகும். அன்பர் மலர்த் தாமரைவாய்—அடியவர்கள் மலர்ந்த செந்தாமரைபோலுஞ் சிவந்த வாயிடத்து, கைச்சங்கம் ஊதுங் கதிரையே—கையிலுள்ள சங்குகளை வைத்து ஊதுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில், தடாகங்களில் மலர்ந்த கூட்டமான தாமரை மலர்களில் நாகரவண்டுகள் ஊதி

யொலிக்கும் அடியவர்கள் தமது சிவந்த தாமரை போலும் வாயிற் சங்குகளை வைத்து ஊதி யொலிப்பர்.

சங்கம்—கூட்டம். அகரச் சுட்டு—கதிரைமலையி லுள்ள தடாகங்களிற் பூத்த தாமரைமலர்க் கூட்டத்தைச் சுட்டி நின்றது. சங்கம்—சங்கு. கைச்சங் கம்—நாகரவண்டு. திரு—வெற்றிச் செல்வம். கோல்—திரட்சி. அம்—அழகு. கோலம்—அழகு. கைத்தல்—வெறுத்தல்.

மேலே வள்ளியுடன் போகத்திருந்தமை கூறி னாராதலின் ஈண்டு அப்போகத்தினுற் றெய்வயானை யம்மையாரை மறந்தாரல்லர் என்பது கூறினர். முத்திநிலையில் உயிர்கள் வேறுபாடின்றிக் கலத்தலின் இன் பம் ஒருபடித்தாமேன்பது இதனுல் அறியப்படும்.

வள்ளியம்மையாரை மணஞ்செய்து செருத்தணி மலையில் எழுந்தருளியிருந்த முருகப்பெருமான் கந்த கிரிக்குச் சென்று தெய்வயானையாரை வலப் பக்கத் திலும் வள்ளியம்மையாரை இடப் பக்கத்திலுங் கொண்டவராய் எண்ணில்லாத உயிர்கள் அருள் பெற்றுய்யும்படி வீற்றிருந்தார் என்பது வரலாறு.

★

பாலனசொல் லாரிடைமுன் பக்கமுமைக் காவுமறு
காலரவங் காட்டுங் கதிரையே—நீலநிற
மானபரங் குன்றத்தான் மன்னுங் கருணைவடி
வானபரங் குன்றத்தான் வாழ்வு. (34)

**இதன்பொருள்:—**

நீலநிறமான பரங் குன்ற—கரிய நிறமுடைய மும்மலங்களாகிய பாரங் குறைய, தான் மன்னும்—

பக்குவ மடைந்த உயிர்களின் அறிவிற் ருன் ஞான சூரியனுக நிலைபெறும், கருணை வடிவான பரங்குன் றத்தான் வாழ்வு—கருணையே திருவுருவமாகிய திருப் பரங் குன்றத்து முருகன் ஈழநாட்டில் இனிதாக வீற்றிருக்குந் திருப்பதி. பால் அன்ன சொல்லார் இடை முன்பக்கம்—தீம்பால் போலும் இன்சொல் லைப் பேசும் மகளிரது இடையின் முன்பக்கம், அறுகால் அரவங் காட்டுங் கதிரையே—கால்களில் லாத பாம்புகளின் படமாம் வடிவத்தைக் காட்டு கின்ற கதிரைப்பதியே யாகும். மைக் கா—மைபோ லிருண்ட சோலைகள், அறுகால் அரவங் காட்டுங் கதிரையே—வண்டுகளது இசையொலியைக் காட்டு கின்ற கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் மகளிரின் இடை முன்பக்கம் பாம் பின் படம்போன்றிருக்கும். இருண்ட சோலைகள் வண்டொலியால் நிறைந்திருக்கும்,

நீலம்—கருநீலம். பரம்—பாரம். மன்னுதல்—நிலை பெறுதல். அறுகால்—பாம்புகள். அறுகால்—வண்டுகள். முன்னது வினைத்தொகைப் புறத்து அன்மொழி. பின்னது பண்புத்தொகைப் புறத்து அன்மொழி.

மும்மலங்களும் உயிரின் அறிவை மறைத்தலிற் கரியன வெனவும், அம்மறைப்பினுல் உலகப்பற்றை யுண்டாக்கி நிலையற்ற உலக பாரத்தைச் சுமப்பித் தலிற் பாரமுடையன வெனவுங் கூறப்பட்டன. இவை மூன்றும் முருகக் கடவுளின் திருவருளால் நீங்குமென்க.

மேலே கந்தகிரியில் முருகப்பெருமான் அடி யார்க் கெளியராய் எழுந்தருளி யருள்புரிந்தமை கூறி, இதுமுதற் பன்னிரண்டு வெண்பாக்களில்

அவ்வாறெழுந்தருளி அருள்செய்த ஏனைய திருப் பதிகளைக் கூறுகின்றார்.

முருகக் கடவுளுக்குச் சிறந்ததும், தெய்வயானை யம்மையாரைத் திருமணஞ் செய்துகொண்ட பெருமை மிக்கதும், ஆகிய திருப்பரங்குன்றை முற் கூறினர். இப்பதியில் இந்திரன் தெய்வயானையாரை முருகப்பெருமானுக்குத் திருமணஞ்செய்து கொடுத் தான். அதன்பின் வள்ளிநாயகியார் திருமணம் வள்ளிமலையில் நிகழ்ந்தது. இத் திருமணங்களின் பின் முருகப்பெருமான் உலகிற்கு இன்ப வாழ் வைக் காட்டியருளவும், வழிபடுந் தொண்டர்களுக்கு அருள் சுரக்கவுந் திருவுளங்கொண்டு ஈழநாட்டிற் கெழுந்தருளிக் கதிரைமலையிற் றேவ சிற்பியால் அமைக் கப்பட்ட கதிரைமாநகரிற் கோடி சூரியர்களின் பேரொளி காலுஞ் சிந்தாமணிக் கோயிலில் வீற்றிருந்தார் என வர லாற்று நூல்கள் கூறும்.

★

**செப்புமறை யோர்சுடர்க்குந் தேறறிஞர் மங்கையர்க்குங்**
**கைப்பதிகங் காட்டுங் கதிரையே—மெய்ப்பொருளை**
**ஏரகத்தார்க் கொன்று மிடரிருக்கா தாளுமரு**
**ளேரகத்தார்க் கொன்று மிடம். (35)**

**இதன்பொருள்:—**

மெய்ப்பொருளை ஏர் அகத்தார்க்கு — உண் மைப் பொருளை அறிந்து ஏற்றுக்கொண்ட நன் மனமுடைய தொண்டர்களுக்கு, ஒன்றும் இடர் இருக்காது—ஒருவகைத் துன்பமுமில்லாது, ஆளும் அருள் ஏரகத்தார்க்கு—ஆட்கொள்ளுங் கருணை யுடைய திருவேரகத்து முருகப் பெருமானுக்கு, ஒன்

றும் இடம்—பொருத்தமான திருப்பதி, செப்பு மறையோர் சுடர்க்கு—வேதமோதுகின்ற அந்தணர் கள் விளக்கிற்கு, கைப்பதிகங் காட்டுங் கதிரையே— கைம்முத்திரை காட்டுங் கதிரைப்பதியே யாகும். தேறு அறிஞர் மங்கையர்க்கு—சிந்தித்துத் தெளிந்த அறிஞர்கள் பெண்களது போகத்திற்கு, கைப்பு அதிகங் காட்டுங் கதிரையே—வெறுப்பு மிகுதி காட் டுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில், தீபாராதனை செய்யும் மறையோர் முதலில் அத்தீபத்திற்குப் புட்பாஞ்சலி செய்து மகா முத்திரையும் பஞ்சமுகி முத்திரையுங் கொடுப்பர். இன்ப நிலையாமையை உணர்ந்த பேரறிவாளர் மங்கையர் போகத்தை வெறுத்து நீக்கித் துறவ றம் புகுவர்.

கைப்பதிகம்—கைம்முத்திரை, கைப்பு—வெறுப்பு. ஏர்தல்—ஏற்றுக்கோடல்.

முருகக்கடவுள் பிரமதேவரைச் சிறையிடுவித்து இறைவனுக்குப் பிரணவப் பொருளைக் கூறியரு ளிய திருப்பதி திருவேரகம் எனப்படும்.

★

பொற்கொடியார் நெஞ்சகமும் புன்னகையுங் கந்தரமுங்<br>
கற்பணியைக் காட்டுங் கதிரையே—வெற்பிற்<br>
பழநிமலை மைந்தன் பணிந்தார்க் கருளும்<br>
பழநிமலை மைந்தன் பதி. (36)

**இதன்பொருள்:—**

வெற்பிற் பழ நிமலை மைந்தன்—இமையத்துப் பிறந்த ஆதி பராசத்தியும் மலமற்றவளுமாகிய

உமையம்மைக்கு மைந்தனும் பணிந்தார்க்கு அருளும் பழநிமலை மைந்தன்—வழிபடுந் தொண்டர்களுக்குத் திருவருள் சுரக்கும் பழநிமலை அழகனும் ஆகிய முருகக்கடவுளின், பதி — திருப்பதி, பொற்கொடியார் நெஞ்சகம்—பொற்கொடிபோலும் அழகிய மகளிரது உள்ளம், கற்பு அணியைக் காட்டுங் கதிரையே—கற்பாகிய அழகைக் காட்டுங் கதிரைப்பதியே யாகும். புன்னகை—அவர்களது புன் முறுவல், கற் பணியைக் காட்டுங் கதிரையே—வைரக்கற்கள் தமது ஏவல் செய்யுமாற்றினைக் காட்டுங் கதிரைப்பதியே யாகும். கந்தரம்—அவர்களது கழுத்து, கற் பணியைக் காட்டுங் கதிரையே--இரத்தினமாலை பதக்கம் முதலிய கல்லணிகளை அணிந்து காட்டுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் மகளிர் கற்பொழுக்கத்தினல் அழகு விளங்கப் புனையப்பட்டிருப்பர். அவர்களது புன் முறுவல் வைரங்களை ஏவல்கொள்ளுந் தலைமை யுடைமையின் அவற்றைச் செவிகளுக்கு அணியாக்கி இடையிடையே விழிகளாகிய ஏவலராற் பார்வையிட்டுக்கொள்ளும். அவர்களது கழுத்துக் கல்லணிகலன்களை அணிந்து பொலிவுடையதாயிருக்கும்.

கந்தரம்—கழுத்து. வெற்பு—இமையமலை. நிமலை—மலமில்லாதவள். மைந்தன்—மகன். மைந்தன்—அழகன்.

உமையம்மையார் இமையமலையில் மலையரசனுக்கு மகளா யவதரித்தா ராதலின் வெற்பிற் பழநிமலை என்ருர். வெற்பிற் பிறந்தாரேனும் அநாதியாயிருக்குஞ் சிவசத்தி யென்றற்குப் பழ நிமலை என்

றார். வெற்பிற் பிறந்தது மலத்தொடர்பாலன்று; மலையரசனது தவத்திற்கு மகிழ்ந்து கருவழிப்ப டாது ஒரு திருவிளையாடலாக உலகமுய்ய வெடுத்த திருவவதார மென்றற்கு நிமலை என்றார்.

மாம்பழத்தின் பொருட்டுப் பிணங்கிய குமரக் கடவுளை இறைவன் பிணக்குத் தீர்த்த தலம் பழநி மலை யாகும்.

பெண்களுக்குத் தாய்தந்தையருங் கணவனுங் கற்பித்த ஒழுக்கங் கடைப்பிடித் தொழுகுவது கற்பாம். இதுவே தலையாய அழகு. ஏனைய புறத் தழகுகள் உடலையே புனைந்து காட்டும். இஃது உயிருக்கு நல்லறிவாகிய பேரொளியை நல்கி அகத்தை அழகுறப் புனைந்து புறத்திலுந் திருவாய் வெளிப்பட்டு விளங்கும்.

புன்னகை கற்பணியைக் காட்டும் என்னுந் தொட ருக்கு, மகளிரது குறுநகையிற் பிறந்த இயற்கை யொளி, கற்களுட் சிறந்த ஒளிமிக்க வைரத்தை ஏவல்கொண்டு அதனைச் செவிகளுக் கணியாக நிறுத்தியதென்றும், இடையிடையே விழிகளாகிய ஏவலரை யேவி யதன்பணி செவ்வனே நிகழுமாற் றினை யறிந்து கொண்டதென்றும் பொருள் விரித் துக்கொள்க. முறுவல் தோன்றும்போது விழிக ளும் அக்குறிப்பின் வழிப்பட்டு நிற்குமாதலின் அவை செவியிடத்தோடி மீளுதல், கற்கள் செய் யும் பணி செவ்விதோவென நோக்கி மீளுவது போலுமென்க.

★

செல்வர்களுங் கானடையிற் செல்வோரும் வந்திரவிற்
கல்வீடு சேருங் கதிரையே—வல்லியொரு
பாலாவி னன்குடிலை பன்னுகென முன்பகரும்
பாலாவி னன்குடியான் பற்று. (37)

**இதன்பொருள் :—**

வல்லி ஒருபால் ஆ இனன் — உமையம்மை யாரை இடப்பக்கத்தே பொருந்தக்கொண்ட தலைவனாகிய சிவபெருமான், குடிலை பன்னுக என — பிரணவப் பொருளைச் சொல்வாயென்று கேட்க, முன் பகரும்—விரைந்து சொல்லியருளிய, ஆவினன் குடியான் பற்றுபால்—திருவாவினன்குடி முருகக்கடவுள் விரும்பி யுறையும் பக்கம், செல்வர்கள் —செல்வச் சிறப்புடைய வள்ளல்கள், வந்து இரவு இல் கல்வீடு சேருங் கதிரையே—வறியவர்கள் வந்து இரத்தலில்லாத தமது கல்லினாலாகிய மாளிகைகளில் வாழுங் கதிரைப்பதியே யாகும். கால் நடையிற் செல்வோர்—கால்நடையாக யாத்திரை செய்யுந் தொண்டர்கள், வந்து இரவிற் கல்வீடு சேருங் கதிரையே—பகலில் வழிநடந்து வந்து இரவிற் கல்வீடு என்னுமிடத்திற் றங்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் முருகப்பெருமானது திருவருளினல் மக்களெல்லோருஞ் சிறப்புற்று வாழ்தலின் இரத்தற் றொழில் இலதாயிற்று. இதனலே வள்ளல்களாகிய பெருஞ் செல்வர்களது கல்வீடுகள் கொடைப் பொலிவிழப்பன வாயின. நடந்து செல்லுந் தொண்டர்கள் இரவிற் கல்வீடு என்னுமிடத்திற் றங்கிச் செல்வர்.

இரவு — இரத்தற் ருெழில். இரவு — இராப் பொழுது. கல்வீடு—கல்லினுற் கட்டப்பட்ட மாளிகை. கல்வீடு—புத்தற் பாதையில் இருக்கும் ஓர் இடம். இங்கே ஐம்பதின்மர் தங்கியிருக்கக்கூடிய விடர கத்தையுடைய ஒரு பெருங்கல் வீடுபோற் சாய்ந் திருக்கிறது. இதில், யாத்திரை செய்வோர் தங்கிச் செல்வர். வல்லி—படர்கொடி. உமையம்மையாரின் மெல்லியல்பு தோன்ற வல்லி என்ருர். ஒருபால்—இடப்பாகமாகிய ஒருபகுதி. இனன்—அரசன். சிவ பெருமான் எண்ணிறந்த உயிர்களுக்குத் தலைவனு தலின் இனன் எனப்பட்டார். குடிலை—பிரணவம். திருவாவினன் குடி — இலக்குமியும் பசுவும் சூரியனும் வழிபட்டதலம். திரு—இலக்குமி. ஆ—பசு. இனன்—சூரியன்.

★

பூண்டவடி யார்சிரத்திற் போர்புரிவோர் செங்கரத்திற்
காண்டீப மேந்துங் கதிரையே—யாண்டுமனக்
கோதணிகை யாளரிடங் கூடாக் குருபரனெங்
கோதணிகை யாளன் குலம். (38)

**இதன்பொருள்:—**

யாண்டும் மனக்கோது அணி கையாளரிடம்—எவ்விடத்தும் மனக்குற்றங்களாகிய காமம் வெகுளி மயக்கம் என்னும் இவற்றையே அணிகலனுகப் பூண்ட கீழ்மக்களிடம், கூடாக் குருபரன்—அணு காத சிவகுருவும், எங்கோ—எங்கள் தலைவனும், தணிகையாளன் — திருத்தணிகைப் பெருமானும் ஆகிய முருகக்கடவுளது, குலம்—வீடு. பூண்ட அடி யார் சிரத்தில்—மெய்யன்பு பூண்ட தொண்டர்கள்

தமது தலையில், காண் தீபம் ஏந்துங் கதிரையே— கண்ணுக்கினிய விளக்கமான கருப்பூர தீபத்தை ஏந்துங் கதிரைப்பதியே யாகும். போர் புரிவோர் செங்கரத்தில்—போர் செய்யும் வீரர்கள் தமது சிவந்த கைகளில், காண்டீபம் ஏந்துங் கதிரையே— வில்லை ஏந்துங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் அடியார்கள் தலையிற் கருப்பூர தீபமேந்தி நிற்பர். வீரர்கள் சிவந்த கைகளில் வில் லேந்தி யுலாவுவர்.

காண்டீபம்—வில்லு. கோது—குற்றம். கையாளர்— கீழோர். குலம்—வீடு. பரன்—சிவன். கோ—தலைவன்.

சிவனுக்குப் பிரணவப் பொருளைச் சொல்லி யருளியமையாற் குருபரனாயினர்.

அடியார்கள் ஏந்திய கருப்பூர தீபம் கண்ணுக் கும் மனத்துக்கும் இனிய விளக்கமான காட்சிய தாகலின் காண்தீபம் என்றார்.

"கதிரைமலை காணாத கண்ணென்ன கண்ணே
கர்ப்பூர வொளிகாணாக் கண்ணென்ன கண்ணே"

என்று ஆசிரியர் தமது இலங்கை வளத்திற் கூறி யுள்ளார்.

முருகக்கடவுள் சூரனுடன் செருப்புரிந்து அவனை ஆட்கொண்டபின் அமைதி நிலவ வீற்றி ருந்த தலம் திருத்தணிகை. இது செருத்தணி யெனவும் வழங்கப்படும். செரு—போர்.

★

சொற்புலவர் தூக்கினிலே தோழியறத் திற்றலைவி
கற்பனைபா ராட்டுங் கதிரையே—சுற்றுதிரை
தெள்ளிமுத் தங்கொடுக்குஞ் சீரலைவா யானணைத்து
வள்ளிமுத் தங்கொடுத்தான் வாழ்வு. (39)

**இதன்பொருள்:—**

*சுற்றுதிரை தெள்ளி—நீரைச் சுருட்டியெழுந் திரைகொழித்து, முத்தங்கொடுக்குஞ் சீரலைவாயான்—முத்துக்களைக் கரையிற் சேர்க்குந் திருச்சீரலைவாயானும், அணைத்து வள்ளி முத்தங் கொடுத்தான்—வள்ளிநாயகியாரைத் தினைப்புனத்தில் அணைத்து முத்தங் கொடுத்தவனும் ஆகிய முருகக் கடவுளின், வாழ்வு—கோயில், சொற்புலவர்—சொல் வன்மை மிக்க செந்நாப் புலவர்கள், தூக்கினிற் கற்பனை பாராட்டுங் கதிரையே—செய்யுள்களிலுள்ள கற்பனை நயங்களைப் பாராட்டி மகிழுங் கதிரைப்பதியே யாகும். தோழி அறத்தில்—தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கையில், தலைவி கற்பனை பாராட்டுங் கதிரையே — தலைவியைப்பற்றிய கற்பனை மொழிகள் சிலவற்றை ஏற்றவாறு படைத்துக் கூறுங் கதிரைப்பதியே யாகும்.*

*இப்பதியிற் புலவர்கள் கற்பனை நயங்களைப் பாராட்டி மகிழ்வதிற் பொழுதுபோக்குவர். இந் நிலத்துக்குரிய களவொழுக்கம், அறத்தொடு நிற்குந் தோழியின் கற்பனை மொழிகளாற் சிறப்படைந்து தாய் தந்தையரின் நன் மதிப்பிற்குரிய தாகும்.*

தூக்கு—செய்யுள். கற்பனை—கற்பனைநயம். கற்பனை—படைத்துக் கூறும் புதுமொழி. தேள்ளுதல்—தொழித்தல்.

அறத்தோடு நிற்றலென்பது, அறத்தொடு மாறுபடாது களவொழுக்கத்தை வெளிப்படுத்தல். தலைவி தோழிக்கும் தோழி செவிலிக்கும் செவிலி நற்றாய்க்கும் நற்றாய் தந்தைக்கும் அறத்தொடு நிற்றன் முறைமை. ஈண்டுக் கூறியது தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல். இவள் கூற்றிலேயே கற்பனை நயங்கள் மிகுதியுஞ் சிறந்து விளங்கும்.

அஃது 'அன்னாய்! என்னாலும் அறியப்படுவது சிறிதுண்டு; நாங்கள் இருவேமும் நின் கட்டளைப்படி, மழலைப் பருவத்திற் பொழிலகத்து விளையாடியதை நீயும் அறிவாய். அவ்வாறு விளையாடும் போது ஒருநாள் ஒரு தோன்றல் குவளைப் பூவோடு அவ்வழி வந்தான். நின்மகள் அப்பூவைத் தனது பாவைக்கு அணியத் தரும்படி கேட்டாள். அவனுங் கொடுத்து நீங்கினன். பின்பொருநாள் நாங்கள் காவலிருந்த புனத்தையும் அழித்து எம்மையுங் கொல்ல ஒரு களிறு வந்தது. அப்போதும் அத்தோன்றல் பருவத்தே பெய்த மழைபோல வந்து எம்மைக் காத்தான்; பிறிதொரு நாள். இருவேமும் நீராடி விளையாடினேம். அப்போது ஒரு பேரலை வந்து நின்மகளை இழுத்துச் சென்றது. அப்போதும் அத்தோன்றல் வந்து நின்மகளைக் கரையேற்றிக் காத்தான். இவை எமது அறியாப் பருவத்தே நிகழ்ந்தன. பெருங் கற்பினளாகிய நின்மகள் அறிவதறிந்த இக்காலத்து, அந்நன்றிகளை எண்ணிப் பெரிதும் மெலிவாளாயினள், என்றிவ்வாறு சில கற்பனை

மொழிகளாற் களவொழுக்கத்தைத் தோழி செவிலிக்கு வெளிப்படுத்துவது. இவற்றின் விரிவுகளை அகப்பொருணூல்களிற் கண்டுணர்க.

ஈண்டுத் தோழி, தலைவி கற்புக்குந் தலைவன் இறைமைக்குந் தனது காவலுக்குஞ் செவிலி அறிவுக்கும் உலகியலுக்கும் மாறுபடா வண்ணந் தன் கற்பனைப் பொருளைத் தொடுத்து மொழிகின்றாள். இவ்வாறு வருவன புலனெறி வழக்காம்.

★

**தூயதவத் தார்மனமுந் தோகையர்கள் சேல்விழியுங்**
**காயம் பழிக்குங் கதிரையே—மாய**
**மலையு மலைவாயா மாமரமு மாய**
**மலையுமலை வாயான் மலை. (40)**

**இதன்பொருள்:—**

மாய மலையும்—மாயங்களைச் செய்யுங் கிரவுஞ்ச மலையும், அலைவாய் ஆம் மாமரமும்—கடலிற் றோன்றிய சூரனது மாமர வடிவும், மாய மலையும் அலைவாயான்—அழியுமாறு போர் செய்யுந் திருச்சீரலைவாயானது, மலை—குன்று, தூய தவத்தார் மனம்—தூய்மை மிக்க தவத்தைச் செய்யும் முனிவர்களது உள்ளம், காயம் பழிக்குங் கதிரையே — நிலையற்ற உடம்பை இழித்துக் கூறுங் கதிரைப்பதியே யாகும். தோகையர்கள் சேல் விழி—மயிலனைய மகளிரது சேல் போன்ற கண்கள், காய் அம்பு அழிக்குங் கதிரையே — பகைவர்களைச் சினக்கின்ற அம்புகளின் கூர்மையை அழிக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் நிலையாமை யுணர்ந்து தவஞ் செய்யும் முனிவர்கள் உடம்பை இழித்துக் கூறுவர். மகளிரது சேல் போன்ற விழிகள் சினத்தை யுடைய அம்புகளின் கூர்மையை அழிக்குங் கொடுங் கூருள்ளனவா யிருக்கும்.

திருச்சீரலைவாய்—திருச்செந்தூர். இது கடற்கரையிலுள்ள திருப்பதியாதலின் அலைவாய் எனப்படும். சூரனை அழித்தலாகிய போரை மேற்கொண்டு மகேந்திரஞ் செல்லாநின்ற முருகக் கடவுள் இடையிலுள்ள இத்திருப்பதியில் எழுந்தருளி யிருந்து வியாழகுரு வாயிலாகச் சூரனது பிறப்பும் அரசும் வெற்றியுங் கொடுமையும் முதலாய வரலாறுகளைக் கேட்டருளினர்; போர் முடிந்து மீண்டு வரும்போதும் இவ்விடத்திற் றங்கிச் சூரனை அழித்துத் தங்களைக் காத்த பெருமகிழ்ச்சியால் உந்தப்பட்ட தேவர்கள் வாழ்த்தி வணங்க எல்லோருக்குங் கருணை புரிந்து, எழுந்தருளியிருந்தார் என்பது புராண வரலாறு.

காய்தல்—சினத்தல். மலைதல் — போர் செய்தல். சேல்விழி—உவமைத்தொகை.

★

மெய்யன்பர் செய்யுளிலும் வேடுவர்கள் சாலையிலுங்
கையம்பு தீட்டுங் கதிரையே—துய்ய
மழமுதிருஞ் சொல்லமுதம் வள்ளிதா வென்ற
பழமுதிருஞ் சோலையான் பற்று. (41)

**இதன்பொருள்:—**

துய்ய மழ முதிருஞ் சொல் அமுதம்—தூய்மை யானதும் இளமை கனிந்ததும் ஆகிய மழலைமொழி

என்னும் அமுதத்தை, வள்ளி தா என்ற—வள்ளி யம்மையே! தருவாய் என்று குறையிரந்து நின்ற, பழமுதிருஞ் சோலையான் பற்று—பழமுதிர் சோலை மலையில் எழுந்தருளிய முருகப்பெருமான் விரும்பி யுறையுமிடம், மெய்யன்பர் செய்யுளில்—உண்மைத் தொண்டர்கள் நால்வகைப் பாக்களில், கையம்பு தீட்டுங் கதிரையே—தமது தெய்வ நம்பிக்கையைச் சொல்லோவியமாக எழுதுங் கதிரைப்பதியே யாகும். வேடுவர்கள் சாணையில்—வேடர்கள் சாணைக் கல்லில், கை அம்பு தீட்டுங் கதிரையே—தமது கைக்குப் பொருத்தமான அம்புகளைத் தீட்டுங் கதிரைப் பதியே யாகும்.

இப்பதியில் உண்மைத் தொண்டர்கள் தமது தெய்வ நம்பிக்கையை நால்வகைப் பாக்களிலுஞ் சொல்லோவியமாகத் தீட்டுவர். வேடர்கள் சாணைக் கல்லில் அம்புகளைத் தீட்டிக் கூரியன வாக்குவர்.

மழ—இளமைப் பொருளில் வந்த உரிச்சொல். குழவிப் பருவத்துச் சிறு மழலை போன்றிராது இளமையின் கனிவுக்குத் தகக் கனிந்த மொழி என்றற்கு **மழமுதிருஞ் சோல்** என்றார்.

**சோல்லமுதம் வள்ளிதா** என்றது வள்ளிநாயகியாரைத் திருமணஞ் செய்துகொள்ளத் திருவுளங் கொண்ட முருகவேள் வேட்டுவக் கோலம் பூண்டு தினைப்புனஞ் சென்று "வாளனைய கண்ணாய்! நின் பொருட்டாக மனந் தளருகின்ற எனக்கு உன் பெயரைச் சொல்லுதி. அதனைச் சொல்லாயெனின் உன் ஊரைச் சொல்லுதி. அதுவுஞ் சொல்லா யெனின் உன் சிற்றூர்க்குச் செல்லும் வழியைச்

சொல்லுதி", என்று மொழிபெற வருந்தி நின்ற தைக் கருதிய வாறும்.

இவ்விடத்து அவள் ஏதும் விடை பகரின் அது தன்னுயிரைக் காக்கும் அமுதுபோலும் என்னுங் கருத்து வெளிப்பட முருகவேள் குறையுற்று நின்றாராதலின் சொல்லமுதம் என்றார். அமுதம்—சாவா மருந்து.

கையம்பு—நம்பிக்கை. தீட்டுதல்—சொல்லோவிய மாகப் புனைந்து எழுதுதல். இறைவனருளால் ஆட் கொள்ளப்பட்ட மெய்யடியார்கள் தம்மையமிழ்ந்து அருள் வடிவாய் நின்று உண்மைப் பொருளையும் அதன் இயல்புகளையும், உயிர்கள் அவ்வுண்மைப் பொருளை யடையும் நெறிகளையும் அவற்றின் பய னாய முத்தி யின்பத்தையும் பல்வேறு திறப்பட்ட சொல்லோவியங்களாகத் தீட்டியுள்ளார். நால்வர் பாடிய தேவார திருவாசகங்களும் நக்கீரர் பாடிய திரு முருகாற்றுப்படையும் அருணகிரிநாதர் பாடிய திருப்புக ழும் குமரகுருபரர் பாடிய பிரபந்தங்களும் இவை போல்வன பிறவும் இவ்வாறு தீட்டப்பட்ட ஓவியங் களின் தொகுதி யாகிய தமிழ் மறைகளாம்.

கையம்பு—தமது கைவன்மைக்குப் பொருத்த மாகச் செய்துகொண்ட அம்பு. கை—சிறுமை எனப் பொருள்கொண்டு சிறிய தேய்ந்த அம்புகளைத் தீட்டுவர் எனலும் அமையும்.

★

வித்தார் வயல்வரம்பில் வேடர் சிறுகுடியிற்
கத்தூரி வாழுங் கதிரையே—பத்துடைய
மாவடியார் கந்த மலர்தூவி வாழ்த்துகச்சி
மாவடியார் கந்தன் மலை. (42)

**இதன்பொருள்:—**

பத்துடைய மா அடியார்—பத்திப் பெருக்குடைய பெருமை வாய்ந்த தொண்டர்கள், கந்த மலர்தூவி வாழ்த்து—மணமிக்க பூக்களைச் சொரிந்து அருச்சித்துப் பரவுகின்ற, கச்சி மா அடி ஆர் கந்தன் மலை—காஞ்சி நகரத்து மாவினடியில் எழுந்தருளிய கந்தக் கடவுளது மலை, வித்தார் வயல் வரம்பில்—விதைகள் விதைக்கப்பட்ட வயல்களின் வரம்புகளில், கத்து ஊரி வாழுங் கதிரையே—ஒலிக்கின்ற சங்குகள் வசிக்குங் கதிரைப்பதியே யாகும் வேடர் சிறு குடிலில்—வேடர்களது சிறு குடிசைகளில், கத்தூரி வாழுங் கதிரையே—கத்தூரி மான்கள் வளருங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் வயல் வரம்புகளிற் சங்குகள் வசிக்கும். வேடர்களது குடிசைகளிற் கத்தூரி மான்கள் வளர்க்கப்படும்.

வித்து—விதைகள். சிறுகுடி — சிறு குடிசைகள். கத்தூரி—கத்தூரி மான். இவற்றிலிருந்து கத்தூரி எடுக்கப்படும். பத்து—தெய்வ பத்தி. கந்தம்—மணம். கச்சி—காஞ்சிபுரம்.

காஞ்சிபுரம் தொண்டைநாட்டிலுள்ளது. அந் நகரிற் சிவபெருமானுக்கு இருபது திருப்பதிகளுண்டு. அவற்றுள் திருவேகம்பஞ் சிறந்தது. அது கம்பைநதிக் கரையிலுள்ளது. அங்கே வேத வடி

வாகிய மாமரமொன்றுண்டு. அதனருகே உமை யம்மையாரது காமக் கோட்டமும், முருகப் பெரு மானது குமரக் கோட்டமும் உள. அக் குமரக் கோட்டத்தில் முருகப்பெருமான் தம்மடியார்களுக்கு இருமையின்பமும் நல்கி எழுந்தருளியிருக்கின்றார்.

★

தொண்டர் திருவுருவிற் றொல்வீரர் கச்சுடையிற்
கண்டகம் மேவுங் கதிரையே—அண்டுபவங்
குன்றக் குடிமுழுது மாளுங் குமரகுரு
குன்றக் குடிமுருகன் குன்று. (43)

**இதன்பொருள்:—**

அண்டு பவங் குன்ற—நெருங்கி வருகின்ற பாவங்கள் குறையுமாறு, குடிமுழுதும் ஆளுங் குமரகுரு—தொண்டர்களின் குடிமுழுவதையும் ஆட்கொள்ளுகின்ற குமரனாகிய பரமாசாரியனும், குன்றக்குடி முருகன்—குன்றக்குடியில் எழுந்தருளியிருப்போனுமாகிய முருகக்கடவுளின், குன்று—மலை, தொண்டர்திருவுருவில்—அடியவர்களுடைய பத்திப்பொலிவு நிறைந்த திருமேனியில், கண்டகம் மேவுங் கதிரையே—புளகம் பரந்து விளங்குங் கதிரைப்பதியே யாகும். தொல்வீரர் கச்சுடையில்—பழைய வீரவாகு முதலிய வீரர்களது கச்சுடையின்மேல், கண்டகம் மேவுங் கதிரையே - உடைவாள் பொருந்தியிருக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் வழிபடுந் தொண்டர்களின் திருவுருவம் புளகமரும்புதலினாற் பொலிவடைந்து விளங்கும். பழைய வீரர்களாகிய வீரவாகுதேவராதியோ

ரது கச்சுடை உடைவாளின் விளக்கத்திறற் பொலி வடையும்.

தொண்டர்களுருவந் திருநீறும் உருத்திராக்க மும் ஆனந்தவாரியும் புளகமும் ஒருப்பாடும் மெய் விதிர்ப்புங் கலந்து பொலிதலின் திருவுரு வென்றார்.

கண்டகம்—புளகம். அன்புமேலீட்டினால் உடம் பின் மயிர் சிலிர்த்தல் புளகமெனப்படும்.

தோல்வீரர்—வீரவாகுதேவர் முதலிய படைவீர ரும் பிறருமாவர். இப்பதிக் கண்ணுள்ள ஏழுமலை களுள் ஒன்று வீரவாகுதேவருக் குரியதாதலின் தோல்வீர ரென்றது அவரையே குறிக்கும்.

பவம்—பாவம். பாவங்குன்ற எனவே, புண்ணி யம் பெருக என்பதுங் கொள்ளப்படும். பாவங் குறைதலினால் நல்வினை மிகுத்து உண்மை யுணர் வுந் தெய்வ நம்பிக்கையுந் தவமும் நல்லாரிணக்க முங் கைகூடி வீடுபேற்றுக்கு வாயிலாகும். குரு வருள் கைகூடும்போது இவை தொடர்ந்து நிகழ் தலினாலே தொண்டர்கள் ஆட்கொள்ளப்படுவ ரென்பதும், அவர் வாயிலாக அவர்தங் குடியிலுள் ளாரும் நன்னெறிப்பட்டுக் காக்கப்படுவரென்பதுந் தோன்ற, அண்டு பவங் குன்றக் குடிமுழுது மாளுங் குமரகுரு என்றார்.

இத்துணையுந் தமிழ் நாட்டிலுள்ள முருகன் திருப்பதிகள் கூறினர். இனி ஈழநாட்டின் திருப்பதி கள் கூறுவர்.

★

சீலமுறு யோகியருஞ் சேவடியைப் பூணுநருங்
காலங் கடக்குங் கதிரையே—நேயமுள
வாச வனத்தன் மடவார் மணவாளன்
வாச வனத்தன் வரை. (44)

**இதன்பொருள்:—**

வாசவனத்தன் மடவார்—நீரில் வசிப்பவனுகிய திருமாலின் மகளிராகிய அமுதவல்லி சுந்தரவல்லி என்னும் இருவரதும், நேயமுள மணவாளன்—அன்பு நிறைந்த நாயகனும், வாச வனத்தன்—கந்த வனத்தில் எழுந்தருளி யிருப்போனுமாகிய முருகக் கடவுளின், வரை—மலை, சீலம் உறு யோகியர்—நல்லொழுக்கம் வாய்ந்த யோகியர், கால் அங்கு அடக்குங் கதிரையே—சுவாசத்தை நிறுத்தவேண்டிய இடங்களில் முறைப்படி நிறுத்தி யோகம் பயிலுங் கதிரைப்பதியே யாகும். சேவடியைப் பூணுநர்—சிவந்த திருவடிகளையே அணிகலமாகப் பூண்ட மெய்யடியார்கள், காலங் கடக்குங் கதிரையே—காலக் கடவுளால் வகுக்கப்பட்ட இறுதிக் காலத்தைக் கடந்து பின்னுமிருந்து வழிபடுங் கதிரைப் பதியே யாகும்.

இப்பதியில் யோகியர் சுவாசத்தை நிறுத்தி யோகஞ் செய்வர். மெய்யடியார்கள் இறுதிக்கால வெல்லையைக் கடந்து பின்னுமிருந்து வழிபடுவர்.

சீலம்—நல்லொழுக்கம். கால்—காற்று. காலம்—காலனுல் வகுக்கப்பட்ட இறுதிக் காலம். நேயம்—அன்பு. வாசம்—வசிப்பிடம். வனம்—நீர். நீரை வசிப்பிடமாகக் கொண்டவன் திருமால். வாசம்—மணம். மணத்தை யுணர்த்துங் கந்தமென்னுஞ் சொல் இவ்

விடத்திற் பொருளா யமைந்துளது. கந்தவனம் என் பது இத்தலத்தின் பெயர். போலிகண்டி, கந்தவனக் கடவை எனவும்படும். இது யாழ்நகரின் வடபாலி லுள்ளது.

இந்நூலாசிரியர் கந்தவன நாதனிடத்து எல்லை யற்ற பேரன்பு பூண்டவர். இவருக்கு நாற்பத்தெட்டா வது வயதில் வந்த கொடிய சன்னிநோய் கந்தவன நாதனருளால் நீங்கப்பெற்ற புதுமை புலவர் வரலாற் றில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இவர் கந்தவன நாதர் மேற் பதிகமுந் திருப்பள்ளி யெழுச்சியும் நான்மணி மாலையும் பாடியுள்ளார்.

மார்க்கண்டேயர் தமக்கு வகுத்த பதினாறுண் டாகிய காலவெல்லையைத் தவத்தாற் கடந்ததுபோ லத் தமது இறுதிக்காலத்தைத் தவத்தாற்கடந்து இப் பிறப்பிலேயே வினைப்பய னழிந்து வீடுபேறு கைகூ டத் தவஞ்செய்யும் பல அடியார்களையுடைய பதியா தலின் காலங் கடக்குங் கதிரை யென்றார்.

இனிக் காலமென்றது நாள்கோள்களால் விளை யுங் காலபலனைக் கருதும் எனக்கொண்டு, திருஞான சம்பந்தப்பெருமான் கோளறு பதிகம் பாடித் தீயனவாய நாள் கோள்களை விலக்கியது போலக் காலபலனை விலக்குதல் எனப் பொருளுரைத்தலும் அமையும்.

★

ஒண்டொடி நல்லா ருரைநடையு நெல்வயலுங்
கண்டனங் காட்டுங் கதிரையே—கண்டபடி
பாவையான் பாடப் பரிந்துகேட் டின்பருளு
மாவையான் பாடன் மலை. (45)

**இதன்பொருள்:—**

கண்டபடி பாவையான் பாட—திருவருளொன் றையே கருதாது உலகியல் கருதியும் அடியேன் பாடித்துதிக்க, பரிந்து கேட்டு இன்பருளும்—அவற்றை இரங்கிக் கேட்டுத் திருவருள் சுரக்கும், மாவை யான் பாடன் மலை—மாவைநகர்க் கந்தவேளது பாடல் பெற்ற மலைநிலம், ஒண்டொடி நல்லார் உரை நடை—ஒளிமிக்க வளையலணிந்த மகளிரது சொல்லும் நடையும், கண்டு அனம் காட்டுங் கதிரையே—முறையே கற்கண்டையும் அன்னத்தை யுங் காட்டுவது போலுங் கதிரைப்பதியே யாகும். நெல்வயல் — நெல்வயல்கள், கண்டனங் காட்டுங் கதிரையே—நெற்பொலி தூற்றும் பொலிவான காட்சியைக் காட்டுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் மகளிரது இன்சொற்கள் கற்கண் டின் இனிமையை நினைவிற்குக் கொண்டுவந்து காட்டும். அவர்களது நடை அன்னத்தின் நடையழகை நினைவிற்குக் கொண்டுவந்து காட்டும். நெல்வயல் களிற் பொலிதூற்றுங் காட்சி கண்ணுக் கினிமை தரும்.

ஒண் தோடி—ஒளிமிக்க வளையல். உரை—சொல். கண்டு—கற்கண்டு. அனம்—அன்னம். பரிதல்—இரங்குதல். கண்டனம்—பொலி தூற்றுதல்.

ஆசிரியர் தாம் நிலையாமையை உணர்ந்திருந்தும் வீடுபேற்றை வேண்டிப் பாடாது வறுமை பிணி முதலிய துன்பங்களை நீக்கியருளுமாறு பாடியதையும் அத்துன்பங்கள் அவனருளாலே நீங்கியதையும் நினைந்து கண்டபடி பாவையான் பாடப் பரிந்து கேட்டின்பருளும் என்றார். இவர் இப்பதித் தலைவன் மேல் மாவைநகர் முருகவேள் பதிகம் பாடியுள்ளார்.

கதிர்காமம் பல மெய்யடியார்களின் பாடல் பெற்ற தலமாதலின் பாடன்மலை என்றார்.

யாழ்ப்பாணத்தில் முருகப் பெருமான் எழுந்தருளி யிருக்குந் திருப்பதிகள் பல. அவற்றுட் கதிரைமலையோடொத்த பழைமையும் பெருமையுமுடையன இவ்விரண்டுமாதலின் இவற்றையே கூறினர். கந்தகிரியிலிருந்து கதிரைமலைக்கு எழுந்தருளிய முருகக் கடவுள் ஒரு திருவிளையாடலாக மரக்கலத்தில் யாத்திரை செய்தாரென்றும் அவ்வாறு செய்தவழிக் காங்கேசன் றுறையிலுங் கந்தவனத்திலுந் தங்கிச் சென்றாரென்றுந் தக்கண கைலாய மான்மியமும் ஈழமண்டல சதகமுங் கூறும்.

மாவிட்டபுரத்திற் பாண்டியன் மகளாகிய மாருதப்புரவீகவல்லியின் குதிரைமுகம் மாறியதென்றும் அவ்வம்மையாரால் அத்திருக்கோயில் கட்டுவிக்கப் பட்டதென்றுங் கூறப்படுகின்றது. இத்தல வரலாறுகளை விரிந்த நூல்களிற் கண்டுகொள்க.

★

சீர்முகம்பூ வன்னார் திருநுதலுந் தாழ்குழலுங்
கார்முகங் காட்டுங் கதிரையே—சேரு
மயில்வாக னத்த னருமருக னேறு
மயில்வா கனத்தன் மலை. (46)

**இதன்பொருள்:—**

சேரும் அயில் வாகன்—திருக்கரத்திற் பொருந்திய வேலினது வெற்றியை யுடையவனும், நத்தன் அரு மருகன்—சங்கை யேந்திய திருமாலுக்கு அரிய மருகனும், ஏறும் மயில் வாகனத்தன்—ஊர்தியாக ஏறிய மயில்வாகனத்தை யுடையவனும் ஆகிய முருகக் கடவுளின், மலை—மலை, சீர்முகம் பூ அன்னார் திருநுதல் — சிறப்பமைந்த முகம் தாமரை மலரை ஒத்த மகளிரது நெற்றி. கார்முகங் காட்டுங் கதிரையே—வில்லையொத்துக் காட்டுகின்ற கதிரைப் பதியே யாகும். தாழ் குழல்—அவர்களுடைய நீண்ட கூந்தல், கார்முகங் காட்டுங் கதிரையே—மேகத்தை ஒத்துக் காட்டுகின்ற கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில், மகளிரின் தாமரை மலர்போன்ற முகங்களில் வில்லையொத்த நுதல்கள் பொலிந்து தோன்றும். அவர்களின் நீண்டு தாழ்ந்த கூந்தல் மேகம்போலக் கரியதாய்ப் பரந்து சூழன்றிருக்கும்.

கார்முகம்—வில்லு. அயில்—வேல். நத்தன்—சங்கை யுடையவன். திருமாலின் சங்கு பாஞ்ச சன்னியம் எனப்படும்.

முருகக் கடவுளின் திருக்கரத்திலுள்ள வேற் படை மூவிலை வடிவமானது. இவ்வடிவம் இச்சாசத்தி கிரியாசத்தி ஞானசத்தியாகிய மூன்று சத்திகளுஞ் சேர்ந்த சத்தி வடிவமாகும். முருகக்கடவுள் இவ்வேற் படையைத் தாங்கிக் குருமணியாய் எழுந்தருளி மன்னுயிர்களின் பாசத்தை அறுத்து அவைக

ளுக்கு வீடுபேறருளுவர். சத்திவடிவினராகிய முருகக் கடவுளைப்போல வேற்படையுஞ் சத்திவடிவினதாகலின் அதனையும் முருகக்கடவுளென்றே பாவனை செய்து வழிபடுவர்.

திருமாலின் மகளிரை மணந்து கொண்டமையால் முருகக் கடவுள் திருமாலுக்கு மருகராயினர்.

முருகப்பெருமான் மயில்வாகனத்திலே தேவியர் அருகிருப்ப வேலைக் கையிலேந்தி வீற்றிருப்பாரேன்பது பின்னிரண்டடிகளாற் கூறப்பட்டது.

இதுமுதல் எட்டு வெண்பாக்கள் முருகப் பெருமான் தொண்டர்களுக்குக் காட்சிதருந் திருக்கோலப் பொலிவைக் கூறுவனவாம்.

★

தூவியிள மஞ்ஞைகளுந் தொண்டர்களு மாவின்பாற்
காவடிவைத் தாடுங் கதிரையே—தாவுமடல்
அஞ்சே வலத்தனங்கை மாங்கனிக்குப் பூவலஞ்செய்
அஞ்சே வலத்த னகம். (47)

**இதன்பொருள்:—**

தாவும் அடல் அம் சே வலத்தன்—தாவிப் பாயும் வலிமையுடைய அழகிய இடபக் கொடியை உயர்த்திய சிவபெருமானின், அங்கை மாங்கனிக்கு —அழகிய கையிலிருந்த மாங்கனியைப் பெறுதற்காக, பூவலஞ் செய்—பூமியை வலமாகச் சுற்றி வந்த, அம் சேவல் அத்தன் — அழகிய சேவற் கொடியை உயர்த்திய முருகக்கடவுளின், அகம்— கோயில், தூவி இள மஞ்ஞைகள் — தோகையாற்

சிறந்த இள மயில்கள், மா இன்பாற் கா அடி வைத்து ஆடுங் கதிரையே—பெரிய இன்பத்திஞலே வலிய பாதங்களைப் பெயர்த்து வைத்து ஆடுங் கதிரைப்பதியே யாகும். தொண்டர்கள்—அடியவர் கள், ஆவின் பாற் காவடி வைத்து ஆடுங் கதிரையே —பசுப்பாற் காவடிகளைத் தோளில் வைத்து ஆடுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் இளமயில்கள் பெரிய இன்பத்தி ஞல் வலிய பாதங்களைத் தூக்கித் தோகையை விரித் துக் கூத்தாடும். தொண்டர்கள் பாற்காவடிகளைத் தோளில் வைத்துக் கூத்தாடுவர்.

தூவி—தோகை. கா — வலிமை. மென்சாய லுடைய மயிலுக்குப் பாதங்கள் கொடிய விடப் பாம்புகளையும் அடக்கும் வலி மிக்கனவாய் அமைந்த சிறப்பு நோக்கிக் காவடி என்ருர். தாவுதல்—பாய் தல். அடல்—வலிமை. சே—இடபம். வலம்—வெற்றி பூ—பூமி. அத்தன்—கடவுள்.

இப்பதியில் நிகழும் அற்புதக் காட்சிகளிற் காவடி யாட்டம் மிக அழகியது.

ஒருமுறை சிவபெருமான் தம் மைந்தராகிய விநாயகப் பெருமானையும் முருகப் பெருமானையும் நோக்கி, "உங்களிருவீரிலும் முதலில் உலகைச் சுற்றி வருபவருக்கு இம் மாங்கனியைக் கொடுப் பேன்", என்று ஒரு மாங்கனியைக் காட்டியருளினுர். முருகப்பெருமான் விரைந்தெழுந்து மயில்வாகனத் தில் உலகத்தைச் சுற்றி வந்தார்; விநாயகப்பெரு மான், "தேவரீரே எல்லா வுலகுமாயிருக்கின்றீர்,"

என்று சொல்லிச் சிவபெருமானை வலம் வந்து மாங் கனியைப் பெற்றுக்கொண்டார். இது மாங்கனிக்குப் பூவலஞ் செய்த வரலாறு.

சேவலைக் கொடியாக வுடைய ரென்பது ஈற்றடியாற் கூறப்பட்டது.

★

ஆராம முல்லை யணிவரையி லாவணத்திற்
காரா மணிசேர் கதிரையே—சேரு
மகரமுதல் வன்னங்க ளாயினன் வாரி
மகரமுதல் வன்னன் வரை. (48)

**இதன்பொருள்:—**

சேரும் அகரமுதல் வன்னங்கள் ஆயினன்—பொருந்திய அகரமுதலாகச் சொல்லப்படும் எழுத்துக்களின் வடிவாயிருப்பவனும், வாரி மகர முதல் வன்னன்—கடலில் வாழும் மகரத்தின் பெயராற் கூறப்படும் சனியின் தந்தையாகிய சூரியனது சிவந்த நிறத்தை யுடையவனும் ஆகிய முருகக்கடவுளின், வரை—மலை. ஆராம முல்லை அணிவரையில்—சோலைகளையுடைய முல்லை நிலத்தின் அழகிய சிறு மலைகளில், காராம் அணி சேர் கதிரையே—எருமைகள் வரிசையாகச் சென்று சேருங் கதிரைப் பதியேயாகும். ஆவணத்தில்—கடைவீதிகளில், காரா மணி சேர் கதிரையே—காராமணிப் பயறு விலைப் படுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் சோலைகளையுடைய முல்லை நிலத்தின் மலைச் சாரல்களில் எருமைகள் கூட்டங் கூட்

டமாக மேயும்; கடைவீதிகளிற் காராமணிப் பயறு விற்கப்படும்.

ஆராமம்—சோலை. ஆவணம்—கடைவீதி. காரான்—எருமை. காரான் காராமெனத் திரிந்தது. காராமணி—கொம்புப் பயறு. வன்னம்—எழுத்து. வாரி—கடல். மகரம்—மகரமீன். சனிக்கு மகரமென்பதும் ஒரு பெயர். சனியின் தந்தை சூரியன்.

முருகக் கடவுள் சூரியனைப்போலச் சிவந்த நிறமுடையவ ரென்பது இதனாற் கூறப்பட்டது.

"உவக முவப்ப வலனேர்பு திரிதரும்
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி"

எனத் திருமுருகாற்றுப்படையில் வருவது காண்க.

எல்லாவெழுத்துக்களும் ஓங்கார வடிவாகிய குடிலையிற் றோன்றுதலின் 'அகரமுதல் வன்னங்கள்ஆயினன்' என்றார்.

★

வாய்ச்ச தருநிரையும் வண்டமிழோர் வெண்கவியுங்
காய்ச்சீர் விரவுங் கதிரையே—ஓச்சலிலாப்
பந்தத் திருக்குடையப் பார்த்தெனையாள் பன்னிரண்டு
பந்தத் திருக்குடையான் பற்று. (49)

**இதன்பொருள்:—**

ஓய்ச்சலிலாப் பந்தத் திருக்குடைய—ஒழிதலில்லாத பிறவிகளைத் தருகின்ற முக்குற்றமும் நீங்குமாறு, பார்த்து எனை ஆள்—அருள்நோக்கஞ்செய்து என்னை ஆட்கொள்ளும், பன்னிரண்டு பந்தத் திருக்

குடையான்—பன்னிரண்டு வரிசையான திருவிழி களை உடைய முருகக் கடவுளின், பற்று—கோயில், வாய்ச்ச தரு நிரை—வாய்ப்பான பயனைத் தரும் வரிசையான மரங்கள், காய்ச் சீர் விரவுங் கதிரையே —காய்ச் சிறப்புப் பொருந்துங் கதிரைப்பதியே யாகும். வண்டமிழோர் வெண்கவி—வளமிக்க தமிழ்ப் புலவர்களது வெண்பா என்னுஞ் செய்யுள், காய்ச் சீர் விரவுங் கதிரையே – காய்ச்சீரைப் பெரிது முடைத்தாய் வருங் கதிரைப்பதியே யாகும்.

தருநிரை—மரவரிசை. வெண்கவி—வெண்பா. பந்தம்—கட்டு. ஈண்டுப் பிறவிக்கட்டை உணர்த்தும். 'தோல்லையிரும்பிறவிச் சூழுந்தளை' என வருவதுங் காண்க. திருக்கு—குற்றம். அவை காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்றுமாம். இக்குற்றங்கள் திருவருட் பார்வையால் உண்டாகும் மெய்யுணர்வினல் நீங்கும். பன்னிரண்டு பந்தத் திருக்கு—பன்னிரண்டு வரிசையான கண்கள்.

இதனலே பன்னிரண்டு கண்கள் வரிசையாயிருந்து மன்னுயிர்க் கருள்பொழியும் அழகு கூறப்பட்டது.

★

மண்மீ தணிந்தியு மாதர்முகத் தாமரையுங்
கண்மீ னுலாவுங் கதிரையே—யுண்ணெகிழ்வாற்
பாற்கா வடியாடும் பத்தர்க் கருளுமறை
பாற்கா வடியான் பதி. (50)

## இதன்பொருள்:—

மறைபாற் கா அடியான் — வேதங்களின் நான்கு பகுதிகளிடத்துந் துதித்துக் காக்கப்படுந்

திருவடிகளையுடைய முருகக் கடவுள், பாற்காவடி யாடும் பத்தர்க்கு அருளும் பதி—பாற்காவடியெடுத்து ஆடி மகிழும் பத்தர்களுக்குத் திருவருள் செய்யுந் திருப்பதி, மண்மீது அணி நதி—பூமியிலுள்ள நதி களுக்கு அணிகலன் போலச் சிறந்த மாணிக்க கங்கையில், கண்மீன் உலாவுங் கதிரையே—சிறிய கண்களால் அழகுமிகும் மீனினங்கள் உலாவுங் கதிரைப்பதியே யாகும். மாதர் முகத் தாமரை— மகளிரின் முகமாகிய தாமரைப் பூக்களில், கண் மீன் உலாவுங் கதிரையே—கண்களாகிய கயல்மீன் கள் பிறழ்ந்துலாவுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் தீர்த்தச் சிறப்பினுல் உலகிலுள்ள நதிகளுக்கு அணிகலன் போன்றிருக்கும் மாணிக்க கங்கையில் அழகிய சிறிய கண்களையுடைய மீன் கள் உலாவி விளையாடும். பெண்களது முகத் தாம ரைகளிற் கண்களாகிய மீன்கள் பிறழ்ந்து விளை யாடும்.

மறை—வேதம். பால்—பகுதி. வேதங்கள் நான்கு பகுதியை யுடையன. அவை இருக்கு எசுர் சாமம் அதர் வணம் எனப்படும். இம்மறைகள் புறச்சமயக் கொள் கைகளைத் தவிர்த்துச் சைவ சமயத்தின் உண்மை களையுஞ் சிவபெருமானது திருவடிப் பெருமைகளை யுஞ் சொல்லிக் காப்பனவாதலின் ‘மறையாற் கா வடி யான்’ என்ருர்.

இதனுல் மறைகளாற் காக்கப்படுந் திருவடிப் பெருமை கூறினர்.

★

முட்செறியுஞ் சாரலிலு மொய்குழலார் வாண்முகத்துங்
கட்செவி யோடுங் கதிரையே—அச்ச
மறுத்தாழாத் தாளார்தம் மாயவஞ் ஞான
மறுத்தாளாத் தாளார்தம் வாழ்வு. (51)

**இதன்பொருள்:—**

*அச்ச மறுத் தாழா — அச்சந்தருங் காமம் வெகுளி மயக்கமாகிய குற்றங்களில் அழுந்தாத, தாளார் தம்—நன் முயற்சியாளராகிய சான்றோர் களது, மாய வஞ்ஞானம் அறுத்து — மாயாமலத் திற் கேதுவாகிய அஞ்ஞானத்தை அறுத்து, ஆளாத் தாளார்தம் வாழ்வு—ஆட்கொள்ளுந் திரு வடிகளையுடைய முருகக்கடவுளது கோயில், முட் செறியுஞ் சாரலில்—முட்கள் பரந்த மலைச்சாரல் களில், கட்செவி யோடுங் கதிரையே—பாம்புகள் ஊர்ந்து திரியுங் கதிரைப்பதியே யாகும். மொய் குழலார் வாண் முகத்து — நெருங்கிய கூந்தலை யுடைய மகளிரது ஒளிமிக்க திருமுகங்களில், கண் செவி யோடுங் கதிரையே — கண்களின் கூரிய நோக்குச் செவிகளை யோடித் தாக்குங் கதிரைப் பதியே யாகும்.*

*இப்பதியில் முட்களையுடைய மலைச்சாரல்களிற் பாம்புகள் திரியும். மகளிரது ஒளிமிக்க திருமுகங் களிற் கண்கள் செவிகளைத் தாக்கும் விழிச் சிறப் புடையனவாயிருக்கும்.*

மொய்த்தல்—நெருங்குதல். வாள்—ஒளி. கட்செவி —பாம்பு. பாம்புகளுக்குக் கண்களே செவிகளாயு மிருத்தலின் கட்செவி யெனப்பட்டது. மறு—குற் றம். தாழ்தல்—அழுந்துதல். தாள்—முயற்சி. தாள்— திருவடி.

*முக்குற்றங்களுந் தீவினைகளுக் கேதுவாதலின் அஞ்சத்தக்கன வாகுமென்க. சான்றோர்கள் தமது*

ஊக்கத்தினுல் இக்குற்றங்களில் அழுந்தாது நன்னெறிப்பட்டுத் தெய்வத்தை வழிபட்டு வாழ்வர். அவர்களது வழிபாட்டையுந் தளரா வூக்கத்தையுங் கண்ணுற்ற பெருமான் குருவடிவா யெழுந்தருளித் தமது திருவடிக்கீழ் ஆளாகக் கொள்வர் என்றவாறு.

இதனுற் றொண்டர்களை ஆட்கொள்ளுந் திருவடிப் பெருமை கூறினுர்.

★

நம்பனுறை பேடகமு நல்லாவி னெய்விளக்குங்
கம்பமா வேறுங் கதிரையே—கும்பிடுவோர்
சங்கடம்ப ஞளுஞ் சிதைத்தருளைத் தந்தகந்தன்
செங்கடம்ப ஞளுஞ் சிலம்பு. (52)

**இதன்பொருள்:—**

கும்பிடுவோர் சங்கடம் பன்ஞளுஞ் சிதைத்து—வழிபடுவோரது துன்பங்களை எப்பொழுதுங் கெடுத்து, அருளைத் தந்த கந்தன் — திருவருளைக் கொடுக்குங் கந்தக் கடவுளும், செங்கடம்பன் — சிவந்த கடப்ப மாலையைத் தரித்தவனும் ஆகிய முருகக்கடவுள், ஆளுஞ் சிலம்பு—ஆட்சிபுரியும் மலை, நம்பன் உறை பேடகம்—முருகப்பெருமான் மந்திர வடிவாயுறையுந் தந்தமணிப் பேடகம், கம்பமா வேறுங் கதிரையே—யானைமீது எழுந்தருளி உலா வருங் கதிரைப்பதியே யாகும். நல் ஆவின் நெய் விளக்கு—நல்ல பசுநெய்யி லெரியும் நெய்விளக்குகள், கம்பமா வேறுங் கதிரையே—செந்தினைமாத் தகழிகழில் ஏற்றப்படுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் முருகக்கடவுள் மந்திரவடிவாயுறையுந் தந்தமணிப் பேடகம் யானையில் ஏற்றப்பட்டு முக்கோண விதியில் எழுந்தருளி யுலாவரும். தினைமாத் தகழிகளில் நெய்விட்டு எரிக்கப்படும் நெய் விளக்குகள் மண்டபங்களிற் பத்தி பத்தியாக விளங்கும்.

நம்பன்—கடவுள். பேடகம்—பேழை. நல் ஆ—கபி லைப் பசு. கம்பு—செந்தினை. கம்பமா—யானை. பன்னுள் பனுள் எனக் குறைந்தது. சிதைத்தல்—கெடுத்தல். கந்தன்—சேர்க்கப்பட்டவன்; உமையம்மையார் ஆறு குழந்தைகளாக வளர்ந்த குமரனை ஒன்ருகச் சேர்த்து அணைக்க அப்பெருமான் ஒருருவாகிக் கந்தன் என்னும் பெயர் பெற்ருர்.

முருகன் மார்பிலணியும் மாலை கடம்பு. திருமுரு காற்றுப்படையில்,

“ இருள்படப் பொதுளிய பராரை மராஅத்
துருள்பூந் தண்டார் புரளு மார்பினன் ”

என வருதல் காண்க.

இப்பதியின் மூலத்தானத்தில் ஒரு மரப்பெட்டி திரைமறைவில் வைக்கப்பட்டுள்ளது. ஏனைய தலங் களில் இருப்பது போன்ற உருவத் திருமேனி இத் தலத்தில் இல்லை. இப்பெட்டியினுள்ளே வேருெரு தந்தப் பேழை யிருக்கின்றதென்றும், அதனுள்ளே ஒரு மந்திர வருட்குறி வைக்கப்பட்டுள்ளதென்றும், அவ்வருட்குறியில் முருகனது ஆறெழுத்து மந்திர மமைந்துள்ளதென்றும், அதனைக் கலியாண கிரி என்னும் முத்துலிங்க சுவாமியார் செய்து வைத்தார் என்றுஞ் சொல்லப்படுகின்றது. இப்பேடகம் விழாக் காலங்களில் யானைமீது ஏற்றப்பட்டு முக்கோண வீதி யில் உலாவருமென்க. இதனுற் செங்கடப்ப மாலையை அணிவரேன்பது கூறப்பட்டது.

★

தந்தமணிப் பேடகத்திற் சார்புனத்துப் பாத்திகளிற்
கந்தமு லஞ்சேர் கதிரையே—தந்தமணி
கைக்கும்ப கம்பக் கடகளிற்றை யேறியு
கைக்கும் பகவனுறை காப்பு. (53)

**இதன்பொருள் :—**

*தந்தம் அணி—தந்தங்கள் கிம்புரியினாலும் மணி வடங்களாலும் அழகு செய்யப்பட்ட, கைக் கும்ப கம்பக் கடகளிற்றை—கையை யுடைய மத்தகத்தை யும் அசைந்த நடையினையும் மதத்தையு முடைய பிணிமுகமென்னும் யானையை, ஏறி உகைக்கும்—இவர்ந்து செலுத்தும், பகவன் உறை காப்பு—முருகப்பெருமான் உறையும் நகரம், தந்த மணிப் பேடகத்தில்—யானைத் தந்தத்தினாற் செய்யப்பட்ட அழகிய பேழையில், கந்தமூலஞ் சேர் கதிரையே—கந்தக்கடவுளது ஆறெழுத்து மந்திரம் வைக்கப் பட்டிருக்குங் கதிரைப்பதியே யாகும், சார்புனத்துப் பாத்திகளில்—புனத்தைச் சார்ந்த அயல் நிலத்துப் பாத்திகளில், கந்தமூலஞ் சேர் கதிரையே—வள்ளி முதலிய கிழங்கு வகைகள் நிறைந்திருக்குங் கதிரைப்பதியே யாகும்.*

*இப்பதியில், மூலத்தானத்திலுள்ள பேடகத்தின் உள்ளே முருகப்பெருமானது அருட்குறியாகிய ஆறெழுத்து மந்திர மெழுதப்பட்ட யந்திர மிருக்கின்றது. புனத்தருகே யுள்ள பாத்திகளிற் கந்தமூல மாகிய வள்ளிக்கிழங்கு வகைகள் உள்ளன.*

தந்தம்—*யானைத் தந்தம்.* கந்தமூலம் — *கந்தனின் மூல மந்திரம்.* கந்தமூலம்—*கிழங்கு வகைகள். இரு பெயரொட்டு.* கும்பம் — *மத்தகம்.* கம்பம்—*அசைவு.* கடம்—*மதம்.* உகைத்தல்—*செலுத்துதல்.*

முருகப்பெருமானுக்கு யானையூர்தியும் உண்டென நூல்கள் கூறும். திருமுருகாற்றுப்படையில் முருகன் யானையூர்தியிற் றிருச்சீரலைவாய்க்குச் செல்லுஞ் சிறப்புக் கூறப்படுகின்றது. இதனால் யானையூர்தி கூறப்பட்டது.

★

பேணிப் பணிகுநரும் பெட்பார் மதவேளுங்
காணிக்கை யேந்துங் கதிரையே—பேணித்
திருவோண தீர்த்தன் றிசைமுகன்சே விக்குந்
திருவோண தீர்த்தன் சிலம்பு. (54)

**இதன்பொருள்:—**

திருவோண தீர்த்தன்—திருவோண நாளுக்குரிய தூயோனாகிய திருமாலும், திசைமுகன்—நான்முகனும், பேணிச் சேவிக்கும்—தமதுள்ளத்துப் பாதுகாத்து வைத்து வணங்கும், திரு ஓண தீர்த்தன்—திருவமைந்த மாணிக்க கங்கைத் தீர்த்தத்தையுடைய முருகக்கடவுளது, சிலம்பு—மலை, பேணிப் பணிகுநர்—உள்ளன்புடன் வேண்டித் துதிக்கும் அடியார்கள், காணிக்கை ஏந்துங் கதிரையே—தாம் செலுத்த விரும்பிய காணிக்கைப் பொருள்களை ஏந்தி நிற்குங் கதிரைப்பதியே யாகும். பெட்பார் மதவேள் — அழகுருவாகிய மன்மதன், காண் இக்கை ஏந்துங் கதிரையே — வணங்கிய கரும்பை ஏந்துங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் அடியார்கள் கையுறைப் பொருளை ஏந்தி நிற்பர். மன்மதன் வளைந்த கருப்புவில்லை ஏந்தி நிற்பன்.

பேட்பு — அழகு. மதவேள் — காமக்கடவுளாகிய மன்மதன். காணிக்கை—கையுறை. இக்கு—கரும்பு. காணுதல்——வணங்குதல், காட்சிக்கினிய கரும்பென ஆலும் அமையும். ஓணம்—ஆறு. மாணிக்க கங்கை யைக் குறித்தது. தீர்த்தன்—தூயோன். தீர்த்தன் — தீர்த்தத்தை உடையவன். இப்பதிக்குரிய தீர்த்தம் மாணிக்க கங்கை யெனப்படும்.

திருமாலும் நான்முகனும் இறைவன் வழிப் பட்டுநின்று காத்தலும் படைத்தலுஞ் செய்பவரா தலின் எப்பொழுதும் வழிபடுவரென்றார்.

இதனாலே கதிர்காம வேலவரின் அழகிய திருக்கோ லத்தை இடையறாது கண்டு துதித்துநிற்பவர் திருமாலும் நான்முகனும் என்பது கூறப்பட்டது.

★

வைத்தமணிப் பந்தர்களு மானமலி வீரர்களுங்
கத்திகை தூக்குங் கதிரையே—குத்திச்
செருப்பா லடித்தானைச் சேர்வித்தான் சூரைச்
செருப்பா லடித்தான் சிலம்பு. (55)

## இதன்பொருள்:—

குத்திச் செருப்பால் அடித்தானைச் சேர்வித் தான்—உதிரஞ் சொரிந்த கண்ணை அம்பாற் குத் திச் செருப்பால் அடித்த கண்ணப்ப நாயனாரை வலப்பக்கத்திற் சேர்த்துக்கொண்டவனும், சூரைச் செருப்பால் அடித்தான்—சூரனைப் போர்க்களத்திற் றோல்வியுறச் செய்தவனும் ஆகிய முருகக்கடவுளின், சிலம்பு—மலை, வைத்தமணிப் பந்தர்கள் — திருப்

பணியின் பொருட்டு அமைக்கப்பட்ட தண்ணீர்ப் பந்தர்களில், கத்திகை தூக்குங் கதிரையே—பூமாலை கள் தூக்கப்பட்டிருக்குங் கதிரைப்பதியே யாகும். மானம் மலி வீரர்கள்—மானமுடைய போர்வீரர்கள், கத்தி கை தூக்குங் கதிரையே — வாட்படையைக் கையிலேந்தியுள்ள கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிலுள்ள பந்தர்கள் தூக்கப்பட்ட பூமாலைகளால் அழகுபடுத்தப்படும். மானத்தையே உயிரினும் மேலாக மதிக்கும் வீரர்கள் வாட்படைகளைக் கைகளிலேந்தி யுலாவுவர்.

கத்திகை—பூமாலை. செரு—போர்.

வேடர்குலத்திற் பிறந்த திண்ணனார் திருக்காளத்தி மலையில் ஆட்கொள்ளப்பட்ட வரலாறு ஈண்டுக் கூறப்பட்டது. அவர் பழுதடைந்த கண்ணை அம்பாலெடுத்ததை அம்பாற் குத்திய தென்றும், செருப்புக் காலை ஊன்றியதைச் செருப்பால் அடித்த தென்றுங் கூறியது வஞ்சப் புகழ்ச்சி யாகும்.

முருகக்கடவுள் சிவனது சத்தியாதலின் சிவனோடு தொடர்புடையதாகக் கூறப்படும் நிகழ்ச்சியை முருகனுக்குமாக்கிக் கூறினர். இவ்வாறே அடுத்து வரும் இரு வெண்பாக்களிற் றிருமாலும் நான்முகனும் அடிமுடி தேடிய வரலாறுங் கூறப்படும்.

★

நிட்டைபுரி வோர்பிறவி நீர்ப்பெருக்கம் நெற்கழனிக்
கட்டங் கழிக்குங் கதிரையே—உட்டெளியப்
போதமருந் திட்டிப் புருடோத் தமர்க்கன்று
போதமருந் திட்டான் புரம். (56)

**இதன்பொருள்:—**

உட்டெளிய—உள்ளந் தெளிந்து நல்லுணர்ச்சி தோன்ற, போது அமருந் திட்டிப் புருடோத்த மர்க்கு—தாமரை மலரை ஒத்த கண்களையுடைய திருமாலுக்கு, அன்று போத மருந்து இட்டான் புரம்—சோதி வடிவத்தைத் தேடிக் காணாத அவ் வேளையில் மெய்ஞ்ஞானமாகிய உயிர் மருந்தினை அருளிச் செய்த இறைவனது நகரம், நிட்டை புரி வோர்—தவஞ் செய்வோர், பிறவிக் கட்டங் கழிக் குங் கதிரையே—பிறவித் துன்பத்தை நீக்குங் கதி ரைப்பதியே யாகும். நெற்கழனி நீர்ப்பெருக்கம்— நெல்வயல்களிலுள்ள வெள்ளம், அங்குக்கட்டு அழிக் குங் கதிரையே — அவ்விடத்திற் கட்டப்பட்டுள்ள அணைக்கட்டை அழித்துப் பெருகுங் கதிரைப்பதியே யாகும்

இப்பதியில் நிட்டை கூடியிருக்குந் தவமுடை யவர்கள் பிறவித் துன்பத்தைக் கடப்பர். வயல்களிலுள்ள பெருவெள்ளம் அணைக்கட்டை உடைத்துப் பெருகும்.

கழனி—வயல். கட்டம்—துன்பம். கட்டு—அணைக் கட்டு. போது—தாமரைப்பூ. திட்டி—கண். புருடோத்த மன்—திருமால். போதம் — மெய்ஞ்ஞானம். மருந்து— உயிர் மருந்து. உயிர்களின் பிறவிப் பிணிக்கு மருந்து என்றவாறு.

முன்னொருபோது சோதிவடிவாய் நின்ற இறைவனின் அடிமுடிகளைத் தேடிக் காணாது திருமாலும் பிரமனுந் தளர்ந்து வருந்தினர். அப்போது இறைவன் அவர்களுக்கு மெய்யுணர்ச்சி தோன்றுமாறு ஞானமருளிச் செருக்ககற்றிக் காத்தனன் என்பது வரலாறு.

இவ்வெண்பாவிற் றிருமாலுக் கருளியமை கூறி அடுத்த வெண்பாவிற் பிரமனுக் கருளியமை கூறுவர்.

★

குட்டமலா் தாமரையுங் கோதிலடி யாா்மலமுங்
கட்டவிழக் காலுங் கதிரையே—யுட்டெளிவில்
அஞ்சத்தா ஞனுன் னடைக்கலமென் றேத்தவருள்
அஞ்சத்தா ஞனுன் னகம். (57)

**இதன்பொருள்:—**

உட்டெளிவில்—உள்ளத் தெளிவில்லாத, அஞ்சத்து ஆனன்—அன்னவாகனனாகிய பிரமதேவன் உன் அடைக்கலம் என்று ஏத்த—அடியேன் உன்னுடைய அடைக்கலமென்று வழிபட, அருள் அம்சத்து ஆனன்—அவனுக்கருளிய அழகிய மெய்ப்பொருளான இறைவன், உன்னு அகம்—விரும்பிய கோயில், குட்டம் மலர் தாமரை — குளத்தில் மலருந் தாமரை மலர்கள், கட்டு அவிழக் காலுங் கதிரையே—முகை நெகிழும்படி ஞாயிறு இளங் கதிரை வீசுங் கதிரைப்பதியே யாகும். கோதில் அடியார் மலம்—குற்றமற்ற தொண்டர்களது மும் மலங்களும், கட்டு அவிழக் காலுங் கதிரையே—

பிணிப்பவிழுமாறு ஞானசூரியனாகிய கதிரைப்பெருமானின் அருளொளி கதிர்வீசுங் கதிரைப்பதியேயாகும்.

இப்பதியிற் றாமரைகளின் முகை நெகிழும்படி ஞாயிறு செவ்விய இளங்கதிரை வீசும். மும்மலங்களின் பிணிப்பு நெகிழும்படி ஞானசூரியனாகிய கதிர்காம வேலவரின் திருவருட்சோதி மெய்ஞ் ஞானக் கதிரை வீசும்.

குட்டம்—குளம். கோது—குற்றம். அஞ்சம்—அன்னம். சத்து—உண்மைப் பொருள். காலும் என்னும் வினைக்கேற்பக் கதிர் என்னுஞ்சொல் வருவிக்கப் பட்டது.

இதனால் அன்னமாகி, முடியைத் தேடிய பிரமன் அதனைக் காணாது கலங்கிச் செருக்கடங்கி அடைக்கலம் புகுந்து மெய்யுணர்ந்த வரலாறு கூறினர்.

அஞ்சத்து ஆனன் என்பதில் அழகிய சிவசத்தியானன் என்னும் பொருள் தொனிக்க வுரைத்தது, இம்மூன்று வெண்பாக்களினுஞ் சிவத்தினது செயலை முருகனுக்கேற்றி யுரைத்த காரணத்தைப் புலனுக்குமென்க.

★

பொற்பார் கழகத்தும் போகும் வழியகத்துங்
கற்பா ரிருக்குங் கதிரையே—நற்புலவன்
வேன்முட்டை யென்றூழ் மிகுசுரத்துப் பேர்வினவ
நான்முட்டை யென்று னகம். (58)

**இதன்பொருள்:—**

நற்புலவன்—பொய்யாமொழிப் புலவர், வேல் முள் தை என்றூழ் மிகுசுரத்து—வேலம் முட்கள் தைப்பதும் சூரிய வெப்பமிக்கதுமாகிய காட்டில், பேர் வினவு—உமது பெயர் யாதென்று கேட்க, நான் முட்டை யென்றூன் நகம்—நான் முட்டை என்னும் பெயருடையேன் என்று கூறிய முருகக்கடவுளது மலை, பொற்பார் கழகத்து—பொலிவுடைய கல்விக் கழகத்தில், கற்பார் இருக்குங் கதிரையே—கல்விபயிலும் மாணவர்கள் இருக்குங் கதிரைப் பதியே யாகும். போகும் வழியகத்து—செல்லும் வழிகளில், கற்பார் இருக்குங் கதிரையே—கற்பாறைகள் இருக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் அழகிய கல்விக் கழகங்களில் மாணவர் கல்வி பயிலுவர்; போகும் வழியிற் கற்பாறைகள் காணப்படும்.

பொற்பு—பொலிவு. வேல்—வேலமரம். என்றூழ்—சூரியன். சுரம்—காடு. நகம்—மலை.

பொய்யாமொழிப் புலவர் சத்தியைப் பாடுமியல்பினர். முருகக்கடவுள் ஒருமுறை இவரைத் தம் மீது கவி பாடும்படி கேட்டார். புலவர் "பேட்டையையும் பாடி முட்டையையும் பாடுவேனோ?" என்று மறுத்தார். முருகக்கடவுளுங் கவி பெறுதற்கு ஏற்ற

தருணம் பார்த்திருந்தார். ஒருநாட் புலவர் காட்டு வழியே தனித்துச் செல்லும்போது, முருகக்கடவுள் வேட்டுவச் சிறுவனாய் வழிமறித்து, ஊரும் பெயரும் வினவி, என்னைப் பாடுவீராயின் விடுவேனென்றார். புலவர் கள்வர் கைப்பட்டோமென்றஞ்சி, உயிர் பிழைத்தற் பொருட்டுப் பாடு' தற்குத் துணிந்து, "ஐயனே! உம் பெயர் யாதோ?' வென மெல்ல வினவினர். முருகக்கடவுள் தம் பெயர் 'முட்டை' யென்றும் சுரப்போக்காக ஒரு வெண்பாப் பாடுகவென்றும் பணித்தார். உடனே புலவர்,

> "பொன்போலுங் கள்ளிப் பொரிபறக்குங் கானலிலே
> என்பேதை செல்லற் கியைந்தனளே—மின்போலு
> மானவேன் முட்டைக்கு மாருய தெவ்வர்போங்
> கானவேன் முட்டைக்குங் காடு"

என்று பாடினர். இதைக்கேட்ட முருகவேள், "இதிலே பொருட் குற்றமுண்டு. கள்ளி வெந்து பொரியாய்ப் போகுங் கானலிலே வேலம் முட்கள் வேகாதிருந்து காலிற்றைப்பது பொருந்துமோ? புலவர்கள் இவ்வாறு தவருகப் பாடுவரோ? நான் பாடுகிறேன் கேண்மின்" என்று கூறி,

> "விழுந்ததுளி யந்தரத்தே வேமென்றும் வீழின்
> எழுந்த சுடர்சுடுமென் றேங்கிச்—செழுங்கொண்டல்
> பெய்யாத கானகத்திற் பெய்வளையுஞ் சென்றனளே
> பொய்யா மொழிப்பகைஞர் போல்"

என்று பாடியருளினர். புலவர் அதைக்கேட்டுத் திகைத்து அஞ்சி நின்று சிந்திப்பாராயினர். முருகவேள், அவருக்குப் பெட்டை, முட்டை, யென்ற

முன்னைய நினைவு வரச்செய்து, அருள் நகை காட்டி மறைந்தார். புலவரும் முருகக்கடவுளின் அற்புதச் செயலை எண்ணி யெண்ணிப் பலவாறு துதித்துச் சென்றார். இது முட்டையென்று பெயர் கூறிய வரலாருகும்.

★

மாமயல்கூர் காமுகரில் வண்பொருளி லன்பருருக்
காமனம்பு தைக்குங் கதிரையே—தேமருவு
நன்ஞ வலங்கனி நாவலத் தாட்கீந்த
நன்ஞ வலங்க னகம். (59)

**இதன்பொருள் :—**

தேம் மருவு நல் நாவல் அம்கனி — இனிமை பொருந்திய நல்ல நாவலின் அழகிய பழத்தை, நா வலத்தாட்கு ஈந்த—நாவன்மையுடைய ஔவைப் பிராட்டியாருக்குக் கொடுத்த, நல் நா அலங்கன் நகம்—நல்ல வாய்மை கனிந்த நாவாற் றொடுத்த புகழ்மாலைகளைச் சூடிய முருகக்கடவுளது மலை, மாமயல்கூர் காமுகரில் அன்பர் உரு—பெரிய மயக்கங் கொண்ட காமுகர்களிடத்து அவர்கள் அன்பிற்குரிய மகளிரின் உருவத்தை, காமன் அம்பு தைக்குங் கதிரையே—மன்மதனது அம்புகள் பதிய வைத்து வருத்துங் கதிரைப்பதியே யாகும். அன்பர் உருகாமனம்—தொண்டர்கள் தமது உருகா நின்ற நெஞ்சை, வண்பொருளில் புதைக்குங் கதிரையே—பேரின்பமாகிய வளமிக்க முத்திப் பொருளிற் பதிய வைக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் காமுகர்களின் உள்ளம் மன்மதனது அம்புகளால் வருந்தித் தவிக்கும். தொண்டர்களின் உள்ளம் பேரின்ப வெள்ளத்திற் பதிந்து மகிழும்.

வண்பொருள்—பேரின்பப் பொருள். காமன்—மன்மதன். நாவலத்தாள்—நாவன்மையுடைய ஔவைப் பிராட்டியார். அலங்கல்—மாலை. உருகாமனம்—உருகி நிற்கும் மனம்.

ஒருநாள் ஔவையார் காட்டுவழியே சென்று களைப்பினால் ஒரு நாவல் மரத்தடியில் இருந்தார் ஔவையாருக்கு அருள் செய்யும் பொருட்டு முருகக்கடவுள் மாடுமேய்க்கும் இடைக்குலச் சிறுவன் போல அம்மரத்தில் இருந்தார். மேலே நிமிர்ந்து நோக்கிய ஔவையார், "மகனே! என்களை தீர உண்ணுதற்குச் சில பழங்கள் தரவேண்டும், என்ருர். சிறுவன் 'அம்மையே!' உனக்குச் சுடு பழங்கள் வேண்டுமோ? சுடாத பழங்கள் வேண்டுமோ?" என்ருன். ஔவையார் நாவற் பழத்திற் சுடு பழங்கள் எவ்வாறிருக்கும்? என்று சிந்தித்து, அப்பா! சுடாத பழமே வேண்டுமென்ருர். சிறுவன் மரக்கிளையை அசைத்தான். கனிந்த பழங்களும் கனியாத செங்காய்களும் உதிர்ந்தன. ஔவையார் கனிந்தனவற்றை எடுத்து அவற்றில் ஒட்டியிருந்த மணல் போக ஊதினர். சிறுவன், "பாட்டி! சுடாத பழங் கேட்டாயே! சுடுபழத்தை ஏன் எடுத்து ஊதுகின்ருய்" என்ருன். ஔவையார் "சுடுபழம்—கனிந்த பழம். சுடாத பழம்—கனியாத பழம்" என்னும் பொருள் நுட்பத்தை அதன்பின்பே சிந்தித்தார். இந்த இடைச் சிறுவனுக்குத் தோற்ருேமே என்று நாணினர்.

" கருங்காலிக் கட்டைக்கு நாணுக்கோ டாலி
இருங்கதலித் தண்டுக்கு நாணும்—பெருங்கானிற்
காரெருமை மேய்க்கின்ற காளைக்கு நான்றேற்ற
தீரிரவு துஞ்சாதென் கண் " என்னும் வெண்பா வைப் பாடி வருந்தினர்.

இதைக் கேட்டதும் சிறுவனய் வந்த முருகக் கடவுள் தமது உண்மை வடிவத்தைக் காட்டி "அம்மையே! நும்மோடு விளையாட்டாக இவ்வாறு சொன்னேன், இகழ்வதற்கன்று; உலகிலே நுமக்கு இணையாவார் யாவர்?" என்று தேற்றி மறைந் தருளினர். இஃது ஔவையாருக்கு நாவற்கனி கோடுத்த வரலாறு.

★

மல்லனீர் மூழ்குநரு மாசிறவ ருங்காவிக்
கல்லுடை தோய்க்குங் கதிரையே—சொல்லிறைவர்
மாவின் பழப்போரில் வண்பழனி போயெவர்க்கு
மாவின் பளப்போன் மலை. (60)

**இதன்பொருள்:—**

இறைவர் சொல் மாவின் பழப் போரில்—சிவ பெருமான் ஒரு திருவிளையாட்டாகச் சொல்லியரு ளிய மாம்பழப் போரில், வண் பழனி போய்—பிணங்கிக்கொண்டு வளமிக்க பழனிப்பதிக்குச் சென்று தனிமையாக எழுந்தருளி, எவர்க்கும் மா இன்பு அளப்போன் மலை — அத்திருப்பதியிலே தம்மை வழிபடு மெல்லோருக்கும் பெரிய இன் பத்தை நல்கும் முருகக்கடவுளின் மலை, மல்லர் நீர் மூழ்குநர்—வளமிக்க மாணிக்க கங்கையில் நீராடு வோர், காவிக்கல் உடை தோய்க்குங் கதிரையே—

மிகப்பான கற்களிற் றமது உடைகளைத் தோய்க் குங் கதிரைப்பதியே யாகும். மாசில் தவர்—குற்ற மற்ற தவத்தையுடைய முனிவர்கள், காவிக்கல் உடை தோய்க்குங் கதிரையே — காவிக் கல்லைக் கரைத்த செந்நிறச் சாயத்தை உடைகளுக் குத் தோய்க்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில், மாணிக்க கங்கையில் வைகறை நீராடுவோர் மிகப்பான கற்களில் உடைகளைத் தோய்க்கும் ஆரவாரம் பேரொலியை யுண்டாக்கும். காவியுடை யணியுந் தொண்டர்கள் காவிக் கல்லைக் கரைத்துத் தமது உடைகளுக்குச் செந்நிறமூட்டுவர்.

மல்லல் — வளம். காவிக்கல் — மிகப்பான கல். காவிக்கல்—காவிநிறக்கல். இறைவர் சோல் என மொழி மாறிப் பொருளுரைக்க.

மாம்பழப் போரின் வரலாறு முன்னர்க் கூறப் பட்டுள்ளது. அவ்விளையாட்டுப் போரில் விநாயகப் பெருமான் மாம்பழத்தைப் பெற்றுக்கொண்டமை யால் முருகப்பெருமான் தந்தையாரோடு பிணங்கிக் கொண்டு பழனி மலையில் வந்து தனிப்படக் கோயில் கொண்டருளினர். அதுகண்ட இறைவன் குமரனின் பிணக்கைத் தீர்க்க நினைந்துப் பழனிக் கெழுந் தருளி “மைந்தனே! பழம் நீயன்றோ! உனக்கு வேறு பழந் தருதலும் வேண்டுமோ?” என்று புகழ்ந்து அவர் பிணக்கைத் தீர்த்தருளினர். இது முருகப்பெருமான் பழனிக்குச் சென்ற வரலாறுகும்.

★

பட்டா ரிடையார் பருவிழியு மைம்பாலுங்
கட்டா ரிவருங் கதிரையே—கட்டிளமைக்
கும்பமுனி யத்தனத்துக் கொம்பனையாட் கின்பமருள்
கும்பமுனி யத்தனத்துங் குன்று. (61)

**இதன்பொருள்:—**

கட்டிளமைக் கும்பம் முனி அத்தனத்து—மிக்க இளமையோடு கும்பத்தின் பொலிவை முனிகின்ற அத்தகைய தனங்களை யுடைய, கொம்பு அனையாட்கு இன்பம் அருள்—பூங்கொம்பை ஒத்த வள்ளி நாயகியாருக்கு இன்பத்தைக் கொடுக்கும், கும்ப முனி அத்தன்—அகத்திய முனிவரின் குருவாகிய முருகக்கடவுள், நத்துங் குன்று — விரும்பும் மலை, பட்டார் இடையார் பருவிழி—பட்டுடை அணிந்த கணிகையர்கள் தமது பெரிய கண்களை, கட்டார் இவருங் கதிரையே—கட்டுப்படுத்தாமையின் அவை கள் யாண்டும் உலாவிவருங் கதிரைப்பதியே யாகும், ஐம்பால்—அவர்களது கூந்தலில், கள்தார் இவருங் கதிரையே—தேனையுடைய பூமாலைகள் அசைந்தாடுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் பட்டுடை யணிந்த கணிகையர்கள் நடனமாடும்போது தமது கண்களை அபிநயத்துக் கேற்ப யாண்டுஞ் செல்ல விடுதலின் அவைகள் யாண்டும் உலாவி மீளும். அவர்கள் கூந்தலிலணிந்த பூமாலைகள் நடனத்தின் வேகத்தினால் அசைந்து ஆடும்.

ஐம்பால்—கூந்தல். கள்—தேன். கும்பம்—குடம். குடத்தைப் பிறப்பிடமாக வுடையவராதலின் அகத்தியர் கும்பமுனி யெனப்பட்டார். நத்துதல் — விரும்பு

தல். அத்தன்—குரு. அகத்திய முனிவர் முருகக்கடவுளை யெண்ணிப் பலகாலந் தவஞ்செய்து எல்லாக் கலைகளையும் பெற்று ஞானமடைந்தார் என்னும் வரலாறு ஈற்றடி யிற் கூறப்பட்டது.

முருகப்பெருமானுறைதற் பொருட்டுத் தேவ சிற்பியால் அமைக்கப்பட்ட கதிர்காம நகரத்தில் உருத்திர கணிகையர் வீதியிருந்ததாகத் தட்சண கைலாயமான்மியம் கூறுதலின் அப்பதியிற் கணிகை யர் நடனமிருந்த தென்பதும் அவர்கள் திருக்கோ யிற் பணியாளராயிருந்தார்களென்பதுங் கொள்ளப் படுமென்க.

★

போங்கு மணிநதியும் பூட்கைக் கொடிச்சியருங்
கங்கங் கிடிக்குங் கதிரையே—சங்கப்
பலகையுடை யார்க்குப் பனுவலுரை தேற்றும்
பலகை யுடையார் பதி. (62)

**இதன்பொருள்:—**

சங்கப் பலகை உடையார்க்கு — சங்கப் பல கையை உடைய சங்கப் புலவர்களுக்கு, பனுவல் உரை தேற்றும்—இறையனாரகப் பொருளின் மெய் யுரையைத் தெளிவித்த, பலகை உடையார் பதி— பன்னிரண்டு திருக்கரங்களையுடைய முருகக்கடவு ளது கோயில், பொங்கும் மணிநதி—பொங்கிப் பாய் கின்ற மாணிக்க கங்கை, கங்கு அங்கு இடிக்குங் கதிரையே—விரைந்த செலவினையுடைய அவ்விடங் களிற் கரையை, இடித்தழிக்குங் கதிரைப்பதியே யாகும். பூட்கைக் கொடிச்சியர் — தோளுடையை

யுடைய வேட்டுவ மகளிர், கங்கு அங்கு இடிக்குங் கதிரையே—கருந் தினையைத் தமது சிற்றூரில் இடித்து மாவாக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் மாணிக்க கங்கை சிலவிடங்களில் விரைந்து செல்லும்போது கரையை இடித்துச் செல்லும். தோலுடையணிந்த கொடிச்சியர் கருந் தினையைத் தமதூர்களில் இடித்து மாவாக்குங் கருத்துடையவர்களா யிருப்பர்.

**மணிநதி**—மாணிக்க கங்கை. மாணிக்கத்தை அரித்துக்கொண்டு செல்லுதலின் அப்பெயர் பெற்றது. **பூட்கை**—தோல். வேடர்கள் முற்காலத்திற் றோலுடையை அணிந்தார்கள். **கங்கு**—கருந்தினை. **சங்கப்பலகை**—சங்கப் புலவர்கள் தமது புலமையை உள்ளவாறு தூக்கி யளப்பதற்குச் சிவபெருமானிடம் பெற்றுக்கொண்ட பலகை.

சங்கப் பலகையின் வரலாறு **திருவிளையாடற் புராணத்திற்** கூறப்பட்டுள்ளது. 'சங்கப் புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரும் புலமையிற் சிறந்து திகழ்வதைக் கண்ட ஏனைய புலவர்கள் அவர்கள்மீது அழுக்காறு கொண்டனர். அதனல் நாடோறும் அழிவழக்குஞ் சொற்போருமுண்டாகிப் புலவர்கள் தம்முட் பிணங்குவாராயினர். பின் அவர்கள் சோமசுந்தரப் பெருமானை யடைந்து வணங்கி முறையிட, அப்பெருமான் அத்தெய்வப் பலகையை நல்கினர். அஃது ஒருமுழச் சதுரமும் வெண்ணிறமும் மந்திர வலிமையுமுடையது. மெய்ப் புலவர்கள் அதிலிருக்க நேரின் ஒவ்வொரு முழம் வளர்ந்து இருக்கை தரு

வது. அதனைப் புலவர்கள் சங்க மண்டபத்தில் வைத்து வணங்கி முறைமுறையாக அதிலிருந்து தமிழாராய்ந்தார்கள்' என அப்புராணங் கூறுகின்றது. அஃது இறையனு ரகப்பொருளுரையிற் கன் மாப்பலகை என்று கூறப்படுகின்றது.

பனுவல்—நூல். ஈண்டு இறையனு ரகப்பொருளைக் குறித்தது. இந்நூல் மதுரைச் சோமசுந்தரப் பெருமானுல் அருளப்பட்டது.

ஒருமுறை பாண்டிநாடு பன்னீராண்டு மழை யில்லாதொழிய வளங்குன்றிப் பொலிவு கெட்டது. அப்போது புலவர்கள் வேற்றிடஞ் சென்றனர். பின் நாடுமலிய மழைபொழிந்து செல்வஞ் சிறந் தது. எல்லோரும் மீண்டுவந்து சங்கமிருந்து நூலாராய்ந்தனர். அப்போது பொருளதிகாரம் வல் லார் ஒருவருமில்லாமை கண்டு அக்குறையை அரச னுக்குணர்த்தினர். அரசன் அந்நூல் வல்லாரை யாண்டுந் தேடிக் காணுய்ச் சோமசுந்தரப் பெரு மானிடம் முறையிட்டான். சோமசுந்தரப் பெரு மான் அவர்கள் கவற்சி நீங்குமாறு அறுபது சூத் திரஞ் செய்து தமது பீடத்தின்கீழ் வைத்தருளி னர். கோயிலை அலகிட்டோன் அவ்வேட்டுச் சுவ டியை யெடுத்து அரசனிடஞ் சேர்ப்பிக்க, அரசன் புலவர்களிடங் கொடுத்து அதற்கு நல்லதோர் உரை வகுக்குமாறு பணித்தான். புலவர்கள் தாந்தா மெழுதிய உரையே நன்றென்று கூறி உண்மை யுரையை உணராது கலாய்த்தனர். அரசன் அவர் கள் மாறுபாட்டைத் தீர்த்தருளுமாறு மீண்டும் இறைவனை வேண்டினன். இறைவன் அவ்வூரில்

உப்பூரி குடிகிழார் மகனாக அவதரித்திருந்த மூங்கைப் பிள்ளையாகிய உருத்திரசன்மன் வாயிலாக மெய்யுரை யறியுங்கள் என்று அருளினன். அரசனும் புலவர் களும் அவ்வாறவதரித்திருந்த முருகக் கடவுளாகிய மூங்கைப் பிள்ளையை அழைத்துச் சென்று கன்மாப் பலகையிலிருத்தி உரைகளை முறை முறையே உரைப்பாராயினர். உருத்திரசன்மனர் நக்கீர ருரைக்குப் பதந்தொறுங் கண்ணீருகுத்து மெய்ம் மயிர் சிலிர்த்தும், ஏனையோர் உரைகளுக்கு வாளா விருந்தும் அவர் உரையே மெய்யுரையெனக் காட்டியருளினர். அரசனும் புலவர்களும் மெய்யுரை பெற்றேமென்று பெருமகிழ்வெய்தினர்கள். இது முருகக்கடவுள் சங்கப்புலவர்களுக்கு உரை தெரிவித்த வரலாறுகும்.

அங்கு என்னுஞ் சுட்டு மாணிக்க கங்கையின் இடிந்த கரைப்பகுதிகளையும் வேடர் குறிச்சிகளை யுஞ் சுட்டி நின்றது.

★

மால்விழியார் வாண்முகத்தின் மைந்தர்வலச் செங்கரத்திற்
காலயில் காட்டுங் கதிரையே—சேலறுக்குங்
கண்ணு றிருங்கூந்தற் கண்ணியரோ டாடுமலர்க்
கண்ணு றிரண்டுடையான் காப்பு. (63)

**இதன்பொருள்:—**

கள் நாறும் இருங் கூந்தல்—தேன் மணக்குங் கரிய கூந்தலையுடைய, சேல் அறுக்குங் கண்ணிய ரோடு—கயலினது பிறழ்ச்சியை வெட்டுவதுபோலுங்

கூரிய கண்களையுடைய குறமகளிரோடு, ஆடும் மலர்க்கண் ஆறிரண்டு உடையான் — குரவையாடு கின்ற மலரனைய கண்கள் பன்னிரண்டும் உடைய வனது, காப்பு—நகரம். மால்விழியார் வாண் முகத் தில்—பெரிய கண்களையுடைய மகளிர் தமது ஒளி மிக்க முகங்களில், கால் அயில் காட்டுங் கதிரையே— காலனை ஒத்த கொலைவேலைக் காட்டுங் கதிரைப் பதியே யாகும். மைந்தர் வலச் செங்கரத்தில்— வீரர்கள் வெற்றியுடைய சிவந்த கைகளில், கால் அயில் காட்டுங் கதிரையே—ஒளி காலும் வேலை யேந்திய கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில், மகளிரது ஒளிமிக்க முகங்கள் காலனைப்போலுங் கொலைவேல் இரண்டைக் காட் டுவனவாகும். வீரர்களது சிவந்த கைகள் ஒளிமிக்க வெற்றிவேல்களைக் காட்டுவனவாகும்.

கள்—தேன். இருங்கூந்தல்—கரிய கூந்தல். ஆடு தல்—குரவையாடுதல். வாள்—ஒளி. வலம்—வெற்றி. கால்—காலன். கால்—ஒளிகாலுதல்.

முருகக்கடவுள் குறமகளிரின் கைகளைப்பற்றி நின்று குரவையாடி மகிழ்வரென்பது இதனாற் கூறப்பட்டது. குன்றுதோறுங் குரவையாடுஞ் சிறப்பினைத் திருமுரு காற்றுப்படையில் வருங் குன்றுதோருடலிற் காண்க.—

★

கொம்பாற் கொடிச்சியருங் கோபமத யானைகளுங்
கம்ப மிடிக்குங் கதிரையே—கொம்பெருமை
மாட்டானென் பான்வாள் வயவீராக் கஞ்சிவர
மாட்டானென் பான்வாள் வரை. (64)

**இதன்பொருள்:—**

கொம்பெருமை மாட்டான் என்பான்—நீண்ட கொம்பையுடைய எருமை மாட்டு வாகனன் எனப் படுங் கூற்றுவன், வாள்வய வீரர்க் கஞ்சி—வாளேந் திய வெற்றியை யுடைய வீரவாகு தேவருக்குப் பயந்து, வரமாட்டான் என்பான் வாள் வரை—தொண்டர்களிடத்து வரமாட்டான் என்று அபயந் தரும் முருகக்கடவுளது ஒளிமிக்க மலை, கொடிச் சியர்—குறத்தியர்கள், கொம்பாற் கம்ப மிடிக்குங் கதிரையே—யானைக் கொம்பினாற் செந்தினையை இடிக்குங் கதிரைப்பதியே யாகும். கோப மத யானைகள்—சினங்கொண்ட மத யானைகள், கொம் பாற் கம்பம் இடிக்கும் கதிரையே—தந்தங்களினாற் கட்டுத் தறியை இடித்துச் சரிக்குங் கதிரைப்பதியே யாகும்,

இப்பதியிற் கொடிச்சியர் யானைக்கொம்பாகிய தந்தவுலக்கையாற் செந்தினையை இடிப்பார்கள். சினங்கொண்ட மதயானைகள் தமது கொம்புகளி னாற் கட்டுத் தறியை இடித்துச் சாய்க்கும்.

கொம்பு—யானைத் தந்தம். கொடிச்சியர்—குறத்தி யர். எருமை மாட்டான்—இயமன்.

உமாதேவியாரின் திருவடிச் சிலம்பிலிருந்து ஒன்பது பெண்கள் தோன்றி வீரவாகுதேவர் முத லாய ஒன்பது வீரர்களைப் பெற்றார்கள். இவ்வீரர்

கள் முருகக்கடவுளின் தம்பியரும் படைவீரருமா யினர். சூரசங்காரப் போரில் இவர்கள் அக்கினி முகனுடன் போர் புரிந்தவிடத்தில் எழுவர் மாண் டனர். வீரவாகுதேவர் மாண்ட எழுவருடலையுங் கண்டு வருந்திப் புலம்பினர். பின் ஒருவாறு தேறி ஓர் அம்பை எடுத்து அதில், "கூற்றுவனே! என் தம்பியரைக் கவர்ந்தாயாயின் உடனே விடுக்குதி" என்று எழுதி இயமபுரத்தை அடையுமாறு விடுத் தார். அவ்வம்பு உடனே இயமன் கையிற் கிடைத் தது. இயமன் அதைப் படித்தறிந்து அவர்கள் அங்கில்லாமை கண்டு அஞ்சினன். முருகக்கடவு ளின் தம்பியராகிய இவர்களைத் தேடிக் கொடுக் கேனுயின் நானே வீரவாகுதேவரின் சினத்திற்கு ஆளாக வேண்டுமென வெண்ணினன். உடனே ஞானத்தினல் அவர்கள் கைலையிலிருப்பதை அறிந்து அங்கே சென்று அவர்களையும் அழைத்துக் கொண்டு வீரவாகுதேவரிடம் வந்தான். வந்து தேவரை வணங்கி, "அண்ணலே! உமது தம்பி யர் போர்க்களத்தில் உடலை விட்டதும் கைலை மலையை அடைந்தனர். நீர் துன்ப மிகுதியால் அதனை உணர்ந்திலீர். என்னை வெகுண்டு அம்பை அனுப் பினீர். அடியேன் அவர்களைக் கொல்ல வலியனே? பசிமிகுதியால் அக்கினியை உண்பாருண்டோ?" என்று கூறித் தம்பியரை ஒப்புவித்துச் சென் ருன் என்பது வரலாறு.

இந்த அச்சம் கூற்றுவனுக்கு எப்போதுமிருத் தலின் வீரவாகுதேவருக்கஞ்சி முருகனடியார் மாட்டுச் செல் லானேன்பது இதனுற் கூறப்பட்டது.

கதிர்காமம் ஒளிமிக்க மலையாதலின் வாள்வரை என்ருர்.

" திங்களு மங்கித் தேவுந் தினகர னோடு மூன்று
துங்கநற் சுடர்கள் வீசுஞ் சோதியைத் தன்பாற்கொண்டு
பொங்குபே ரொளியை வீசிப் பாரினிற் சோதி யாகி
எங்கணும் புகழ்ந்து போற்ற விலகுறுங் கதிரை யோங்கல்"

என அத்தல புராணங் கூறுகின்றது. ஒளியுடைய நகரம் எனப் பொருள்படும் எற்பாடி என்னும் ஒரு பெயரும் இந்நகரத்திற்கு வழங்கப்படுகின்றது. தட்சண கைலாச மான்மியத்தில் இம்மலை சோதி காமகிரி என்று கூறப்படுகின்றது. சிவனுக்குத் திருவண்ணா மலை போல முருகனுக்கு இம்மலை சோதிமலை எனப் படுகின்றது.

இனிச் சூரசங்காரம் முடிந்து மீளும்போது தேவசிற்பியாற் செய்யப்பட்ட கோடி சூரியர்களின் ஒளியைக் காலுஞ் சிந்தாமணி யாலயத்தில் முருகக் கடவுள் எழுந்தருளியிருந்தார் எனப்படுதலும், இத் தலத்தின் உண்மண்டபம் சோதிமண்டபம் எனப்படு தலும் இக்கருத்தை உறுதிப்படுத்தும் என்க.

இதனாலே கதிர்காமஞ் சோதிமலை என்பது கூறப்பட்டது.

★

செய்யமட வாரணியுஞ் செல்வத் திருவடியுங்
கைவலமே காட்டுங் கதிரையே—செய்ய
கருப்பூரச் சோதிதலைக் காட்டினார் மாட்டு
விருப்பூரச் சோதிதலை வெற்பு. (65)

**இதன்பொருள்:—**

செய்ய கருப்பூரச் சோதி—சிவந்த கருப்பூர ஒளிப்பிழம்பை, தலைக்காட்டினார் மாட்டு — தலையி லேந்தி ஒளி விளக்கங் காட்டி வழிபடும் மெய்யடி

யார்களிடத்து, விருப்பு ஊர் — விருப்பஞ் சிறந்து செல்லுதலையுடைய, அச்சோதி தலை வெற்பு—அந் தச் சோதிவடிவான முருகக்கடவுளின் தலைமை யான மலை. செய்ய மடவார் அணி — செம்மை சான்ற நன்மனமுடைய மகளிரது அணிகலன்களை, கை வலமே காட்டுங் கதிரையே—அவர்களது ஒழுக் கத்தின் விழுப்பமே தெரியக் காட்டுங் கதிரைப் பதியே யாகும். செல்வத் திருவடி — முருகக்கடவு ளது அருட்செல்வமாகிய திருவடிகள், கைவலமே காட்டுங் கதிரையே—முத்தியின்பத்தையே காட்டுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிலுள்ள மகளிருக்கு அவர்களது நல் லொழுக்கமே சிறந்த அணியாகும். முருகக்கட வுளது திருவடிகள் முத்தியின்பத்தையே காட்டும் பெருஞ் சிறப்பினவாகும்.

கைவலம்—ஒழுக்க மேம்பாடு. கைவலம்—முத்தி.

கதிரைமலையில் வாழும் மகளிர் 'சித்தம் அழகி யார்' ஆதலின் அவர்களைச் செய்யமடவார் என்றார். நல்லொழுக்கமுந் தெய்வ வழிபாடுஞ் சிறந்த இவர் களுக்கு வேறு அணிகலன்கள் வேண்டாமையின் அவ்வொழுக்கத்தை அணிகலனாக்கினார்.

உயிர்களுக்கு முத்திப்பேறருளுஞ் சிவசத்தி யாதலின் முருகப்பெருமானது திருவடிகள் 'கைவ லமே காட்டும்' எனப்பட்டன. ஏனைய கல்விச் செல் வம் பொருட்செல்வம் மக்கட் செல்வம் முதலிய வற்றை நல்குமாயினும், நிலைபேறுகிய முத்தியின்பந் தலைமையுடைமையாலும், ஏனைச் செல்வங்களை நல்

குவதும் அவ்வழியாக ஆட்கொண்டு முத்திப்பேற்றை அருளுதற்கே யாதலாலும் தேற்றேகாரங் கொடுத் துரைத்தார்.

கதிரைப்பதியிற் பல்லாயிரம் பத்தர்கள் ஒளி விட்டெரியுங் கருப்பூரச் சட்டிகளைத் தலையிற் சுமந்து முக்கோண வீதியை வலம்வருங் காட்சி மிகவற்புத மானது. உயிர்களது மும்மலங்களும் ஞானசத்தியாகிய வேலை யேந்திக் குருவடிவாயிருக்கும் முருகப்பெருமானது திருவருள் ஞானத்தாற் றகிக்கப்படுதலை இக்கருப்பூர விளக்கங்கள் காட்டு மென்க. உள்ளன்போடு மெய்யுருகித் தம்மை மறந்து தீச்சட்டியின் அனலையும் பொருட்படுத் தாது சுமந்து செல்லும் அடியவர்களின் பத்திப் பெருக்கின் வழியே, முருகனுக்குந் திருவருள் சுரந்து செல்லுதலின் விருப்பூர் அச்சோதி என்றார்.

முத்தி கொடுக்குந் தலங்கள் பலவற்றுள்ளுங் கதிர்காமம் கலியுகத்திற்குத் தலைமையான பதியாத லின் 'தலை வெற்பு' என்றார். காப்புச் செய்யுளிற் "காசிப்பதிநேர் கதிரை" என்றதுங் காண்க.

மேலே கதிரைமலையைச் சோதிவடிவான மலையென்று கூறி இதனாலே அக்கதிர்காம வேலவருஞ் சோதிவடிவான கடவுள் என்கின்றார்.

★

வஞ்சியர்கள் மார்பகத்து மாமலையின் சார்பகத்துங்
கஞ்சுகச்சீர் மேவுங் கதிரையே—கொஞ்சுமொழி
மஞ்சோதி வள்ளி மணவாள னாகியப
ரஞ்சோதி வாழு மரண். (66)

**இதன்பொருள்:—**

கொஞ்சுமொழி மஞ்சோதி வள்ளி — மழலை மொழியையும் மேகம்போன்ற கூந்தலையும் உடைய

வள்ளியம்மையாரது, மணவாளனாகிய பரஞ்சோதி—நாயகனாகிய மேலான சோதிக்கடவுள், வாழும் அரண்—எழுந்தருளியிருக்கும் கோயில், வஞ்சியார்கள் மார்பகத்து—மென்கொடிபோலும் மகளிரின் மார்பில், கஞ்சுகச் சீர் மேவுங் கதிரையே—கஞ்சுகமெனும் மேற்சட்டையின் அழகு விளங்குங் கதிரைப்பதியே யாகும். மா மலையின் சார்பகத்து—பெரிய மலைச்சாரல்களில், கம் சுகச்சீர் மேவுங் கதிரையே—மேகச் சிறப்பும் அதனாலுளதாகிய நீர்ச்சிறப்பும் பொருந்திய கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் மகளிரின் அழகிய மார்பை அவர்கள் அணிந்துள்ள கஞ்சுகமென்னும் சட்டை மேலும் அழகுசெய்யும். மலைச்சாரல்களை மழை மேகங்களும் நீர்ப்பெருக்கும் அழகுசெய்வன.

வஞ்சி—ஒருவகைக் கொடி. கஞ்சுகம் — சட்டை. கம்—மேகம். சுகம்—நீர். கம் + சுகம் எனப் பிரித்துப் பொருள் கொள்க. கோஞ்சுமொழி—மழலைமொழி. மஞ்சு—மேகம். ஓதி—கூந்தல். பரம்—மேலானது. முருகப் பெருமான் மேலான பரஞ்சோதியென்பது இதனாலுங் கூறப் படுகின்றது.

★

எண்ணுநருக் கின்னருளால் ஞாலத்துக் கோர்முகத்தாற்
கண்ணிருள் சீக்குங் கதிரையே—எண்ணி
யுருவேற்று மையர்க் குளமாசு தீர்த்தின்
னுருவேற்று மைய னுறைவு. (67)

**இதன்பொருள்:—**

எண்ணி உருவேற்றும் ஐயர்க்கு—மந்திரங்களை எண்ணிச் செபித்து உருவேற்றும் முனிவர்களுக்கு

உளமாசு தீர்த்து—மனக்குற்றங்களை அகற்றி, இன்னுரு ஏற்றும் ஐயன் உறைவு—அவர்களை மேலான பிறவிகளில் உயர்த்தி வைக்கும் தலைவனாகிய முருகக்கடவுளின் கோயில், எண்ணுநருக்கு இன்னருளால்—நெஞ்சால் நினைந்து துதிக்குந் தொண்டர்களுக்கு இனிய கருணை புரிதலினால், கண்ணிருள் சீக்குங் கதிரையே — அவர்களது அகக் கண்ணை மறைக்கும் மலவிருளை நீக்குமாறு எழுந்தருளி யிருக்குங் கதிரைப்பதியே யாகும். ஞாலத்துக்கு ஓர் முகத்தால்—உலகத்திற்கு ஒரு திருமுகத்தினால், கண் இருள் சீக்குங் கதிரையே—புறக்கண்ணை மறைக்குங் காரிருளை நீக்குமாறு எழுந்தருளி யிருக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் முருகக்கடவுள் தொண்டர்களின் மலவிருளைத் திருவருளினாலும் உலகத்தின் புறவிருளை ஒரு திருமுகத்தினாலும் நீக்குகின்றார்.

ஞாலம்—பூமி. சீத்தல்—விலக்குதல். உரு—மந்திரவுரு. ஐயர்—முனிவர். மாசு—குற்றம். இன்னுரு—இனிய பிறவி. ஐயன்—தலைவன்.

முருகக்கடவுளது ஆறு திருமுகங்களும் ஆறு தொழில்களைச் செய்வனவாகும். அவற்றுள் ஒன்று உலகத்திருளை நீக்கப் பல கதிர்களை விரிக்கும். இதை "மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப் பல்கதிர் விரிந்தன் றொருமுகம்", எனவரும் திருமுருகாற்றுப்படை அடிகளால் அறிக. கதிரைப்பதி முச்சுடர்களின் ஒளி பெற்ற தலமாதலின் உலகிருளைப் போக்குந் திருமுகத்தின் தொழில் இனிது நிகழுமென்றார்.

முருகப் பெருமான் கதிரைப்பதியி லெழுந்தருளியிருந்து உலகின் அகவிருளையும் புறவிருளையும் போக்குகின்ரு ரென்பது இதனுற் கூறப்பட்டது.

★

ஆற்ருச் சிறுவர்களு மம்மான் றிருமகனுங்
காற்றே ருருட்டுங் கதிரையே—போற்றியே
ஓங்குமா ராயநம வென்ருர்க் குளந்திருத்து
மோங்குமா ராயனம ரூர். (68)

**இதன்பொருள்:—**

போற்றியே ஓங்குமாராய நம என்ருர்க்கு—வழிபாடு செய்து ஓம் குமாராய நம என்று முருக மந்திரங்களைச் செபிக்கும் அடியவர்களுக்கு, உளந் திருத்தும்—அவர்களது மனத்தைத் தீநெறிக்கட் செல்லவிடாது திருத்தி ஆட்கொள்ளும், ஓங்கும் மாராயன் அமர் ஊர்—உயர்ந்த வீட்டின்பமாகிய சிறப்பை உயிர்களுக் கருளும் முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கும் ஊர், ஆற்ருச் சிறுவர்கள்—நடக்கலாற்ருத சிறுவர்கள், காற்றேர் உருட்டுங் கதிரையே—உருள்களையுடைய சிறுதேரை உருட்டி நடைபயிலுங் கதிரைப்பதியே யாகும். அம்மான் றிரு மகன்—அம்மான் மகனுகிய மன்மதன், கால்தேர் உருட்டுங் கதிரையே—தென்றலாகிய தேரை உருட்டிச் செல்லுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் நடைபயிலுஞ் சிறுவர்கள் காற்றேர் உருட்டி விளையாடுவர். மன்மதன் தென்றலாகிய தேரை உருட்டி மக்களை மகிழ்விப்பான்.

கால்—உருள். காற்றேர்—உருள்களையுடைய நடை பயிலுஞ் சிறுதேர். கால்—தென்றல். மாராயம்—சிறப்பு. எல்லாப் பேற்றினுஞ் சிறந்தமையின் வீடு சிறப்பெனப்பட்டது.

மேலே முனிவர்கள் எண்ணி உருவேற்றுதல் கூறி இதனல் அதற்குரிய மந்திரம் 'ஓம் குமாராய நம' என்ருர்.

★

ஓதரக ராவொலியு மொண்டொடியார் கூர்விழியுங்
காதம் பரியுங் கதிரையே—மோதுபவம்
ஏழுமலை யாவா றெமக்கருள்வா னெஞ்ஞான்று
மேழுமலை யாள்வா னிடம். (69)

**இதன்பொருள்:—**

மோதுபவம் ஏழும் அலையாவாறு எமக்கு அருள்வான்—துன்பந்தரும் பிறவிகள் ஏழும் எம்மை வருத்தாதிருக்க அருள் செய்பவனும், எஞ்ஞான்றும் ஏழு மலை ஆள்வான்—எப்பொழுதும் தன் பதிக் கண்ணதாகிய ஏழு மலைகளையுங் காவல் புரிபவனுமாகிய முருகக்கடவுளின், இடம்—கோயில், ஓது அரகரா ஒலி—தொண்டர்கள் ஓதும் அரகரா என்னும் மந்திரவொலி, காதம் பரியுங் கதிரையே—பல காதத்திற்கு அப்பாலுள்ளோரையும் மெய்ம்மறந்து உருகச்செய்யுங் கதிரைப்பதியே யாகும். ஒண்டொடியார் கூர்விழி—ஒளி மிக்க கைவளைகளை யணிந்த மகளிரது கூரிய கண்கள், காது அம்பு அரியுங் கதிரையே—கொலைத் தொழிலையுடைய அம்புகளின் கூர்மையைக் குறைக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் றொண்டர்கள் ஓதும் அரகர வொலி பலகாதத்திற்கு அப்பா லுள்ளோரையும் மெய்ம்மறந்து உருகச் செய்யும். மகளிரது கூரிய விழிகள் அம்புகளின் கூர்மையை வெட்டிக் குறைக்கும்.

அரகர—சிவசிவ எனப்பொருள்படும் ஓர் அடுக்கு மொழி. தோடி—கைவளை. காதம்—காததூரம். நாலு கூப்பிடு கொண்டது ஒரு காதம். மகளிரின் நோக்கு அம்பிலுங் கூரியதென்பார் 'காதம்பரியும்' என்றார். காதுதல்—கொலை செய்தல். அரிதல்—வெட்டுதல். அம் பின் கூர்மையைத் தனித்தாராயின் அதுவே கூரி தாகும். மகளிரின் விழிகளோடு ஒப்பவைத்தாராயின் அவ்வம்பு கூர்மைகுறைந்த பொருளாகின்றது. பவம்—பிறவி. மக்கள் தேவர் விலங்குகள் பறவை கள் ஊர்வன நீர்வாழ்வன தாவரம் எனப் பிறவிகள் ஏழாம். அடியவர்கள் கன்மபலனால் இப்பிறவிகளை எடுத்தாலுந் திருவருளினாற் காக்கப்படுவரென்க.

விநாயகர்மலை, வீரவாகுமலை, தெய்வயானையார் மலை, வள்ளியம்மையார்மலை, அஞ்சுகாமமலை, அகத்தியர்மலை என் னும் ஆறுமலைகளும், அவற்றினிடையேயுள்ள கதிரைமலை யுஞ் சேர இப்பதியின் மலைகள் ஏழாம். அவற்றுள் முரு கப்பெருமான் விரும்பியுறையும் மலை கதிரைமலை.

முருகப்பெருமானின் அடியவர்கள் எழுவகைப் பிறவிக ளிற் சென்றாலும் அல்லற்படாரென்பது இதனாற்கூறப்பட்டது.

★

இட்டிடையார் வாய்மொழியி லின்பமலி யும்விழவிற்
கட்டியங் கூறுங் கதிரையே—கட்டமழி
நீற்றுமலை யாளு நியமமலை நீள்பிறவி
யாற்றுமலை யாள னகம். (70)

**இதன்பொருள்:—**

கட்டம் அழி—துன்பங்கள் பலவற்றையும் போக்கவல்ல, நீற்று மலை ஆளும் மலை யாளன்—திருநீற்றுமலையை ஆட்சிபுரியும் முறைமை பூண்ட குறிஞ்சி வேந்தனும், நியமம் அலை நீள்பிறவி ஆற்றும் அலையாளன்—செய்தற்கரிய நியமங்களிற் பழகியோரையும் அலைக்கவல்ல நீண்ட பிறவிப் பெருக்கத்தைத் தணிக்குஞ் சரவணப்பொய்கையாளனுமாகிய முருகக்கடவுளின், அகம்—கோயில். இட்டிடையார் வாய்மொழியில்—சிற்றிடை மகளிரின் மழலைமொழியில், கட்டி அங்கு ஊறுங் கதிரையே—கரும்புக் கட்டியின் சுவை ஊற்றெடுக்குங் கதிரைப் பதியே யாகும். இன்பம் மலியும் விழவில்—மகிழ்ச்சி மிகுந்த திருவிழாக் காலங்களில், கட்டியங் கூறுங் கதிரையே—முருகனது புகழ்மாலைகள் விதந்து கூறப்படுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் சிற்றிடைமகளிரின் முற்றா மழலையிற், கரும்புக்கட்டின் சுவை ஊற்றெடுக்கின்றது. மக்களை மகிழ்விக்குந் திருவிழாக் காலங்களில் முருகனது பலவகைப்பட்ட புகழுரைகளுங் கூறித் துதிக்கப்படுகின்றது.

இட்டிடை—சிற்றிடை. விழவு—திருவிழா. கட்டி—கரும்புக்கட்டி. கட்டியங்கூறல்—புகழ்கூறுதல். கட்டம்—துன்பம். நீற்றுமலை—திருநீற்றுமலை. இப்பதியிற் கதி

ரைமலைக் கருகே விபூதிமலை ஒன்று உள்ளது. அதிலிருந்து எடுக்கப்படுந் திருநீறு தெய்வீகமானது. அந்நீறு அடியவர்களின் பலவகைப் பிணிகளையும் போக்க வல்லது. மெய்யன்போடு அணியுந் தொண்டர்கள் பலவகைச் சித்திகளையும் பெறுகின்றனர். இத்தலத்தில் விளையும் விபூதி பன்னெடுங்காலமாக யாத்திரை செய்வோர்களாற் கொண்டுசெல்லப்பட்டுத் தமிழ்நாடெங்கும் மருந்துபோ லணியப்படுகின்றது. சைவர்கள் இதை அமுதசஞ்சீவி யென்றே போற்றுகின்றனர். இம்மலையை ஆட்சிபுரிதலாவது, இத் திருநீற்றின் புகழ்பெருக அதனை மெய்யன்போடு அணியுந் தோண்டர்களைப் பாதுகாத்தலாகும். தொண்டர்களைக் காப்பது மலையைக் காப்பதெனப்பட்டது. மலைநிலங்களுக்கெல்லாம் முருகன் தலைவனாதலின் மலையாளன் எனப்பட்டான்.

**நியமம்** — துறவிகளாற் கைக்கொள்ளப்படும் எண்வகை யோகவுறுப்புக்களுள் ஒன்று. அது, தவஞ்செய்தலும், உடலையுமுள்ளத்தையுந் தூய்மையாக்கலும், தத்துவ நூலாராய்தலும், பெற்றது கொண்டுமகிழ்தலும், தெய்வவழிபாடும் என ஐந்தாகக் கூறப்படும்.

இந்நியமங்களிற் பழகிய துறவிகளும் முற்பிறவிகளிற் செய்த கன்மமலத்தொடர்பாற் பிறவிவாய்ப்படுங்காலத்துத் தாம் அரிதிற் பயின்ற அந்நியமங்களை விட்டுநீங்குதலின் நியமம் அலை நீள் பிறவி என்றார்.

பிறவிப் பெருக்கத்தால் இவ்வாறலையும் பக்குவமெய்தினலும் 'மோது பவம் ஏழும் அலையாவா றருள்வான்' அவனாதலின், 'ஆற்றும் அலையாளன்' என்றார்.

இவ்வெண்பாவில் நீற்றுமலை ஆளும் மலையாளன் நீள்பிறவி ஆற்றும் அலையாளன் என நான்காமடியிலும் ஒரு சிலேடைச் சொல் இருபொருள் தழுவிவருவது நோக்குக.

★

**ஆண்டுமலை யேறுநரு மாபரணம் பூணுநருங்**
**காண்டமது தேந்துங் கதிரையே—ஈண்டிவரக்**
**கோக்குவித்துக் காக்கக் குடைபிடித்த கோன்மருக**
**ஞக்குவித்துக் காப்பா னரண். (71)**

**இதன்பொருள்:—**

ஈண்டிவரக் கோ குவித்து—நெருங்கி வந்து சேருமாறு பசுநிரையைக் கூட்டி, காக்கக் குடைபிடித்த கோன்மருகன்—அவற்றை இந்திரன் ஏவிய பெரு மழையினின்றுங் காத்தற் பொருட்டுக் கோவர்த்தனமாகிய குடையைப் பிடித்த இடையனாகிய கண்ணபிரானுக்கு மருகனும், ஆக்குவித்துக் காப்பான்—உலகங்களெல்லாவற்றையும் படைத்துக் காக்கின்றவனும் ஆகிய முருகக்கடவுளின், அரண்—காவற்பதி. ஆண்டு மலை ஏறுநர்—அத்தலத்திற் கதிரைமலையில் ஏறுந் தொண்டர் கூட்டங்கள், காண்டமது ஏந்துங் கதிரையே—ஊன்றுகோலைக் கையிலூன்றிச் செல்லுங் கதிரைப்பதியே யாகும். ஆபரணம் பூணுநர்—அணிகலன்களை அணியும் மகளிர்; காண்டமது ஏந்துங் கதிரையே—அணிகலப் பேழைகளைக் கையிலேந்திக் கொள்ளுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் மலையேறுந் தொண்டர்கள் ஊன்று கோலைக் கையிலூன்றிச் செல்வர். ஆபரணம் பூணும்

மகளிர் ஆபரணப்பேழைகளுடன் நிற்பது அழகிய காட்சியதாகும்.

மலை—கதிரைமலை. காண்டம்—ஊன்றுகோல். காண்டம்—ஆபரணப்பேழை. ஈண்டுதல்—நெருங்குதல். கோ—பசு. கோன்— இடையன்.

மலைப்பாதை செப்பனிடப்படாத அக்காலத்தில் மலையேறுவோர் ஊன்றுகோல் கொண்டு சென்றரா தலின் 'காண்டமதேந்தும்' என்றார்.

ஆயர்கள் ஆண்டு தோறும் இந்திரனுக்கு விழா வெடுப்பது வழக்கம். அவ்வழக்கப்படி நிகழ்ந்த தொரு இந்திர விழாவைக் கண்ணபிரான் தடுத்து, "இவ்விடத்தில் நமது ஆனிரைகளுக்கு வேண்டிய உணவைக் கோவர்த்தன மலையே தருகின்றது. ஆதலால் அம்மலைக்கே விழாச் செய்யுங்கள்" என் றார். அவ்வாறே விழா நிகழ்ந்தது. இந்திரன் கோபங்கொண்டு ஆயர்பாடியை அழிக்குமாறு கன் மழையைப் பொழிவித்தான். கண்ணபிரான் அம் மழையைக் கோவர்த்தனமலையைக் குடையாகப் பிடித்துத் தடுத்தார். ஆயர்களும் ஆனிரைகளும் அக்குடையின் கீழே மழை பொழிந்த ஏழு நாள்களை யுங் கழித்தார்கள். இந்திரன் கண்ணனின் பெருந் தகைமையைக் கண்டு அஞ்சிப் பணிந்து நீங்கினன். இது கண்ணபிரான் பசுநிரைகளைக் குடைபிடித்துக் காத்த வரலாறாகும். கண்ணபிரான் திருமாலின் அவதாரமா தலின் முருகப்பெருமான் அவருக்கு மருகராயினர்.

★

செய்யு மணத்தினிலுஞ் சேயிழையார் கூடலினுங்
கையாழி கூட்டுங் கதிரையே—மெய்யாகக்
காலையிலா லத்திகொளுங் கன்னியர்கள் வாழுமொளி
காலயிலா லத்திகொள்வான் காப்பு. (72)

**இதன்பொருள்:—**

மெய் ஆக—உண்மைப்பொருள் புலனாகுமாறு, காலையில் ஆலத்தி கொளும் கன்னியர்கள் வாழும்—காலையில் ஆலத்தியெடுக்கும் கன்னிப்பெண்கள் வாழுகின்ற, ஒளி கால் அயிலால் அத்தி கொள்வான் காப்பு—ஒளிவீசும் வேலினால் யானைமுகத்தினனாகிய தாரகனைக் கொன்ற முருகக்கடவுளின் நகரம், செய்யும் மணத்தினில்—சான்றோர்களாற் செய்யப்படுந் திருமண வைபவத்தில், கை ஆழி கூட்டுங் கதிரையே—மணமக்களின் கைவிரல்களிற் கணையாழி சேர்க்கப்படுங் கதிரைப்பதியே யாகும். சேயிழையார்—மகளிர், கூடலில் கையாழி கூட்டுங் கதிரையே—கூடலிழைக்கும்போது கைவிரலினால் வட்டத்தைச் சேர்க்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில், திருமண வைபவத்தில் மணமக்களின் கைவிரல்களிற் கணையாழி யணியப்படும். மகளிர் தந்தலைவர்களின் வரவை யறிதற்குக் கூடலிழைத்துப் பார்ப்பர்.

கூடல்—கூடலிழைத்தல். தலைவர்கள் பிரிந்துறையுங் காலத்தில் அவர்வரவு கைகூடுமாற்றினை அறிதற்கு மகளிர் வெண்மணலில் வட்டஞ்செய்து பார்க்கும் வழக்கம் பண்டைநாளிலிருந்தது. அவர்கள் ஓரிடத்திலிருந்து மணலை அழகுறப் பரவிக் கண்

களை மூடிக்கொண்டு சுட்டுவிரலினல் வட்டங்களைத் தொடர்ச்சியாகச் சங்கிலிக்கோவைபோல வரை வார்கள். அக்கோவைத் தொடர்ச்சியையும் வளை வாகவே செய்துகொண்டு வருவார்கள் அக்கோவை யின் முதல் வட்டத்தோடு கடைவட்டம் பொருந் துமாயின் தங்கருமங் கைகூடி வருமென்பது அவர் கள் குறிப்பாகும். ஆழி—வட்டம். ஆழிகூட்டுதல்—முதல் வட்டத்தையும் கடைவட்டத்தையும் பொருத்துதல்.

இப்பதியிற் பூசை நிகழும்போது ஆலத்திப் பெண்கள் நாடோறும் வந்து ஆலத்தியெடுக்கும் வழக்கமொன்றுண்டு. இதனை யெடுக்கும் பெண்கள் கோயிலுக்குரிய கன்னியர்கள். இவர்கள் காவியு டையுடன் வந்து நின்று அபிநயங்காட்டி ஆலத்தி யெடுத்துச் செல்வர். இவர்களின் அபிநயமும் ஆலத் தியும் சில உண்மைப்பொருள்களை விளக்குவன வாதலின் மெய்யாக என்றார்.

★

**ஏந்துசிலை வீரர்களு மின்றமிழ்ப்பா வாணர்களுங்**
**காந்தம் பராவுங் கதிரையே—போந்த**
**கரும்பனைக்கைக் குஞ்சரத்தான் கண்ணுதித்தா னூருங்**
**கரும்பனைக்கைக் குஞ்சரத்தான் கண். (73)**

## இதன்பொருள்:—

போந்த கரும்பனைக் கைக்குஞ் சரத்தான்—மலரம்புகளைத் தொடுக்குமாறு சென்ற கருப்புவில் லியாகிய மன்மதனைச் சினந்த கண்ணம்மையுடைய சிவபிரானின், கண் உதித்தான்—அந்த நெற்றி விழியிலே உதித்தவனும், ஊருங் கரும் பனைக்

கைக்குஞ்சரத்தான் — ஊர்தியாகிய கரிய பனை போன்ற துதிக்கையையுடைய யானையி லுலாவருவோனுமாகிய முருகக்கடவுளின், கண்—கண்போலுஞ் சிறந்த தலம், ஏந்துசிலை வீரர்கள்—தாங்கிய வில்லையுடைய வீரர்கள், காந்து அம்பு அராவுங் கதிரையே—உயிர்களைக் கவரும் அம்புகளைத் தீட்டுங் கதிரைப்பதியே யாகும் இன்றமிழ்ப் பாவாணர்கள்—இனிய தமிழ்ப்பாடல்களைப்பாடும் புலவர்கள், காந்தம் பராவுங் கதிரையே—காந்தம் என்னும் குணவலங்காரத்தைப் புகழ்ந்து பாராட்டுங் கதிரைப் பதியே யாகும்.

இப்பதியில் வில்லேந்திய வீரர்கள் அம்புகளைத் தீட்டிக் கூரியதாக்குவர். புலவர்கள் செய்யுளில் வருங் காந்தமென்னுங் குணவலங்காரத்தைப் பாராட்டிக் கூறுவர்.

**சிலை** — வில்லு. **காந்தம்**—குணவலங்காரத்திலொன்று. **காந்துதல்**—உயிர்கவருதல். **அராவுதல்**—தீட்டுதல். **கருபன்**—மன்மதன். **கைத்தல்**—கோபித்தல். **சரம்**—அம்பு. மன்மதன் மலரம்பை விடுத்ததற்கு எதிராகச் சிவபிரான் கண்ணம்பைச் செலுத்தி எரித்தார். அவ்வாறெரித்தலைச் செய்த அக்கண்ணிலேயே முருகப்பெருமான் தோற்றியருளினர் என்றவாறு.

புலவன் தான் எடுத்துக்கொண்ட பொருளை யாவரும் மகிழத்தக்க நடையிற் சிறப்பாகவும் அழகாகவும் கூறுவது காந்தமெனப்படுதலிற் **காந்தம் பராவும்** என்றார். **பராவுதல்** — பாராட்டுதல்.

அயிராவசு என்னும் பெயரையுடைய கந்தருவன் ஒருவன் குருமொழி கடந்தமையாற் சாபமேற்று

யானையாகிக் கதிரைமலையை அடைந்து வழிபட்டு அப்பெருமானுக்கு ஊர்தியாகித் தொண்டுசெய்தா னென்றும், அச்சாபம் நீங்கியபோது பெருமானே! அடியேன் சுமந்தவாறு தேவரீரை விழாக்காலங்க ளிற் சுமக்க ஒரு காட்டுயானை வரவேண்டுமென வரம் பெற்றனென்றும் அவ்வாறே காட்டு யானை ஒன்று வந்து விழாக்காலங்களிற் சுமந்ததென்றும் ஈழமண்டலசதகம் கூறும். இவ்வழக்கமே இன்றும் நிகழ்வதாகக் கூறப்படுகின்றது.

★

கொண்டநிய மத்தினருங் கூறுமகா ரின்மொழியுங்
கண்ட மறுக்குங் கதிரையே—தொண்டர்க்
கறமறைந்த சேய னருளிலா வண்டர்க்
கறமறைந்த சேய னகம். (74)

**இதன்பொருள்:—**

தொண்டர்க்கு அறம் அறைந்த சேயன்—அடியவர்களுக்கு அறநெறியைச் சொல்லிய செவ்வேளும், அருளிலா அண்டர்க்கு அற மறைந்த சேயன்—இரக்கமில்லாத நூற்றெட்டு அண்டங்களிலுமுள்ள அரக்கர்களுக்கு முற்றாக மறைந்து எட்டாத தூரத்திலிருப்பவனும் ஆகியமுருகக்கடவுளின், அகம்—வீடு, கொண்ட நியமத்தினர்—கழுத்தறுப்பதாக நியமம் பூண்ட தொண்டர்கள், கண்டம் அறுக்குங் கதிரையே—தமது கழுத்தை வெட்டி நியமம் முடிக்குங் கதிரைப்பதியே யாகும். கூறுமகாரின்மொழி — பேசப்பயிலுஞ் சிறுவர்களின் இன்சொற்கள்,

கண்டம் மறுக்குங் கதிரையே—சருக்கரையின் இனிமையை ஔவாவென மறுக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் கழுத்தறுப்பதாக நியமம் பூண்ட தொண்டர்கள் கழுத்தையறுத்து அங்கியமத்தை முடிப்பர். இளஞ் சிறுவர்களின் மழலைமொழி கண்ட சருக்கரையின் இனிமையை மறுத்து ஔவ்வாதென நீக்கும்.

நியமம்—நிச்சயம். மகார்—சிறுவர். கண்டம் — கழுத்து. கண்டம்—கண்டசருக்கரை. சேயன்—சிவந்தநிறத்தை யுடையவன். அண்டம்—பல உலகங்கள் சேர்ந்த ஒரு கோவை.

சூரனது அரசின்கீழ் நூற்றெட்டு அண்டங்களிருந்தன. அவற்றிலிருந்த அரக்கர்கள் இரக்கமற்ற கன்னெஞ்சினராய் மனிதவுடலை விரும்பிவுண்பவராய்த் தேவர்களைச் சிறையிட்டும் ஏவல்கொண்டும் உலகெங்கும் நடுங்க இடுக்கண் விளைத்தாராதலின் முருகக்கடவுள் அவர்களுக்கு முற்றாக மறைந்த தூரத்துப் பொருளாயினார். சேயன்—சேய்மையிலிருப்பவன். சேய்மை—தூரம்.

முருகப்பெருமான் பக்குவம் நிரம்பி முதிர்ந்த உயிர்களுக்குத் தாமே எழுந்தருளியும், ஏனையோருக்குக் குருமுகமாகவும் ஆகமவாயிலாகவும் அறமுதல் நாற்பொருளையும் உணர்த்துதலின் அறம் அறைந்தசேயன் என்றார்.

★

ஐயர்புகழ் நாணு மரிவையரும் போதகமுங்
கையமுகங் காட்டுங் கதிரையே—மெய்யன்பர்
செந்தீக் குளமடைந்து தெய்வந் தெரிக்குமிறை
செந்தீக் குளமடைந்தான் சேர்வு. (75)

**இதன்பொருள் :—**

மெய்யன்பர் செந்தீக்குளமடைந்து — உண்மைத் தொண்டர்கள் சிவந்த நெருப்புக் குளத்தில் நடந்து, தெய்வந் தெரிக்கும்—தெய்வத்திருவருளை எல்லோருக்குந் தெரியக் காட்டுகின்ற, இறை செந்தீக் குளமடைந்தான் சேர்வு—சிவபிரானது சிவந்த நெருப்புக் கண்ணிற் பிறந்த முருகக்கடவுளின் மலை, ஐயர் புகழ் நாணும் அரிவையர்—தலைவரது புகழுரைகளுக்கு நாணமடையுந் தலைவியர், கையமுகங் காட்டுங் கதிரையே—கைகளாற் புதைக்கப்பட்ட முகத்தை அத்தலைவர் வருந்துமாறு காட்டி நிற்குங் கதிரைப்பதியே யாகும். போதகம்—யானைகள், கையமுகங் காட்டுங் கதிரையே—துதிக்கையையுடைய முகங்களைக் காட்டுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் றலைவரின் புகழுரைகளுக்கு நாணிய தலைவியர் கைகளால் முகத்தை மூடி நாணிநிற்பர். யானைகள் ஏனைய விலங்குகளுக்கில்லாத கைகளை முகத்திலுடையனவாயிருக்கும்.

ஐயர் — தலைவர். அரிவை — அரிவைப்பருவத்து மகளிர். போதகம்—யானை. செந்தீ—நெருப்பு. தெரித்தல் —தெளிவித்தல். இறை—சிவபெருமான். குளம்— நெற்றிக்கண்.

**கையமுகங் காட்டுதல்**—நாணிக்கண் புதைக்கும் போது கைகளால் மூடப்பட்ட முகத்தினராதல்.

மெய்யன்பர் தெய்வந் தெரிக்கின்றதாகிய குள மடைந்தானது சேர்வு எனக் கூட்டியுரைக்க.

கதிரைமலையிற் சில மெய்யன்பர்கள் தீக்குளித் தலைப் பெருந்திரளான தொண்டர்கள் முன்னே அதி யற்புதமாகச் செய்து காட்டியுள்ளார்கள். தீக்குளித் தற்கு அமைக்கப்படும் நெருப்புக் காட்டுவிறகை எரித்த தழற்பிழம்பாயிருக்கும். பதினைந்துமுழ நீள அகலத்திற்கு இத்தழற்பிழம்பு பரவியிருக்கும். இக் குழியின் ஆழம் இரண்டு மூன்று முழமுடையது. இத்தீக்குளத்தில் வன்றொண்டராகிய அடியார்கள் சந்தநத்தோடு அரகர மந்திரத்தைச் சொல்லிக் குதித்து நடந்து கரைசேர்வர். இது முருகனது திருவருட் பெருமையைத் தெளியக் காட்டுதலின் தெய்வந்தெரிக்கும் என்றார்.

முருகப்பெருமான் நெற்றிக்கண்ணிற் பிறந்த வரலாறு முன்னே கூறப்பட்டது.

★

அஞ்சமலி வாவியிலு மன்பர்துதி பாணியிலுங்
கஞ்ச மலியுங் கதிரையே—நஞ்சத்தாற்
கண்டங் கறுப்பாற் குரைத்தான் கடியவினை
கண்டங் கறுப்பான் கடம். (76)

**இதன்பொருள்:—**

நஞ்சத்தாற் கண்டங் கறுப்பாற் குரைத்தான் —நஞ்சுண்டமையாற் கழுத்துக் கறுப்பாகிய சிவ பெருமானுக்குப் பிரணவப் பொருளைச் சொல்லி யவனும், கடிய வினை கண்டு அங்கு அறுப்பான்

—கொடிய தீவினையால் வருந்துதல் கண்டவிடத்து அதனைத் தணித்துக் குறைப்பவனும் ஆகிய முருகக்கடவுளின், கடம்—மலை, அஞ்சமலி வாவியில்—அன்னங்கள் மிகுந்துவாழும் பொய்கைகளில், கஞ்சம் மலியுங் கதிரையே—தாமரையும் மிகுதியாயிருக்குங் கதிரைப்பதியே யாகும். அன்பர் துதி பாணியில்—தொண்டர்கள் துதிக்கும் இசைப்பாட்டுக்களில் கஞ்சம் மலியுங் கதிரையே—தாளச் சிறப்பு மிகுந்து நிற்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் அன்னங்கள் மிகுந்திருக்கும் பொய்கைகளில் அவற்றால் விரும்பப்படுந் தாமரைகளும் மிகுந்திருக்கும். தொண்டர்கள் மெய்ம்மறந்து பாடும் இசைப்பாட்டுக்கள் கேட்போரைப் பரவசப்படுத்துந் தாளச் சிறப்புடையனவாயிருக்கும்.

அஞ்சம்—அன்னம். பாணி—இசைப்பாட்டு. திருப்புசழ் பேரின்பக்காதல் முதலியனவும் முருகன் கீர்த்தனங்களும் இப்பதியில் மிக அழகாகத் தாளத்துடன் ஓதப்படுவன.

★

அக்கோக் குரவையரு மாறியங்கு மன்பர்களுங்
கைக்கோப்புக் கொள்ளுங் கதிரையே—இக்குவளை
வேளைக் கடைக்கணிப்பால் வென்றவன்சே யஞ்சியழும்
வேளைக் கடைக்கணிப்பான் வெற்பு. (77)

**இதன்பொருள்:—**

இக்கு வளை வேளை—கருப்புவில்லை வளைத்து நின்ற மன்மதனை, கடைக்கணிப்பால் வென்றவன்

சேய்—கடைக்கண் பார்வையால் அழித்த சிவனுக்கு மைந்தனும், அஞ்சி அழும் வேளை கடைக்கணிப்பான்—தொண்டர்கள் துன்பமிகுதியால் அஞ்சியழும்பொழுது கருணை செய்பவனு மாகிய முருகக் கடவுளின், வெற்பு—மலை, அக் கோவும் குரவையரும்—அத்தலைவனுகிய முருகக்கடவுளும் அவரோடு மெய்தீண்டியாடுஞ் சிறப்பமைந்த குரவை மகளிரும், கைக் கோப்புக் கொள்ளுங் கதிரையே—கைகோத்தாடுங் கதிரைப்பதியே யாகும். ஆறு இயங்கும் அன்பர்கள்—காட்டு வழியே யாத்திரை செய்யுந் தொண்டர்கள், கைக்கோப்புக் கொள்ளுங் கதிரையே—வழியுணவாகிய பொதிசோற்றைக் கொண்டுசெல்லுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் முருகக்கடவுளும் அவரோடு குரவையாடுஞ் சிறப்பமைந்த நன்மகளிரும் அழகிய சாரல்களிற் கைகளைக் கோத்துக் குரவையாடி மகிழ்வர். யாத்திரை செய்யுந் தொண்டர்கள் வழியுணவாகிய பொதிசோற்றைக் கைகளிற் கோத்துக் கொண்டு செல்வர்.

கோ — தலைவன். அகரச்சுட்டு, அன்பர்கள் அஞ்சியழும்போது கடைக்கணிப்பவனுகிய அக்கோ என முருகக்கடவுளைச் சுட்டிநின்றது. ஆறு—வழி. கைக்கோப்பு — வழியுணவாகிய பொதிசோறு. கையிற் கோத்துக் கொண்டுபோதல் காரணமாக இப்பெயர் வழங்கப்பட்டது. ‘தோட்கோப்பு’ என நாலடியாரில் வருவதுங் காண்க. இக்கு — கரும்பு வேள் — மன்மதன். கடைக்கணிப்பு — கடைக்கண்ணுற் பார்ப்பது. சிவபெருமான் கடைக்கண்ணேக்

கால் மன்மதனை எரித்தார். கடைக்கணித்தல்—கருணைசெய்தல். அஃது அஞ்சலென்றருளிக் காப்பது.

குரவைக்கூத்து, எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனுஞ் சேர்ந்து கைகோத்தாடுவது இக்கூத்துக்குரிய முறைப்படி இம்மங்கையர் தம்மை அழகுபடுத்திக் கொள்வர். ஆடும்போது காமமும் வென்றியும் பொருளாகக் கொண்ட இன்னிசைகளைப்பாடுவர். இவர்களோடு முருகப் பெருமானுஞ் சேர்ந்து குரவையாடுவர் என்பது இதனாற் கூறப்பட்டது. முருகக்கடவுள் தன்னைச் சேவிக்கும் மகளிர் நின்று சேவிக்கப், பாடும் மகளிர் இன்னிசையாற்பாட, மெய்தீண்டி விளையாடுதற்குரிய சிறப்பமைந்த நன்மகளிரோடு குன்றுகள் தோறுங் குரவையாடி மகிழ்வரெனத் திருமுருகாற்றுப்படையிற் கூறப்படுதல் காண்க.

★

**மாமயிலன் னார்குழலில் வண்டலைகைத் தண்டிலிசை**
**காமரம் பாடுங் கதிரையே—மாமயல்செய்**
**தண்ணவா வென்று ரகத்தரொரு மாவாக**
**அண்ணவா வென்று ரகம்.** (78)

**இதன்பொருள்:—**

மா மயல்செய்து அண்ணு அவா—பெரிய மயக்கத்தைச் செய்து அறிவுகுலையுமாறு நெருங்கி வருகின்ற ஆசையை, வென்றார் அகத்தர்—அறுத்த துறவிகளது உள்ளத் துறைபவரும், ஒரு மாவாக அண்ண வா என்றார்—ஒரு காட்டு யானையாக

அண்ணலே வரவேண்டும் என்று விநாயகப்பெரு மானை வேண்டியவரும் ஆகிய முருகக்கடவுளின், அகம்—கோயில், மா மயிலன்னார் குழலில்—பெருமை மிக்க மயிலன்ன மடந்தையரது கூந்தலில், காமரம் இசைபாடுங் கதிரையே—வண்டுகள் இன்னிசை பாடுகின்ற கதிரைப்பதியே யாகும். வண்டு அலை கைத்தண்டில்—மகளிரது வளையல்கள் ஒலிக்குங் கையிலுள்ள யாழினிடத்து, இசை காமரம் பாடுங் கதிரையே—இன்னிசையுடைய இசைப்பாட்டுக்களை அவர்கள் பாடுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் மகளிரின் கூந்தலில் வண்டுகள் இசை பாடும். வளையல்களை யணிந்த மகளிர் யாழினிடமாக இசைப்பாட்டுக்களைப் பாடுவர்.

76 ஆம் வெண்பாவில் தொண்டர்கள் பாடும் பத்திச் சுவைகனிந்த பாடல்களையுந் தாளச்சிறப்பையுங் கூறி, 77 ஆம் வெண்பாவிற் குறிஞ்சிநிலத்துக் குறமகளிரின் குரவைக் கூத்துக் கூறி, இவ் வெண்பாவில் நகர்ப்புறத்து வாழுஞ் செல்வமகளிரின் இசைப்பாட்டுக் கூறுகின்றார்.

பிறவிக்கு மூல காரணமான அவா பெருந்தவத்தினரையும் இடையில் வஞ்சிப்பதாகலின் "மாமயல் செய்" என்றார். அவா வறுக்கலுற்றார் உள்ளத்திலே முருகப்பெருமான் உறைவ ரென்பது கூறினார். அகம்—உள்ளம். விநாயகப்பெருமான் யானையாக வந்த வரலாறு 27 ஆம் வெண்பாவுரையிற் கூறப்பட்டது.

★

வாரிரும்ப லாவின் மகோததியில் வந்துபயன்
காரினம்வீழ்ந் துண்ணுங் கதிரையே—நேரம்பு
சம்பந்த னுக்குகந்த சந்தமுலை யாள்பயந்த
சம்பந்த னுக்குகந்த சார்பு. (79)

இதன்பொருள்:—

நேர் அம்புசம் பந்து அனுக்கு கந்த சந்த முலையாள்—தனக்கு நிகரானதெனப்படுந் தாமரை மொட்டுகளையும் பந்தையும் வருத்துகின்ற மணங் கமழுஞ் சந்தனமணிந்த முலையையுடைய உமையம் மையார், பயந்த—பெற்றருளிய, சம்பந்தனுக்கு உகந்த சார்பு—திருஞானசம்பந்தப் பெருமானாக அவதரித்த குமரக்கடவுளுக்கு விருப்பான இடம், வார் இரும்பாலாவில்—நீண்ட பெரிய பலாமரத்தில், கார் இனம் வந்து வீழ்ந்து பயன் உண்ணுங் கதி ரையே—கருங்குரங்குகள் வந்து தாவிக் குதித்துப் பழங்களை உண்ணுங் கதிரைப்பதியே யாகும்,மகோ ததியில் கார் இனம் வந்து வீழ்ந்து—பெரிய கட லில் மேகங்கள் வந்து வீழ்ந்து, பயன் உண்ணுங் கதிரையே—நன்னீராகிய பயனை உண்ணுங் கதிரைப் பதியே யாகும்.

இப்பதியிற் கரிய பலாமரங்களிற் கருங்குரங்கு கள் கூட்டமாகக் குதித்து வீழ்ந்து பலாப்பழங்களை உண்ணும். கடலில் மேகங்கள் கூட்டங் கூட்ட மாக வீழ்ந்து நீரையுண்டு செல்லும்.

வார்—நீண்ட. இருமை — பெருமை. மகோததி— கடல். மகா உததி மகோததி எனப்புணர்ந்தது. காரினம் — கருங்குரங்கு. கார்—மேகம். நேர்—நிகர்.

அனுக்குதல்—வருத்துதல். நிகராகமாட்டாது தோற்றமைக்கு இரண்டும் வருந்தின. கந்தம்—மணம். சந்தம்—சந்தனம்.

குமரக்கடவுளது அவதாரமாக ஞானசம்பந்தப் பெருமான் பிறந்தாரெனஉபசாரமாகக் கூறப்படுதலினாற் குமரனை ஞானசம்பந்தன் என்றார். ஞானசம்பந்தர் மூன்றும் வயதிலே தோணியப்பரைப் பார்த்து அம்மையே அப்பா என்று அழுததும், அவர்கள் பொற்கிண்ணத்திற் பாலமுது கொடுத்ததும், பொற்றாளம் முத்துப்பந்தர் முத்துப்பல்லக்கு முதலியன கொடுத்ததும் பிறவுமாகிய செயல்களெல்லாம் அவர் அம்மையப்பரது குழந்தை என்பதையே காட்டுமென்க.

★

பேசுபிறப் பஞ்சுநரும் பீதகவி னையரும்பொற்
காசுபறி யென்னுங் கதிரையே—நேசமுடன்
பாவடியிற் சிந்தினற் பாடவருள் வோன்பகையைத்
தாவடியிற் சிந்தினன் சார்பு. (80)

**இதன்பொருள்:—**

நேசமுடன்—உள்ளன்புடனே, பா அடியில்—நால்வகைப் பா வடிகளாலும், சிந்தினல்—சிந்து முதலிய இசைப் பாட்டுக்களாலும், பாட அருள்வோன்—தன்னைப்பாடுமாறு மெய்ப்புலவர்களுக்கு அருள் செய்வோனும், பகையைத் தாவடியிற் சிந்தினன்—பகைவர்களாகிய அசுரர்களைப் போரில் அழித்தவனுமாகிய முருகக்கடவுளின், சார்பு—திருப்பதி. பேசு பிறப்பு அஞ்சுநர்—நன்றென்றுந்

தீதென்றும் பேசப்படும் பிறவியைத் தீதென்றுணர்ந்து அஞ்சுந் தொண்டர்கள், காசு பறி என்னுங் கதிரையே—எமது குற்றங்களை யெல்லாம் வேரோடு பறித்தருளுவீர் என்று வழிபடுங் கதிரைப்பதியே யாகும். பீதக வினையர்—பொற்கொல்லர்கள், பொற் காசு பறி என்னுங் கதிரையே—பொன்னாகிய காசைப் பறி என்று கூறுங் கதிரைப் பதியே யாகும்.

இப்பதியிற் பிறப்பஞ்சுந் தொண்டர்கள் காமம் வெகுளி மயக்கமாகிய முக்குற்றங்களையும் வேரோடு பறித்தருளுமாறு முருகப்பெருமானை வழிபட்டு நிற்பர். பொற்கொல்லர்கள் பொன்னைப் பறி என்று கூறுவர்.

பீதகம்—பொன். வினையர்—தொழிலாளர். காசு—குற்றம். போற்காசு—பொன் நாணயம். தாவடி—போர்.

முக்குற்றங்களும் பிறவிக்கு வித்தாகலின் அவற்றை வேரொடு பறித்தல் வேண்டுமென்றார்.

"காமம் வெகுளிமயக்க மிவைமூன்றன்
நாமங் கெடக்கெடு நோய்'' என இக் குற்றங்களின் பெயரையும் மறத்தல் வேண்டுமென்பர் திருவள்ளுவர்.

பொற்கொல்லர் பொன்னைப் பறியென்பது குழூஉக்குறிவழக்கு. யாதாயினும் ஒரு காரணம் பற்றி ஒரு கூட்டத்தார் ஒருபொருளை அதற்குரிய சொல்லாற் சொல்லாது தாம் விரும்பிய சொற்குறியாற் சொல்வது குழூஉக்குறி எனப்படும்.

★

மாயாவே யான்வடிவு மங்கை நல்லார் மென்றோளுங்
காயாவே யொக்குங் கதிரையே—தூயவுமை
மாதிட மீவான் மகன்மறலிக் கஞ்சாத
மாதிட மீவான் மலை. (81)

## இதன்பொருள்:—

தூய உமை மாது—தூயவராகிய உமையம்மையாருக்கு, இடம் ஈவான் மகன்—இடப்பாகத்தைக் கொடுத்த சிவபிரானுக்கு மைந்தனும், மறலிக்கு அஞ்சாத மாதிடம் ஈவான்—இயமனை யஞ்சாத மிக்க மனவலிமையைத் தொண்டர்களுக்குக் கொடுப்பவனுமாகிய முருகக்கடவுளின், மலை—மலை நிலம், மாயா வேயான் வடிவு—இசைகெடாத வேய்ங் குழலோனது திருமேனி, காயாவே ஒக்குங் கதிரையே--காயாம்பூவையே ஒக்குங் கதிரைப்பதியேயாகும். மங்கைநல்லார் மென்றோள்—பெண்களில் நல்லிலக்கணமமைந்தோரது மெல்லிய தோள்கள், காயா வேய் ஒக்குங் கதிரையே—உலராத பசிய மூங்கிலை ஒக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் வேய்ங்குழலோனுகிய கண்ணபிரானது நிறத்தைக் காயாமலர்கள் காட்டுகின்றன. மகளிரின் மெல்லிய தோள்கள் பசிய மூங்கிலை நிகர்க்கின்றன.

வேய்—மூங்கில். கண்ணபிரான் வேய்ங்குழலை ஊதி ஆநிரைகளையும் இடைச்சேரியிலுள்ள கேட்குமுயிரனைத்தையும் மகிழ்விப்பான். காயா—காயாம்பூ காயா வேய் — உலராத மூங்கில். மறலி—இயமன். திடம்—மனவலி.

★

வேயார் நதிக்கரையும் வெற்பாருஞ் சாரல்களுங்
காயாமா மேவுங் கதிரையே—ஓயாமல்
வேலவா வாவென்று வேண்டிப் பணிகுநர்க்கு
மாலவா வாட்டுவோன் வாழ்வு. (82)

**இதன்பொருள்:—**

ஓயாமல் வேலவா வாவென்று—இடையறாது வேலாயுதக் கடவுளே வந்து காத்தருள வேண்டும் என்று, வேண்டிப் பணிகுநர்க்கு — திருவருளை வேண்டிப் பணியுந் தொண்டர்களுக்கு, மாலவா வாட்டுவோன் வாழ்வு—அவர்களைப் பற்றி வருத்தும் மயக்கமாகிய ஆசையை ஒழிப்போனது கோயில், வேயார் நதிக்கரை—மூங்கில்கள் வளர்ந்த ஆற்றங் கரைகளில், காயாமா மேவுங் கதிரையே—காயாவும் மாவும் பொருந்துங் கதிரைப்பதியே யாகும். வெற்பா ருஞ் சாரல்கள்—மலைகளைப் பொருந்திய மலைச்சாரல் கள், காயா மா மேவுங் கதிரையே—விலங்கினங் களை யுடையதாகுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் மூங்கில் வளர்ந்த நதிக்கரைகளில் இடையிடையே காயாமரங்களும் மாமரங்களும் வளர்ந்திருக்கும். மலைச்சாரல்களில் விலங்கினங்கள் உலாவித்திரியும்.

காயாமா—விலங்கு. மா என்னும் பலபொரு ளொருசொல் மா மரத்தை உணர்த்தாது காயாமா என அடையடுத்து நின்று விலங்குகளை உணர்த் தியது. பாயா வேங்கை என்பதுபோலக் கொள்க

★

நீலாறு காமலரு நீள்வீதிச் சாருமணி
காலாறு பாயுங் கதிரையே—மாலான
நெஞ்ச மறுப்பான் நினையுமன்பர் மூலமல
வஞ்ச மறுப்பான் மலை. (83)

**இதன்பொருள்:—**

மாலான நெஞ்சம் மறுப்பான் — மயக்கம் மிகுந்த கீழோர் உள்ளத்தை அணுகாது மறுப்பவனும், நினையும் அன்பர் மூலமல வஞ்சம் அறுப்பான் மலை—தன்னையே சிந்திக்கும் அன்பர்களது மூல மலமாகிய ஆணவ மலத்தின் வஞ்சச் செயல்களை அறுப்பவனுமாகிய முருகக்கடவுளின் மலை, நீல் ஆறு கா மலர்—காற்று இளந்தென்றலாக மெல் லென வீசுஞ் சோலையின் மலர்களில், அணி காலாறு பாயுங் கதிரையே—கூட்டமாகிய தேன் வண்டுகள் வீழுங் கதிரைப்பதியே யாகும். நீள் வீதிச் சார்— நீண்ட தெருக்களின் கரைகளில், அணி காலாறு பாயுங் கதிரையே—அழகிய கால்வாய்கள் ஓடுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில், இளந்தென்றல் மெல்லென வீசுஞ் சோலைகளிற் கூட்டமாகத் தேன்வண்டுகள் வீழ்ந்து தேனுண்ணும். நீண்ட தெருக்கரைகளில் அழகிய கால்வாய்கள் ஓடும்.

நீல்—காற்று. ஏனைய இடங்களில் விரைந்து வீசுங் காற்று இளமரக்காவில் இனிய இளந்தென்ற லாக அமைதியுடன் வீசுதலின், நீல் ஆறு கா என் றார். ஆறுதல்—இளைப்பாறுதல். சார்—கரை.

மூலமலம்—ஆணவம். இது செம்பிற் களிம்பு போல உயிரை அநாதியாகத் தொடர்ந்து நிற்றலி ணலே மூலமலமெனப்பட்டது. இதற்கு ஒருபோதும் அழிவில்லை. எப்பொழுதும் உயிரோடு நிற்றலிணலே சகசமலமெனவும்படும். இஃது உயிர்க்கு நல்லுணர்வு வராமற் றடுத்து நின்று, தீய எண்ணங்களுக்குந் தீய செயல்களுக்கும் ஏதுவாயிருக்கும். இது மூனைப் புக் கொள்ளும்போது நல்லறிவு மயங்கும். ஆசை கோபம். மயக்கம், அகங்காரம், கொடுமை முதலிய தீக்குணங்கள் வெளிப்படும். இவற்ருற் றீவினைகள் நிகழும். இவ்வினைகள் பிறவியைக் கூட்டும். கல்வி யறிவிணலும், நல்லாரிணக்கத்திணலும், வழிபாட்டி ணலும், மெய்யுணர்விணலும், குருவருளிணலும் இதனை முனைப்புக் கொள்ள விடாது அடக்கலாம். இவ்வாறு இதன் வலியைக் கெடுத்து இறைவனை வழிபடுந் தொண்டர்களுக்கு அவன் திருவருள் துணை நின்று அதன் வலியைப் பின் ஒருபோதுங் கிளரா வாறு செய்து வீடுபேற்றை நல்கும் என்க.

இதணல் ஆணவத்தின் வஞ்சங் கெடுமாறு கூறிஞர்.

★

மாவிரத மாதவரும் வண்ணமலர் வாவிகளுங்
காவி யணியுங் கதிரையே—தூவி
யணிமயிலான் சேவலா னன்பிலார்க் கென்று
மணிமையிலான் சேவலா னன்பு. (83)

**இதன்பொருள்:—**

தூவி அணி மயிலான்—தோகையைத் தனக்கு அலங்காரமாக அணிந்துகொண்ட மயிலை ஊர்தி

யாகவுடையவனும், சேவலான்—சேவலைக் கொடியி லுயர்த்தியவனும், அன்பிலார்க்கு என்றும் அணிமையிலான்—அன்பில்லாத கீழோருக்கு எக்காலத் திலுங் காண்டற்கரியவனும், சேவலான்—அன்புடைய அன்பர்களுக்குக் காவலாயொன்றி யுடனிற் போனும் ஆகிய முருகக்கடவுளின், அன்பு—அன்பைப் பெற்ற திருப்பதி, மா விரத மாதவர்—பெரிய விரதங்களையுடைய தவத்தினர், காவி அணியுங் கதிரையே—காவியுடையை அணியும் கதிரைப்பதியே யாகும். வன்னமலர் வாவிகள்—பலநிற மலர்களைப் பூத்த தடாகங்கள், காவி அணியுங் கதிரையே—குவளை மலர்களை ஆடையாக அணியுங் கதிரைப் பதியே யாகும.

இப்பதியிற் பெரிய விரதங்களையுடைய தவ முனிவர்கள் காவியுடையை அணிந்திருப்பார்கள் தடாகங்கள் குவளை மலர்களை ஆடையாக அணிந் திருக்கும். அவ்வாடையை ஏனைய பன்மலரீட்டமும் பூத்தொழில் செய்ததுபோல அலங்கரித்துக் காட்டும்.

மா—பெரிய. வன்னம்—நிறம். காவி—காவியுடை. காவி—குவளைமலர். தூவி—தோகை. சேவல்—காவல்.

முருகப்பெருமானது அழகிற்கும் இளமைக்கும் பேரொளிக்குந் தெய்வ வடிவிற்கும் ஏற்புடைய ஊர்தியாதலை விழைந்து மயில் தன்னுடம்பைப் பன்னிறங் கலந்து மின்னுகின்ற நீலத்தோகையால் அலங்கரித்துங் கொண்டதெனத் தற்குறிப்பேற்றவணி விரித்துரைக்க.

எங்கும் நிறைந்த பெருமானை அன்பில்லாத புல்லியோர் ஞானவிழி திறந்து நோக்காமையாற் காணாராயினர். அன்புடைய ஞானியர்கள் ஞான விழி திறந்து நோக்கி வழிபடுதலினால் அப்பெரு மான் தமக்குத் தோன்றாத் துணையாய் உடனுறை தலைக் காண்கின்றனர்.

★

போதகங் கொம்பாலும் பூங்கொடியார் வாயாலுங்
காதன்முத் தீயுங் கதிரையே—ஓது
மருவார்க டம்பகையை வாட்டுமணி வைவேன்
மருவார் கடம்பன் வரை. (85)

**இதன்பொருள்:—**

ஓதும் மருவார்கள் தம் பகையை வாட்டும்—நூற்றெட்டு யுகத்திற்கு மூவுலகும் துதிக்க அரசு புரிந்த சூரன் முதலிய பகைவர்களது பகையை முற்றக் கெடுத்த, அணி வை வேல்—அழகிய கூரிய வேலையுடைய, மருவார் கடம்பன் வரை—வாசனை மிக்க கடப்பமாலை சூடிய முருகவேளது மலை, போதகங் கொம்பால்—யானைகள் தந்தங்களினிட மாக, காதன் முத்து ஈயுங் கதிரையே—விரும்பப் படும் முத்துக்களைப் பிறப்பித்துத் தருங் கதிரைப் பதியே யாகும். பூங்கொடியார் வாயால்—பூங்கொம்பு போலும் மகளிர் வாயினிடமாக, காதன் முத்து ஈயுங் கதிரையே—அன்பிற்கறிகுறியாகிய முத்துப் போன்ற பற்களின் குறுநகையைத் தோற்றுவிக் குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் யானைக் கொம்புகளில் முத்துப் பிறக்கும். மகளிரின் வாயிற் குறுநகை யரும்பும்.

போதகம்—யானை. மருவார்—பகைவர். நாற்றெட்டு யுகத்திற்கு எல்லாவுலகுஞ் சூரனையே துதித்தமை தோன்ற ஓதும் மருவார் என்றார். மரு—வாசனை. அணி—அழகு. வை—கூர்மை.

முருகப்பெருமானின் பன்னிரு கரங்களில் மார்பிற் பொலிவன இருகரங்களாம். அவற்றில் ஒன்று வேலொடு பொலிவதாய் அஞ்சலென்றருளும் அபயக் குறிப்பைக் காட்டும். மற்றது மார்பிற் றவழுந் தாரொடு பொலிவதாய் மன்னுயிர்கள் வேண்டும் வரங்களைக் கொடுக்கும் வரதக் குறிப்பைக் காட்டும். அபயம் வரதம் ஆகிய இரு திருக்கரங்களையும் பொலிவுபடுத்தும் வேலையும் மாலையையுங் கூறினார், அவை காட்சிக்கினியவாய் முருகப்பெருமானின் திருக்கரங்களையும் மார்பையும் அழகு செய்தலின் என்க.

★

இட்டபாற் சட்டியினி லேந்துகின்ற காவடியிற்
கட்டளை மேவுங் கதிரையே—முட்டியமர்
ஏற்றினன் வாழ விரங்கியடி யிந்துகரை
யேற்றினன் வாழு மிடம். (86)

**இதன்பொருள்:—**

முட்டி அமர் ஏற்றினன் வாழ — எதிர்த்துப் போரை மிகுவித்த சூரன் நல்வாழ்வு பெறுமாறு, இரங்கி அடியீந்து கரை ஏற்றினன்—அவன்மேல் இரக்கங்கொண்டு திருவருளை நல்கிச் சேவலும் மயிலுமாகத் தடுத்தாட்கொண்ட முருகக்கடவுள், வாழும் இடம்—கோயில் கொண்ட தலம், இட்ட

பாற்சட்டியினில்—உறையிடப்பட்ட பாற்சட்டியில், கட்டு அளை மேவுங் கதிரையே — கட்டித் தயிர் பொருந்துங் கதிரைப்பதியே யாகும். ஏந்துகின்ற காவடியில்—அடியார்கள் தோளி லேந்துகின்ற காவடியில், கட்டளை மேவுங் கதிரையே—முருகப்பெருமானின் கட்டளைச் சிறப்பு மேம்பட்டு விளங்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் குறிஞ்சி நிலத்தை யடுத்த முல்லை நிலத்தின் இடைச்சேரிகளிற் பாற்சட்டிகள் உறை விடப்படுதலினலே கட்டித் தயிரை யுடையனவா யிருக்கும். அடியார்களெடுக்குங் காவடியில் அவன் அடியார்களுக்கு நல்குங் கட்டளைச் சிறப்பு விளங்கித் தோன்றும்.

அளை—கட்டித்தயிர். அமர்—போர்.

இப்பதிக்கு யாத்திரை செய்யும் அடியார்களிற் பெரும்பான்மையோர் முருகப்பெருமானது உத்தரவு பெற்றே தமது நேர்கடன்களைச் செய்வர். மிகுதிபற்றிக் காவடியைக் கூறினரேனும், ஏனைய தீக்குளித்தல் கழுத்தறுத்தல் மலையேறுதல் முதலிய நேர்கடன்களிலுங் கட்டளைச் சிறப்பு விளங்கித் தோற்றும் என்க. அடியார்கள் பலர் தாமெண்ணிய நேர்கடன்களை இனிதாகப் பூர்த்தி செய்தற்குக் கனவிலே உத்தரவு பெற்றுக்கொள்கின்றார்கள். சிலர், அடியார்கள் வாயிலாகப் பெறுகின்றனர். சிலர் தமக்கு முருகப்பெருமான் அழகிய இளைஞராகவும் தவவேடத்தினராகவும் வந்து சொல்லி மறைந்ததாகக் கூறுகின்றனர். வேறுசிலர் தியானத்திலிருந்து அக்கட்டளையைப் பெறுகின்றனர்.

இவ்வாறு இப்பதியில் அப்பெருமானின் கட்டளைச் சிறப்பு அதியற்புதமாக விளங்குகின்றது.

★

நச்சுமட மின்னுரு நந்துபொரு ளீட்டுநருங்
கச்சவட மேற்கொள் கதிரையே—வச்சிரத்தன்
கைப்பிடிமாக் கொண்டானக் கானக் குறத்திதரு
கைப்பிடிமாக் கொண்டான்றன் காப்பு. (87)

**இதன்பொருள்:—**

வச்சிரத்தன் கைப்பிடிமாக் கொண்டான்—இந்திரனது தெய்வயானையம்மையாரைத் திருமணஞ் செய்துகொண்டவனும், அக் கானக் குறத்தி தரும்—அந்தக் கானவர் வளர்த்த குறப்பெண்ணாகிய வள்ளிநாயகியார் கொடுத்த, கைப்பிடிமாக் கொண்டான்—கையாற் பிடிக்கப்பட்ட மாவை உண்டவனுமாகிய முருகக்கடவுளது, காப்பு—ஊர், நச்சும் மடமின்னர் — விரும்பப்படும் இளமையுடைய மின் போலும் மகளிர், கச்சவடம் மேற்கொள் கதிரையே—மார்பிலும் இடையிலும் அணியுங் கச்சின் மேல் மாலையும் மேகலையுமாகிய கோவைகளை முறையே அணிந்துகொள்ளுங் கதிரைப்பதியே யாகும். நந்து பொருள் ஈட்டுநர் — விரும்பப்படும் பொருட் செல்வத்தைத் தேடும் வணிகர்கள், கச்சவடம் மேற்கொள் கதிரையே — வியாபாரத்தை மேற்கொள்ளுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் மகளிர் மார்பிலும் இடையிலும அணிந்துள்ள இருவகைத் துகிலின் மேலும் அவற்றைத் தாங்குதற்கும் அழகுதருதற்குமாக முறையே

மாலையையும் மேகலையையும் அணிவர். பொருட் செல்வத்தை விரும்பியீட்டும் வணிகர் வியாபா ரத்தை மேற்கொள்வர்.

நச்சுதல்—விரும்புதல். நந்துதல்—விரும்புதல். கச்சு —மார்பிலும் இடையிலும் அணியும் ஆடை. அவை மார்புக்கச்சும் இடைக்கச்சுமாம். வடம் — கோவை மணி. மார்பிலே இரத்தின வடங்களும் முத்து வடங்களும் அணியப்படும். இடையிலே மேகலை காஞ்சி முதலியன அணியப்படும்.

வச்சிரர்—இந்திரனது படைக்கலம். கைப்பிடி— பெண்யானை. கச்சம்—கச்சு.

முருகப்பெருமான் இந்திரன் கொடுத்த கைப் பிடிமாவை வலப்பக்கத்திலும், கைப்பிடிமாக் கொடுத்துத் திருவமுதூட்டிய வள்ளியம்மையாரை இடப்பக்கத்திலும் கொண்ட பேரழகை மேலே பலமுறை கூறியும் அமையாராகி ஈண்டுங் கூறு கின்றார். இவ்வாறு முருகப்பெருமானிற் கொண்ட ஆராக் காதலால் முன்னர்க் கூறியவற்றைப் பின் னுங் கூறுதல் குற்றத்தின்பாற்படாதென்க.

★

மன்னிய தோன்றி மலருமதி நூலினருங்
கன்னியத்தங் காட்டுங் கதிரையே—துன்னுபல
கோட்டுவரி மாவுருவங் கோதிஞன் கொண்டநெடுங்
கோட்டுவரி மாவுருவன் குன்று. (88)

**இதன்பொருள் :—**

துன்னு பல கோட்டு வரி மா உருவம் கோதி ஞன்—நெருங்கிய பல கிளைகளையும் வரிகளையு

முடைய மாமரவடிவத்தைப் பிளந்தவனும், கொண்ட நெடுங் கோட்டு வரிமா உருவன் — பொருந்திய நெடிய கொம்பர்களையுடைய வேங்கைமர வடிவாய் நின்றவனுமாகிய முருகக்கடவுளது, குன்று—மலை, மன்னிய தோன்றி மலர் — சேர்ந்த இதழ்களை யுடைய செங்காந்தட் பூக்கள், கன்னி அத்தங் காட்டுங் கதிரையே—கன்னியர்களின் கைகளை ஒத் துக் காட்டுங் கதிரைப்பதியே யாகும். மதி நூலி னர்—சோதிட நூலினர், கன்னி அத்தங் காட்டுங் கதிரையே—கன்னியிராசிக்கு அத்தநாளைக் கூறுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் மகளிரின் கைகளைப்போலக் காந் தண்மலர்கள் விரிந்திருக்கும். சோதிட நூலினர் கன்னியிராசியில் அத்தநாளைக் கூறுவர்.

மன்னுதல்—சேருதல். நிலைபெறுதலுமாம். தோன்றி —காந்தள். மதிநூல்—சோதிடம். கன்னி — மணஞ் செய்யாத இளம்பெண். அத்தம்—கை. கன்னி—கன்னி யிராசி. அத்தம்—அத்தநாள். இது கைபோல ஐவிரல் வடிவாயிருக்குமாதலின் அத்தமெனப் பெயர் பெற் றுக் கன்னியிராசிக்குப் பொருத்தமான நாளா யிற்று. துன்னுதல்—நெருங்குதல். கோடு—கொம்பர். வரிமா—வரிகளையுடைய விலங்கு; அது வேங்கை. ஈண்டு நெடுங்கோட்டு வரிமா என அடையடுத்து நின்று வேங்கையாகிய விலங்கை யுணர்த்தாது மரத்தை யுணர்த்தியது. இம்மரம் புலிபோலக் காட்சி தருதலின் புலிப்பெயரைப் பெற்றது. கோது தல்—துளைத்துப் பிளத்தல்.

வேங்கைமரமாய் நின்ற வரலாறு முன்னருங் கூறப்பட்டதாயினும் கானவரை ஏமாற்றிய முருகப்பெருமானின் உபாய விசேடத்தை யெண்ணி யெண்ணி மகிழ்பவராதலின் மீட்டுங் கூறினரென்க. இவ்வாறே இவ்வாசிரியர் கந்தபுராணத்தில் வரும் விசேடப் பகுதிகளையும் பாடல்களையுந் தம்மிடம் பாடங் கேட்போருக்கு அடிக்கடி கூறும் வழக்க முடையரென்பதையும் அறிந்துகொள்க.

★

பாற்பாப்பு ளொன்று படைவீர ரோர்நான்கு
காற்பா டலஞ்சேர் கதிரையே—போற்றியருள்
என்னத்தா னென்பா லிடர்களைவா னிக்குவே
ளென்னத்தா னென்பா னிடம். (89)

**இதன்பொருள்:—**

போற்றி அருள் என்ன—முருகக் கடவுளின் திருவடிகளை வணங்கி அருள் தருவாய் என்று வேண்ட, தான் என்பால் இடர் களைவான்—ஒப்பற்றவனாகிய தான் எழுந்தருளி அடியேனது துன்பங்களைப் போக்குவான், இக்கு வேள் என் அத்தான் என்பான்—அப்பெருமானைக் கருப்புவில்லியாகிய மன்மதன் என் அத்தான் என்று முறைமை பாராட்டுவான், இடம்—அவனது கோயில், பால் பாப்புள்—பல திக்கிலுமுள்ள இசைப் பறைவைகளாகிய குயில்கள், ஒன்று காற் பாடலஞ் சேர் கதிரையே—ஒரு காலையுடைய பாதிரி மரங்களையடைந்திருந்து கூவி மகிழ்கின்ற கதிரைப்பதியே யாகும். படைவீரர்—போர் வீரர்கள், ஓர் நான்கு

காற் பாடலஞ் சேர் கதிரையே—நான்கு கால்களை யுடைய குதிரைகளிலேறிச் செல்லுங் கதிரைப் பதியே யாகும்.

இப்பதியிலுள்ள பாதிரி மரங்களிற் குயிற் கூட்டங்கள் சேர்ந்திருந்து கூவி மகிழும். போர் வீரர்கள் குதிரைகளி லேறிச் செல்வர்

பாப்புள்—குயில். அது பாடும் பறவை யாதலின் பாப்புள் எனப்பட்டது. பால்—திக்கு. ஒன்று காற் பாடலம்—பாதிரி. நான்கு காற் பாடலம்—குதிரை. இக்கு—கரும்பு.

மன்னுயிர்களுக்குப் பேரின்ப சுகத்தை அருளி நிற்குங் கந்தழி யாகிய பரம்பொருளை மன்மதன் என் அத்தான் என முறைமை பாராட்டும் புதுமை இருந்தவாறென்னை யென வியந்தவாறும்.

இதனாலே முருகக்கடவுள் தமக்கு அருள் செய்து துயர் களைவாரென்பது கூறினர்.

★

விண்ணுறை சோலை வியன்மலரும் வேண்டினருங்
கண்ணறை போக்குங் கதிரையே—கண்ணருளி
வாகா முருகா வரிமருகா பன்னிரண்டு
வாகா வெனவருவான் வைப்பு. (90)

**இதன்பொருள்:—**

முருகா அரிமருகா பன்னிரண்டு வாகா—முருகனே! திருமால் மருகனே! பன்னிரு தோளனே! வா—வருந்தி யழைப்பேன், முன்னே வருதல் வேண்

டும், கண் அருளிக் கா—கண்ணேயால் வருந்துமிக் கண்களைக் கனிந்து நோக்கி அருள் சுரந்து காத்தல் வேண்டும், என வருவான் வைப்பு—என அடியேன் வேண்டும்போது எழுந்தருளி நோய் தீர்த்த முருகக் கடவுளின் திருவருட் கருவூலமாகிய நலம், விண்ணுறை சோலை வியன் மலர் — விண்ணுலகிற் பொருந்துகின்ற சோலைகளின் பெருமையிற் சிறந்த மலர்கள், கள் நறை போக்குங் கதிரையே—தேனையும் நறுமணத்தையும் தென்றலுடன் போக்குங் கதிரைப்பதியே யாகும். வேண்டினர் — எம்மைப் போற் கண்ணேயால் வருந்தி வேண்டிய அடியார்கள், கண்ணறை போக்குங் கதிரையே — தமது கண்ணிலுள்ள குருட்டுத்தன்மையை நீக்கிக்கொள்ளுங் கதிரைப் பதியே யாகும்.

இப்பதியிற் சோலைகள் ஆகாய வெல்லையிற் சிறந்த மலர்களைப் பூத்து அவற்றின் பயனாய தேனையும் நறுமணத்தையும் நுகர்வார்க்குத் தென்றலுடன் போக்குகின்றன. கண்ணிழந்து வருந்தும் அடியார்கள் கண்பெற்று மகிழ்கின்றனர்.

வியன் — பெருமை. கள் — தேன். நறை — நறுமணம். கண்ணறை—குருடு. வாகு—தோள். வைப்பு—பொருள்களைச் சேமித்து வைக்குங் கருவூலம்.

இப்பதியிற் கண்ணிழந்தோர் கண்பெறுதல் கூறினராயினும் உய்த்துணரவைப்பினல் ஊமர் வாக்குப் பெறுதலுஞ் செவிடர் கேள்வி பெறுதலும் பிறவுங் கொள்க.

இதனாலே முருகக்கடவுள் தமது கண்ணோய் தீர்த்தருளியமை கூறினர். தாம் பெற்ற அருள் மிகுதி தோன்ற வைப்பு என்றார். கண்ணோய் தீர்த்தருளிய வரலாறு முன்னர்க் கூறப்பட்டுள்ளது.

★

ஆசை மறந்தவரு மண்டிவந்து வேண்டுநருங்
காச மறுக்குங் கதிரையே—ஆசை
விடக்குஞ் சரிக்கும் வினையுமறுத் தாளுங்
கடக்குஞ் சரிமகிழ்நன் காப்பு. (91)

**இதன்பொருள்:—**

ஆசை விடக்கும்—இச்சைக் கிடமாகிய ஊனுடம்பும், சரிக்கும் வினையும்—சஞ்சரிக்கும் வினைகளும் ஆகிய இவற்றை, அறுத்து ஆளும்—அறுத்து ஆட்கொள்ளுகின்ற, கடக் குஞ்சரி மகிழ்நன் காப்பு—மலைநிலத்துத் தெய்வமும் தெய்வயானையார் கேள்வனுமாகிய முருகக்கடவுளின் நகரம், ஆசை மறந்தவர்—ஆசையாலுண்டாகுஞ் சிற்றின்பங்களை மறந்த முனிவர்கள். காசம் மறுக்குங் கதிரையே—பொன்னைத் தீங்குதருவதென்று மறுத்து நீக்குங் கதிரைப்பதியே யாகும். அண்டி வந்து வேண்டுநர்—அடைக்கலமாக வந்து கும்பிடுவோர், காசம் அறுக்குங் கதிரையே—கண்ணோய் தொய்வு முதலிய காச நோய்களைத் தீர்த்துக்கொள்ளுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் அவாவறுத்த முனிவர்கள் பொன்னைப் பொருளெனப் போற்றாது வெறுத்து நீக்கு

வர். காசநோய் முதலிய கன்ம நோய்களை அடியவர்கள் வழிபாட்டினுற் போக்கிக்கொள்வர்.

காசம்—பொன். காசம்—காசநோய். விடக்கு—ஊனுடம்பு. சரித்தல் — சஞ்சரித்தல். பிறவிகள் தோறும் உயிரைத் தொடர்தலின் சரிக்கும் வினை என்ருர். கடம்—மலை. குஞ்சரி — தெய்வயானையார்.

இதனுலே முருகக்கடவுளை வழிபட்டுக் காசமறுத்த அடியவர்களுட் டம்மையும் உளப்படுத்திக் கூறினர்.

★

**நல்ல தவரு நடந்து வருவோருங்**
**கல்லறையிற் றங்குங் கதிரையே—அல்லன்மிகு**
**கண்டுதி வைத்தென் கரும மலமுடியக்**
**கண்டுதி வைப்பான்றன் காப்பு. (92)**

## இதன்பொருள்:—

என் கருமம் முடிய அல்லல் மிகு கண்டுதி வைத்து—எனது கன்ம வினைப்பயன் முடியுமாறு துன்பமிகுந்த கட்டுகளை முதுகில் வைத்து, என் மலம் முடியக் கண் தூதி வைப்பான் தன் காப்பு—எனது ஆணவ மலம் வலிகுன்றுமாறு கண்ணுகிய தூதுவனை இடையருது என்பால் அனுப்பி வைக்கும் முருகப்பெருமானது கோயில், நல்ல தவர்—நல்ல தவத்தைச் செய்யும் முனிவர்கள், கல்லறையிற் றங்குங் கதிரையே — குகைகளாகிய தம்மில்லங்களிற் றங்குங் கதிரைப்பதியே யாகும். நடந்து வருவோர்—நடந்து வரும் அடியார் கூட்

டத்தவர், கல் அறையிற் றங்குங் கதிரையே—வழியிலுள்ள கற்பாறைகளில் இருந்து இளைப்பாறுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் நல்ல தவத்தைச் செய்யும் முனிவர்கள் தமது குகைகளாகிய இல்லிடங்களிற் றங்குவர். நடந்து செல்லும் யாத்திரிகர்கள் வழியிலுள்ள கற்பாறைகளில் இருந்து உணவருந்தி நீர் பருகி இளைப்பாறிச் செல்வர்.

கல்லறை—மலைக்குகை. கல் அறை—கற்பாறை. அல்லல்—துன்பம். கண்டூதி — கட்டுகளுந் தினவும். கருமம்—கன்மவினை. மலம்—ஆணவ மலம். தூதி—தூதுவன்.

ஆசிரியர் தமது கண்ணோயைத் தீர்த்தருளுமாறு முருகக்கடவுளை வேண்டுதல் செய்து இந்நூலைப் பாடிவருகையிற் கண்ணோய் தணிய முதுகிலே பலமுறையுந் தோன்றி வருத்திய கட்டுகளாலுந் தினவாலும் பெரிதும் வருந்தினர். அவையும் அப்பெருமானருளாற் றணியப் பெற்றாரெனினும் நோயின் கொடுமையாற் பேரிடருற்றாராதலின் அவற்றைக் கன்மவினை முடிக்க வந்தனவென்று பாராட்டிக் கொண்டார்.

ஆசிரியர் நிலையற்ற உடல்நோயால் வருந்தும்போதும் முருகப்பெருமானிடத்துக் கழிபெருங் காதலுடையராய்ப் பத்தி வெள்ளத்தில் நீந்தித் திளைத்தாரென்பது 'கண் தூதி வைப்பான்' எனத் திருவருட் பார்வை நுகர்ச்சி கூறுமாற்றாலறியப்படும்.

இதனாலே கன்மவினை யழியத் திருவருட்பார்வை பெற்றமை கூறினார்.

★

ஓதுவார் நாவி லுயர்ந்ததே மாமரத்திற்
காதம் பரிவாழ் கதிரையே—போதலரும்
பன்னிரண்டு கண்ணன் பழநிப் பழம்பதியான
என்னிரண்டு கண்ண னிடம். (93)

**இதன்பொருள்:—**

போது அலரும் பன்னிரண்டு கண்ணன்—திருவருட்சத்தி யாகியபோது கருணையாக மலர்ந்து விளங்கும் பன்னிரண்டு திருவிழிகளை யுடையவனும், பழநிப் பழம்பதியான்—பழநி யென்னும் பழைய திருப்பதிக்குரியோனும், என் இரண்டு கண்ணன்—எனது இரு கண்ணிற் பிரியா துறைபவனும் ஆகிய முருகக்கடவுளின், இடம்—கோயில், ஓதுவார் நாவில் — முருகப்பெருமானது பாமாலைகளையும் மந்திரங்களையும் பயிலுந் தொண்டர்களது நாவில், காதம்பரி வாழ் கதிரையே—சரசுவதி வீற்றிருக்குங் கதிரைப்பதியே யாகும். உயர்ந்த தேமா மரத்தில்—உயர வளர்ந்த தேமா மரங்களில், காதம்பரி வாழ் கதிரையே—குயில்கள் வசிக்குங் கதிரைப் பதியே யாகும்.

இப்பதியில் முருகனது பாமாலைகளையும் மந்திரங்களையும் மெய்யன்புடன் ஓதுந் தொண்டர்கள் நாவிற் சரசுவதி வீற்றிருந்து அவர்களுக்குச் சிவ ஞானத்தை அருளுவதுமன்றி உலகிற்கு வேண்

டிய உறுதி மொழிகளையும் அருண்மொழிகளையுஞ் சொல்லுவிப்பாள். உயர்ந்த தேமா மரங்களிற் குயில்களிருந்து இன்னிசை பாடி மகிழும்.

தேமா—இனிப்பான கனிதரும் மாமரம். காதம்பரி—சரசுவதி மெய்யடியார் நாவிற் சரசுவதி வீற்றிருந்து தெய்வ வாக்குகளை அருளிச் செய்வது இப்பதியில் மிகப்பெரிய அற்புதமாகும். காதம்பரி—குயில். போது—விரியும் பருவத்து மலர்முகை. இறைவனுக்கு இயல்பாகவே உயிர்களைக் காக்குந் திருவருட்சத்தி யுண்டாயினும் அவ்வருள் அடியார்கள் செய்யும் வழிபாட்டினல் நெகிழ்ந்து கருணையாய் மலர்ந்து திருவிழிகள் வாயிலாக வெளிப்படுமாதலின் போதலருங் கண்ணன் என்றார்.

முருகப்பெருமானது பன்னிரு திருவிழிகளும் இடையறாது தூதுவந்து கலத்தலினால் அவனுருவம் கண்ணை விட்டகலுமாறில்லை யென்பார், என்னிரண்டு கண்ணன் என்றார்.

இதனாலே அப்பெருமான் தங்கண்ணிற் பிரியாதுறையுந் தன்மை கூறினார்.

★

பாலமரும் பூங்காவிற் பாலிடையர் முன்றில்வயிற்
காலச மேவுங் கதிரையே—ஏலுமுடற்
போக்கும் வரவும் புரிவினையும் பொல்லாப்பும்
போக்கும் வரதன் புகல் (94)

**இதன்பொருள்:—**

ஏலும் உடற்போக்கும்—பொருந்திய உடலின் நீக்கமாகிய இறப்பும், வரவும்—புதிய உடலை எடுக்க

வருகின்ற வரவாகிய பிறப்பும், புரி வினையும்—செய்தனவுஞ் செய்கின்றனவுஞ் செய்யவிருப்பனவுமாகிய மூவகை வினைகளும், பொல்லாப்பும் — தீச்செயல்களுக் கேது வாகிய கோபம் அகங்காரம் முதலிய பொல்லாப்பான குணங்களும் ஆகிய எல்லாவற்றையும், போக்கும் வரதன் புகல்—அகற்றி யாட்கொள்ளுங் கலியுக வரதனது கோயில், பால் அமரும் பூங்காவில்—அருகிலமைந்த பூஞ்சோலையில், காலசம் மேவுங் கதிரையே—காற்று உலாவி இனிமை தருங் கதிரைப்பதியே யாகும். பால் இடையர் முன்றில் வயின்—பாற்செல்வத்தை யுடைய இடையர்களது முற்றங்களில்,அசம் கால் மேவுங் கதிரையே—ஆடுகள் மரக்கால்களிற் கட்டப்பட்டிருக்குங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் பூஞ்சோலைகளிலிருந்து வீசும் இனிய காற்று மகிழ்ச்சியைத் தரும். முற்றங்களில் நாட்டப்பட்டுள்ள சிறு மரக்கால்களில் ஆடுகள் கட்டப்பட்டிருக்கும்.

முன்றில்—முற்றம். போக்கு — இறப்பு. வரவு — பிறப்பு.

இதனாலே முருகப்பெருமான் தமது இறப்பும் பிறப்பும் வினையு மாகிய துன்பங்களைப் போக்குவார் என்பது கூறினர்.

★

சேவ்வைப் புனத்திற் றிருவிழாக் காலத்திற்
கவ்வை மலியுங் கதிரையே—யெவ்வமறப்
பார்ப்பா ணமர்ந்துவிழி பன்னிரண்டாற் பார்த்தவற்றைத்
தீர்ப்பா ணமருஞ் சிலம்பு. (95)

**இதன்பொருள்:—**

*அமர்ந்து விழி பன்னிரண்டால்—விருப்பமுற்று விழிகள் பன்னிரண்டாலும், எவ்வம் அறப் பார்ப்பான்—அடியேனது துன்பங்கள் வேரற நோக்குபவனும், பார்த்தவற்றைத் தீர்ப்பான் — நோக்கிய அத்துன்பங்களை மீண்டுங் கிளராவாறு தீர்த்து முடிப்பவனும் ஆகிய முருகக்கடவுள், அமருஞ் சிலம்பு—எழுந்தருளி யிருக்கும் மலை, செவ்வைப் புனத்தில்—செவ்வையாக அமைந்த தினைப்புனங்களில், கவ்வை மலியுங் கதிரையே—தொழிலாளர்களின் பல தொழில்களும் மிகுந்திருக்குங் கதிரைப் பதியே யாகும். திருவிழாக் காலத்தில்—திருவிழா நிகழுங் காலங்களில், கவ்வை மலியுங் கதிரையே—விழாவொலி யெங்கும் மிகுந்திருக்குங் கதிரைப் பதியே யாகும்.*

*இப்பதியிற் றினைப்புனங்களைப் பண்படுத்துதல், தினை வித்திடுதல், புனங் காத்தல், கதிர் கொய்தல் முதலிய பல தொழில்களும் மாறி மாறி நிகழ்ந்து கொண்டிருக்கும். திருவிழாக் காலங்களில் அடியார்களின் வழிபாட்டொலி பாட்டொலி மந்திரவொலி முழவொலி முதலிய பல்வேறொலிகளும் மலிந்திருக்கும்.*

கவ்வை — *தொழில்.* கவ்வை—*ஒலி.* எவ்வம் — *துன்பம்.*

இதனாலே தமக்கு வந்த எவ்வகைத் துன்பமும் திருவருட் பார்வையா லறுக்கப்பட்டமை கூறினார்.

★

சாந்த நிலைத்தொண்டர் தாலுஞ் சிறுகுடியுங்
காந்தாரம் பாடுங் கதிரையே—ஏந்துமுச்சங்
கத்த னமாதிக் கடவுள் பரமசு
கத்தனமா வென்பான்றன் காப்பு. (96)

**இதன்பொருள்:—**

*ஏந்து முச்சங்கத்தன்—செந்தமிழ்க் குரவனென்று தன்னைத் துதிக்கின்ற முச்சங்கத்திலுமிருந்து தமிழுரைத்தவனும், நம் ஆதிக் கடவுள்—எமது பழைமையான கடவுளும், பரம சுகத்தனம் ஆ என்பான்—நீவிர் பேரின்ப சுகத்தை யடைவீராக என்று எம்மை வாழ்த்துபவனுமாகிய முருகக்கடவுளின், காப்பு—நகரம், சாந்த நிலைத் தொண்டர் தால்—சாந்த நிலையுடைய தொண்டர்களது நாக்கு, காந்தாரம் பாடுங் கதிரையே—இசைப் பாட்டுக்களைப் பாடுங் கதிரைப்பதியே யாகும். சிறுகுடி—குறிஞ்சி நிலத்தூர்களாகிய சிறு குடிகளில், காந்து ஆர் அம்பு ஆடுங் கதிரையே—பகைவர் உயிர்களைக் கவரும் அழகிய அம்புகள் வீட்டு இறப்புக்களிலுள்ள அம்புக் கூடுகளிலிருந்து ஆடிக்கொண்டிருக்குங் கதிரைப்பதியே யாகும்.*

*இப்பதியிற் சாந்தநிலை யெய்திய தொண்டர்கள் சரசுவதி வாக்குப் பெறுதலினாலே இசைப்பாட்டுக்களை இனிமையாகப் பாடித் துதிப்பர். சிறு குடிகளிலுள்ள வேடரில்லங்களின் இறப்புக்களில் அம்புக் கூடுகள் தொங்கிக்கொண்டிருக்கும்.*

*சாந்தம்—அமைதி. அது மனம் மொழிமெய்கள் தீநெறிக்கட் செல்லாது அடங்கிய நிலை.* தால்—*நாக்கு.* சிறுகுடி—*குறிஞ்சி நிலத்தின் வேடர் குடியிருப்பு.* காந்தாரம்—*இசைப்பாட்டு.* முச்சங்கம் — *முதலிடை கடைச் சங்கங்கள்.* பரமசுகம்—*பேரின்பம்.*

முருகக்கடவுள் சங்கப் புலவராயிருந்தா ரென்பது, "அவருள் சங்கமிருந்தார் அகத்தியனாரும் திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளுங் குன்றெறிந்த முருகவேளும் முரஞ்சியூர் முடிநாக ராயரும் நிதியின் கிழவனுமென இத்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்தோன்பதின்மர் என்ப", என்னும் இறையனாரகப் பொருளுரையாற் றுணியப்படும்.

இதனாலே சங்கப் புலவரும் குலதெய்வமு மாகிய முருகக்கடவுள் பேரின்ப சுகத்தை யடைய வருமாறு தம்மை வாழ்த்தியருளுவா ரென்பது கூறினார்.

★

வாய்ச்ச கணியில் வனவேடர் வாழ்குடியிற்
காய்ச்சுரை மேவுங் கதிரையே—வாய்ச்சமுதன்
மாக்குஞ் சரவணத்தன் மாமனத்தன் மாறிலின்ப
மாக்குஞ் சரவணத்தன் வாழ்வு. (97)

**இதன்பொருள் :—**

*வாய்ச்ச முதல் மா குஞ்சரவணத்தன்—எக்கருமத்திற்கும் முதல்வனாக வழிபாடு செய்யப்படும் பெரியோனாகிய விநாயகப்பெருமானது, மா மனத்தன்—பெருமை மிக்க திருவுள்ளத்தில் இளவலாக எண்ணப்படுவோனும், மாறில் இன்பம் ஆக்குஞ் சரவணத்தன்—மறுதலையான துன்பத்தை யறியாத*

பேரின்பத்தை ஆக்கி வைக்குஞ் சரணவபவனும் ஆகிய முருகக்கடவுளின், வாழ்வு—கோயில், வாய்ச்ச கணியில்—புதிதாகத் தோன்றிய வேங்கை மரத்தில் காய்ச்சுரை மேவுங் கதிரையே—மாற்றுயர்ந்த பசும் பொன் பொலியுங் கதிரைப்பதியே யாகும். வன வேடர் வாழ் குடியில்—காட்டு வேடர்கள் வசிக்குஞ் சிறு குடிசைகளின் கூரைகளில், காய்ச்சுரை மேவுங் கதிரையே—காய்களை யுடைய சுரைக் கொடிகள் படருங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் வள்ளியம்மையார் பொருட்டுப் புதிதாகத் தோன்றிய வேங்கை மரத்தில் மாற்றுயர்ந்த பொன் பொலிந்து காணப்படும். வேடர்களின் சிறு குடிசைக் கூரைகளிற் சுரைக்கொடிகள் காய்த்திருக்கும்.

வாய்ச்ச—புதிதாகத் தோன்றிய; வாய்த்த என்பது வாய்ச்ச என மருவியது. கணி — வேங்கை. குடி—குடிசை. சிறுகுடி யென ஊர்ப் பெயராகக் கொள்ளினு மமையும். காய்ச்சுரை — புடத்திலிட்டு எடுக்கப்பட்ட தங்கம். இப்பசிய பொன்போல வேங்கை பூக்கும் என்றவாறு. குஞ்சரவணத்தன்—விநாயகக்கடவுள். மாறு—எதிர்ப்பு. இன்பத்திற்கு மாறு துன்பம். இன்பத்தின் முடிவில் அதன் மறுதலையாகிய துன்பம் புகுதலின் பேரின்ப வீட்டை மாறிலின்பம் என்றார்.

வாய்ச்சகணி—என்றதற்குக் குறிஞ்சி நிலத்திற்கு வாய்ப்பாயமைந்த வேங்கை யெனவும் பொருந்தும்.

இதனாலே முருகக்கடவுள் உலகத் துன்பங்களைப் போக்கியபின் மாறில்லாத பேரின்பத்தை அருளுவா ரென்பது கூறினர்.

★

முட்டுவழிச் செல்வோரு மூதறிஞ ருந்தலையிற்
கட்டிறக்கி யாறுங் கதிரையே—முட்டு
மிருமலச் சிக்கறுத்தே யென்னையாண் மும்மைக்
கருமலச் சிக்கறுப்பான் காப்பு. (98)

**இதன்பொருள்:—**

*முட்டும் இரு மலச் சிக்கறுத்து—பேரின்பத்தை அணுகவிடாது எதிர்க்கின்ற மும்மலங்களுள் இரண்டனையும் முதலில் அறுத்து, மும்மைக் கருமலச் சிக்கறுப்பான் — மூன்றாவதாகிய இருண்ட ஆணவத்தின் பிணிப்பை அறுத்தற்குத் திருவுளங்கொண்ட அப்பெருமான், என்னை ஆள் காப்பு—அடியேனை ஆட்கொள்ளுந் திருப்பதி, முட்டுவழிச் செல்வோர்--நெருக்கமான காட்டுவழியிற் செல்லும் யாத்திரீகர், தலையிற் கட்டு இறக்கி ஆறுங் கதிரையே—தலையிற் சுமந்து செல்லும் பொதிகளை இடையிடையே இறக்கிவைத்து இளைப்பாறிச் செல்லுங் கதிரைப்பதியே யாகும். மூதறிஞர்—அறிவான் முதிர்ந்த சான்றோர், தலையிற் கட்டு இறக்கி ஆறுங் கதிரையே—தமக்குத் தலைப்பாரமாக இருந்த உலக பாரங்களை நீயே தாங்குதி என்று ஒப்புவித்து ஆறுதலடைந்திருக்குங் கதிரைப்பதியே யாகும்.*

இப்பதியிற் காட்டுவழியே செல்லும் யாத்திரீகர் இடையிடையே நிழல் மரங்களின் கீழும் மடங்களிலுங் கற்பாறைகளிலுந் தமது தலைச்சுமைகளை இறக்கி வைத்து உணவருந்தியும் நீர் பருகியுங் களைப்பு நீங்கிச் செல்வர். அறிவு முதிர்ந்த சான்றோர், எல்லாம் இறைவன் செயலென்று துணிதலினாலே தந்தை தாய் தமர் தாரம் மகவு என்னும் இவர்களைத் தமது தலைப்பாரமெனக் கருதாது நீயே தாங்குதி யென்று அவன் திருவடியில் ஒப்புவித்துக் கவலையற்று வாழ்வர்.

முட்டுவழி—இடுக்கு வழி. இங்கே நெருக்கமான காடுகளினிடையே செல்லுஞ் சிறு நடையைக் குறித்தது.

இருமலமென்றது, மாயாமலத்தையுங் கன்ம மலத்தையுங் குறித்து நின்றது. இறைவன் ஞானத்தினால் மாயாமலத்தையும் அநுபவத்தாலுந் திருவருளாலுங் கன்ம மலத்தையும் முதலில் நீக்கிப் பின் ஆணவத்தைத் தமது அருட்பார்வையால் வலிகுன்றச் செய்தலின், அவற்றை வேறுபடுத்துக் கூறினர்.

மும்மலங்களும் உயிரைச் சுற்றிப் பிணித்தலின் சிக்கு என்றார். இச்சிக்குகளை முருகக்கடவுள் அகற்றி ஆட்கொள்ளு மாற்றினை இந் நூலாசிரியர் **உயிரிளங்குமரன் நாடகத்திலும், கந்தபுராணக் கதைகளும் உண்மைநூற்** கருத்தும் என்னும் ஆராய்ச்சி நூலினும் மிகத் தெளிவாக எழுதியுள்ளார். ஆண்டுக் கண்டு தெளிக.

இதனாலே முருகக்கடவுள் தம்மை ஆட்கொள்ளும் பதி கதிரை யென்கின்றார். ஈண்டுக் கூறியவாறே இந் நூலாசிரியர் கதிரை முருகனால் ஆட்கொள்ளப்பட் டாரென்பது, அப்பதித் திருவிழாத் தொடங்கு தற்கு இருநாள் முன்னதாய விசய ஆண்டின் ஆவ ணித் திங்களில் இருபத்தாறும் நாளாகிய வெள்ளிக்கிழமை யில் உடல் நீத்தமையால் அறியப்படும். நோய் வாய்ப்பட்டிருந்த ஐந்து நாள்களிலும் கதிரை முரு கன்மேற் பத்தி வைராக்கிய முற்றும் உலகப் பற்றை மறந்தும் இருந்தார்.

இனி, இவ்வெண்பாவில் தமது உடம்பு தளரு மாறு வீறு கொள்ளும் முட்டும் இருமலுமாகிய தொய்வு நோயை ஆற்றுமளவினதாகத் தணிப்ப வன் என்ற தொனிப்பொருள் தோன்ற வைத்த நய மும் உணரத்தக்கது.

★

மேல்கீழ்ப் பிறவிகளில் வீழ்குநரை வேர்த்தோரைக்
காலாறு தல்செய் கதிரையே—நாலாறு
மேழுமைஞ்சி னீங்கி யினிதருள வெம்பிறவி
நாளுமைஞ்சி நீங்கு நகம். (99)

**இதன்பொருள்:—**

நாலாறும் ஏழும் ஐஞ்சின் நீங்கி—இருபத்து நான்கும் ஏழும் ஐந்துமாகிய முப்பத்தாறு தத்து வங்களினின்றும் நீங்கி, இனிது அருள — முருகப் பெருமான் இனிதாய இன்பப் பொருளை அருளு

தலினலே, வெம்பிறவி நாளும் அஞ்சி நீங்கும் நகம்—அடியேனது கொடிய பிறவி நாள்தோறும் அஞ்சிப் பின்னிட்டுச் செல்லும் மலை, மேல் கீழ்ப் பிறவிகளில் வீழ்குநரை—மேலான மனிதப் பிறவி யிலும் ஏனைய கீழான பிறவிகளிலும் விழுகின்ற வர்களை, கால் ஆறுதல் செய் கதிரையே—முருகப் பெருமானது திருவடிகள் ஆறுதலருளி ஆட்கொள் ளுங் கதிரைப்பதியே யாகும். வேர்த்தோரை — வேர்த்து இளைப்படைந்தோரை, கால் ஆறுதல் செய் கதிரையே—காற்று வீசி ஆறுதல் செய்யுங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியில் நல்வினையால் மேற்பிறவிகளிலுந் தீவினையாற் கீழ்ப்பிறவிகளிலும் வீழ்ந்து வருந்துந் தொண்டர்களை முருகப்பெருமானது திருவடிகள் ஆறுதலருளி ஆட்கொள்ளுங் கடமை பூண்டிருக் கும். வெயிலின் வெம்மையாலும் மக்கள் நெருக்கத் தாலும் வழிபாட்டார்வத்தாலும் உள்ள நெகிழ்ச்சி யாலும் கருப்பூரப் புகையாலும் உருண்டு வழிபடும் புழுதியாலும் வேர்த்திளைத்த தொண்டர்களை இனிய தென்றல் வீசி ஆறுதலடையச் செய்யும்.

மேற்பிறவி—மானிடப் பிறவி. கீழ்ப்பிறவி — மக்க ளொழிந்த ஏனைய ஆறும். தன்னையறியும் அறிவு டைமையின் மானுடப் பிறவி மேலானது. ஏனைய அஃதின்மையிற் கீழாயின. கால்—திருவடிகள். கால் —காற்று.

சுத்த மாயையிற் சிவதத்துவம் ஐந்தும், அசுத்த மாயையில் வித்தியா தத்துவம் ஏழும், பிரகிருதி

மாயையில் ஆன்ம தத்துவம் இருபத்துநான்குமாக முப்பத்தாறு தத்துவங்கள் உரைக்கப்படுதலின் நாலாறும் ஏழும் ஐஞ்சும் என்றார்.

உயிர்கள் இவற்றை நுகர்ந்து பின் திருவருளாற் றன்னை யறியும்போது தத்துவ சுத்தியெய்தி மாயாமலத்தினின்றும் நீங்கும்.

இதனாலே முருகப்பெருமான் தமக்குத் தத்துவ சுத்தியருளிப் பிறவியை அஞ்சியோடச் செய்தற்கு எழுந்தருளியிருக்கும்பதி கதிரைப்பதியா மென்கின்றார்.

★

தெய்வப் பணியுந் திருத்தல யாத்திரையுங்
கைவல்லி யஞ்செய் கதிரையே—செய்யதமிழ்
முன்பாட்டுங் கேட்டான் முதிர்வினைகண் மாற்றவுவந்
தென்பாட்டுங் கேட்டா னிடம். (100)

**இதன்பொருள்:—**

செய்ய தமிழ் முன்பாட்டுங் கேட்டான்—செவ்விய தீந்தமிழாற் பாடிய பழந் தமிழ்ப் புலவோர்களது பழைய பாடல்களையுந் திருச்செவிகளிற் கேட்டருளினன். முதிர் வினைகள் மாற்ற உவந்து என்பாட்டுங் கேட்டான்—நாள்போய் முதிர்ந்த பழவினைகளைத் தீர்க்க உளங்கொண்டு அடியேனது புல்லிய பாடல்களையுங் கேட்டருளினன், இடம்—அவ்வாறு கேட்டோனாகிய முருகக்கடவுளின் இருப்பிடம், தெய்வப்பணி — தெய்வத் திருப்பணிகள், கைவல்லியஞ் செய் கதிரையே — பலவகையான இட்ட சித்திகளைத் தருங் கதிரைப்பதியே யாகும்.

திருத்தல யாத்திரை—இப்பதிக்குச் செய்யும் தல யாத்திரை, கைவல்லியஞ் செய் கதிரையே — முடிவில்லாத முத்தியின்பத்தைத் தருங் கதிரைப்பதியே யாகும்.

இப்பதியிற் செய்யுந் திருப்பணிகள் இட்ட சித்திகளை யருளும். தலயாத்திரை முத்தியின்பத்தை நல்கும்.

கைவல்லியம்—சித்தியும் முத்தியும்.

நக்கீரர் குமரகுருபரர் அருணகிரிநாதர் கச்சியப்பர் முதலியோர் பாடிய தீந்தமிழ்ப் பாடல்களை முன்பாட்டு என்றார்.

இதனாலே திருப்பணிப் பயனும் யாத்திரைப் பயனும் நூற்பயனுங் கூறினர்.

இட்டசித்திகளைப் பெறுவது திருப்பணிப் பயனும். முத்தித் தலமாதலின் மெய்யன்போடு யாத்திரை செய்யுந் தொண்டர்களுக்கு ஞானமருளி முத்தியை நல்குவது யாத்திரைப் பயனும். முது வினைகள் மாறுவது நூற்பயனும்.

★

**ஈழத்துக் கவிஞர் பரம்பரையை யிலங்கச் செய்த நவாலியூர்ச் சோமசுந்தரப் புலவர் பாடிய கதிரைச் சிலேடை வெண்பாவும் அதற்குப் பண்டிதை பா. பரமேசுவரியார் செய்த வுரையும் முற்றும்.**

★

# கதிர்காம வேலவர் பதிகம்

## காப்பு

### விநாயகர்

சித்திதருந் தென்கதிரைச் செவ்வேற் பெருமான்மேற்
பத்திதருஞ் சொற்பதிகம் பாடவே—புத்திதரும்
அம்மலைமா ணிக்க மருந்துணையாய் முன்னமருங்
கைம்மலைமா ணிக்கங் கழல்.

### நாமகள்

கண்டவர்க்கு ஞானநெறி காட்டுங் கதிரைமலை
கொண்டவர்க்குச் செந்தமிழ்ப்பாக் கூறவே—வண்டுமுரல்
முண்டகத்தாள் வேதன் முகத்தா ளனதகத்தாள்
முண்டகத்தாள் வைப்பாள் முடி.

### குரு

பத்தித் தருவிற் பழுத்ததே மாங்கனியைத்
தித்தித் தமுதூறுந் தீங்கரும்பை—முத்திதருஞ்
சுப்ரமண்ய ஞானச் சுடர்மணியைப் போற்றியக்கா
லெப்பொருளுங் கைவந் திடும்.

## நூல்

ஏர்பூத்த மெய்யன்ப ருள்ளச்சி லம்பிலெழும்
இரவிநிக ராறுமுகமும்
இருவினைக் காடெரித் தருளமுத மழைபொழியும்
ஈராறு கமலவிழியுங்
கார்பூத்த பாசவிருள் கடியுமிள முறுவலுங்
கனககுண் டலநிரைகளுங்

கதிர்வெயி லெறிக்குநவ ரத்நமணி மகுடமுங்
கலனிலகு மகலமார்பும்
தார்பூத்த பன்னிருபு யாசலமு மிடர்நீக்கு
சத்திவடி வேலுமணிமார்
சாருமிரு பாகமும் பாததா மரையுமாய்ச்
சண்டப்பிர சண்டமயின்மேற்
சீர்பூத்த கருணையுரு வங்காட்டி விழிமாசு
தீர்த்தெனக் கருள்செய்குவாய்
தென்கதிரை மலைவேல வன்பர்மகி ழனுகூல
செந்தியம ருமைபாலனே (1)

அன்பர்நெஞ் சகமெனும் பூம்புனற் குட்டத்தி
லலருமறு முககமலமே
அம்மலர்க் கண்மலர்ந் திடையறு தொழுகுபே
ரானந்த மதுரநறவே
மன்பெரும் பிறவிப்பி ணிக்கெவரு மள்ளியுண
வற்றாத ஞானவமுதே
வாரணப் பிடிதழுவு பன்னிருகை மாணிக்க
மலையேயம் மலையில்வாழும்
இன்புருவ மானவள் ளிப்பசுங் கொடிபடரு
மிருசரண கற்பதருவே
என்னிருகண் மணியே மணிக்குளொளி யேயென்ற
னிடர்கெடுத் தருளீகுவாய்
தென்பரங் குன்றில்வரு தெய்வமே பழனியிற்
செல்வமே யுனைநம்பினேன்
தென்கதிரை மலைவேல வன்பர்மகி ழனுகூல
செந்தியம ருமைபாலனே. (2)

மன்னுயிரி னீவைத்த வெல்லைக்க டங்காத
வான்கருணை யாறுபெருகி
மாணிக்க கங்கையாய் வினைமர முரித்துவெம்
மாயைமுத லறவரித்து
முன்னுயிர்க ளிருண்மலங் கழுவிக் கழிக்குழியை
மூடிக்க ளைப்பகற்றி
முத்திக்க ரைக்கணே விடுமென்ப ரந்நதியின்
மூழ்கியிரு விழிசிறக்க
என்னுயிர்க் குயிரேதெ விட்டாத வின்பமே
யின்பத்தி லெய்துசுகமே
என்றென்று பாடியுன் னருள்வடிவு கண்டுள
மினிக்கின்ற நாளெந்தநாள்
சின்மயசொ ரூபனே குன்றுதோ ருடல்புரி
தெய்வமே யுனைநம்பினேன்
தென்கதிரை மலைவேல வன்பர்மகி ழனுகூல
செந்தியம ருமைபாலனே. (3)

காயத் தழுக்கினுட னுயிரழுக் குங்கழுவு
கதிர்மணிக் கங்கையாடிக்
கவசவெண் ணீறுகண் மணியணிந் தமரருங்
கருதுமுன் னெழுத்தை
நேயத் தொடுநினைந் துள்ளநெக் குருகவிழி
நீரரும் பப்புளகமாய்
நின்றுமத மூன்றொழுகு மைந்துகர மாணிக்க
நீலமலை தாள்வணங்கித்
தாயிற் சிறந்தபே ரன்புடைய வெந்தையுன்
சந்நிதி தலைக்கூடியென்
சஞ்சலம் நீங்கவுன் சரணதா மரைகண்டு
தரிசிக்க வென்றுதருவாய்

தீயர்க்கு மழியாத கருணைபொழி நற்காம
தேனுவேயுனை நம்பினேன்
தென்கதிரை மலைவேல வன்பர்மகி ழனுகூல
செந்தியம ருமைபாலனே. (4)

திங்களணி செஞ்சடைச் சங்கரன் முழுமுதற்
றெய்வமென் பாரவர்வலச்
செவிநிறைய மறைமுதற் பொருளுரைத் தருள்ஞான
தேசிகன் நீயாதலால்
வெங்கலி யுகத்திலே கண்கண்ட தெய்வநீ
வேண்டியுன் றிருமுன்வரும்
விழியிலார் விழிபெறுவர் மிடியுளார் நிதிபெறுவர்
வீணர்மெய்ஞ் ஞானியாவர்
தங்குமெய்ப் பிணியாளர் சுகமடைவர் மலடிமார்
தனையர்களை யீன்றெடுப்பார்
சாவுற்ற பேர்பிழைப் பாரிவைகள் கண்கண்ட
சான்றுமல மூன்றுநீக்கிச்
செங்கணரி மருகதிரு முருகவிழி குளிரவுன்
திருவுருக் காட்டியருள்வாய்
தென்கதிரை மலைவேல வன்பர்மகி ழனுகூல
செந்தியம ருமைபாலனே. (5)

மல்லாடி யெதிர்நின்று கொடுமொழி வழங்கியரு
மாயங்கள் பலவியற்றி
வல்லடி வழக்கிட்ட சூரனுக் கின்பசுக
வாழ்வுதரு கருணைகண்டு
பொல்லாத பாவியுங் கூசாது முன்வந்து
போகாத வினைபோகவும்
புந்தியிரு ணீங்கிமெய்ஞ் ஞானவொளி யோங்கவும்
புதியசுக நிலைதேங்கவும்

எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே
யெல்லாமு னுடையசெயலே
என்றெண்ணி யிறுமாந்து சும்மா விருக்கவு
மிரங்கென்று வேண்டிநின்றேன்
செல்லாத செல்வமருள் நல்லாய் கடக்கரிய
திருவுளத் தெண்ணமறியேன்
தென்கதிரை மலைவேல வன்பர்மகி ழனுகூல
செந்தியம ருமைபாலனே. (6)

ஆராத காதலடி யவர்தலையி லேந்திவரு
மணிகொள்கர்ப் பூரதீபம்
ஆனெய் விளக்கச் செழுஞ்சோதி யுங்கலந்
தருளுருக் கொண்டதென்ன
ஓராயி ரங்கோடி செஞ்சுடரி னொளிவிரித்
துலகிருளை வாளகிரிமேல்
ஓட்டியஞ் ஞானவிரு ளுயிர்தொறு மொழித்ததை
யுணர்ந்துபற் றித்தன்னுருப்
பாராத பேர்கதிரை பணியாத பேர்கங்கை
படியாத பேர்கணெஞ்சிற்
பரவவைத் தன்பரிரு கண்ணிறைய முன்னின்று
பாலிக்கு மென்பரதனைத்
தீராத வினைதீர வேழையுங் கண்கண்டு
தெரிசிக்க வரமருளுவாய்
தென்கதிரை மலைவேல வன்பர்மகி ழனுகூல
செந்தியம ருமைபாலனே. (7)

**பே**றுதரு மந்திரம் பிணிகளழி மந்திரம்
பேரின்ப மருண்மந்திரம்
பெருமைதரு மந்திரம் புதுமைமிகு மந்திரம்
பேசுமர கரமந்திரம்
கூறுபவர் வாயினின் றேழுமுகி லுங்கலை
குனிந்திட முழங்கியெட்டுக்
குஞ்சரமு மலையுமலை யக்கொடுங் கூற்றமுங்
குலையவிரு வினைவரையருள்
ஏறுபட் டக்கணம் நீறுபட வேபிடித்
திருண்மலக் கோடைதணிய
இன்பமழை யன்பர்செவிச் சொரியுமென் பாரதனை
யேழையுங் கேட்கவருள்வாய்
தேறுமறை முனிவரக மூறமுத வாரியே
தேடரிய வருண்மாரியே
தென்கதிரை மலைவேல வன்பர்மகி ழனுகூல
செந்தியம ருமைபாலனே (8)

**வீ**ரவேல் தேவர்சிறை மீட்டவேல் சோதிவேல்
விண்ணகங் குடியேற்றுவேல்
வெற்பக மிடித்தவேல் மைக்கடல் குடித்தவேல்
வீரர்சிறை விடுவித்தவேல்
கோரவேல் சூரனைக் கொன்றவேல் கடலிடைக்
கொக்குத்த றித்தகூர்வேல்
கொற்றவே லருணகிரி சொற்றவேல் கீரனுரை
கொண்டவேல் விண்டுபுகழ்வேல்
ஆரவேல் சஞ்சல மழித்தவேல் மிடிபிணி
யறுத்தவே லடியர்துதிவேல்
ஆறுமுக வேல்கதிரை யமருமருள் வேலென்ப
ரதுபணித் தடிமைவினைகள்

சேரவே வாட்டியிரு விழிகுளிர வையவுன்
தெரிசனந் தந்தாளுவாய்
தென்கதிரை மலைவேல வன்பர்மகி ழனுகூல
செந்தியம ருமைபாலனே. (9)

பாவலன் செந்தமிழ்ப் பாடலுக் கேவல்புரி
பரமசிவ னருளுமுருகா
பரவுமுத் தமிழ்வல்ல பாவாண னெடுசென்ற
பங்கயக் கண்ணன் மருகா
தாவிலன் புறுமௌவை கைலைபுக வருள்செய்த
தந்திக்கு கந்ததிருவே
சந்தனப் பொதியத் தமிழ்க்குறுமு னிக்குண்மை
சாற்றியருள் ஞானகுருவே
மாவலங் கொண்டநவ வீரர்க்கு முன்வந்த
வள்ளலே யுள்ளமெலிவும்
வாள்விழிக் குற்றபிணி யுந்தவிர்த் தெனையாள
மயிலேறி வந்தருளுவாய்
சேவலங் கொடியனே வடகாசி நிகரெனத்
தேவர்கள் பராவுமீழத்
தென்கதிரை மலைவேல வன்பர்மகி ழனுகூல
செந்தியம ருமைபாலனே. (10)

முத்தமிழ்க் கும்பமுனி நக்கீர னாதியோர்
முட்டின் றுரைத்தமதுர
மொழியமுத மின்றுநின் றின்பம் பயக்குமுன்
முந்நான்கு செவியகத்தே

பித்தனு னின்னற் பெருக்கினு லாற்ரு து
பேசுபுன் மொழிகடம்மைப்
பிள்ளைப் பசுங்குதலை மொழியென்ன வேகொண்டு
பேரருள் வழங்கியெங்கள்
அத்தனே முத்துலிங் கேசர்மகி ழையனே
யானையு மானுமேவும்
ஆதியே மெய்ஞ்ஞான சோதியே யுன்னடி
யடைக்கல மடைக்கலமினிச்
சித்தநலி வும்விழிக் கூச்சமுந் தீர்த்துனது
தெரிசனமு மருள்புரிகுவாய்
தென்கதிரை மலைவேல வன்பர்மகி ழனுகூல
செந்தியம ருமைபாலனே. (11)

### கலித்துறை

விண்ணும் புவியும் புகழுங் கதிரை வியன்சிலம்பும்
எண்ணு மனமுங் குடிகொண்ட வேலனை யேத்துநர்க்கு
நண்ணும் பெருந்திரு வும்பர மாயுளு நன்மைகளுங்
கண்ணுங் குளிர்ந்தொளி காலும் வினைகள் கழன்றிடுமே

★

## தனிப்பாடல்கள்

### திருப்புகழ்

தனன தனதன தனன தனதன
தனன தனதன—தனதான

அரியு மலகினை யருளு மொருவனும்
அமரர் தலைவனு—மழியாத
அமரர் முனிவரு மடல்கொ ளவுணனின்
அதிக கொடுமைகள்—பலகூறிப்
பிரிய முடனெமை யருள வருகுதி
பிழைகள் பலபல—பொறுநீயெம்
பெரிய குருபர முருக சரவண
பெரும வெனவெகு—துதியோத
உரிய துணைவர்கள் புடையில் வரவருள்
ஒழுகு முளமொடு—சமர்மேவி
ஒளிகொள் வடிநெடு மயிலை யசுரன
துடல நடுவற—விடுவோனே
கரிய விருண்மல வலிமை நடுவறக்
கமல மலரடி—முடிசூடக்
கலப மரகத மயிலில் வருகுதி
கதிரை மலையமர்—பெருமானே. (1)

★

சிவசிவ முருகா வரகர முருகா
சிவனருள் குமரா—உமைபாலா
திரைகடல் சுவறக் குலகிரி சிதறத்
திருநெடு வேல்கை—தொடுவோனே
அவவினை புரியு நிசிசரர் மடிய
வமரர்கள் சிறையை—விடுவோனே

அரியொடு பிரமன் றிருவடி பரவு
மழகிய கருணை—வடிவோனே
தவமுனி வரர்கள் சிவநெறி யுணரத்
தருமறி வுரைசெய்—குருநாதா
தனிநிலை யடையப் பிரிவறு கருணைச்
சலதியின் முழுகிக்—களையாற
நவமணி யழகின் றிறமலி நடன
மரகத மயின்மேல்—வரவேணும்
நணுகின ரிருமை பெறவருள் கதிரை
மணிமலை யமரும்—பெருமாளே. (2)

★

குமர குருபர குமர குருபர
குமர குருபர—எனவோதிக்
குலவு மிருகழல் பரவு மடியவர்
கொடிய வினைபிணி—கடிதேக
அமல பரசுக நிறைவி லுணர்வுடன்
அமிழ வருள்புரி—முருகேசா
அமரர் மகிழ்வுற அசுரர் குலமுத
லவணை யுடலிரு—பிளவாகத்
தமர சலதியினடுவி லழிவுசெய்
சயில வகடுடை—வடிவேலா
தனத தனவென நடன மிகவிடு
தகவு மயின்மிசை—வருவோனே
நமது வினைகெட விறவி பிறவியு
நலிய வலிமல—விருண்மாய
நயன வருள்தர வருக கதிரையில்
நலமு திரவமர்—பெருமாளே. (3)

சிவமுரு காசெந்தி வேன்முரு காசிந்தை செய்யவருந்
தவமுரு காதமிழ் நான்முரு காதணி காசலத்துப்
பவமுரு காகதி ரைப்பதி மேவிப் பயனருளும்
நவமுரு காவெனக் குன்னை விடவில்லை நற்றுணையே (4)

### கதிர்காம விபூதி

அரகரா வென்றள்ளி யண்ணாந்து வாயிற்
சிவசிவா வென்றுகொஞ்சஞ் சேர்த்துப்—பரிவாகக்
கீற்று நுதலிலிடக் கேடில்லை தென்கதிரை
நீற்று மலையில்வரு நீறு (5)

மந்திரமுந் தானே மருந்து மதுதானே
சுந்தரமுந் தானாகத் தோன்றுமே—யெந்தைபிரான்
சோதிவடி வேற்குமரன் சுப்பிரமண் யன்கதிரைப்
பூதிமலை தந்த பொடி. (6)

கூனற் சிலைநுதலாள் கோல நெடுவிழியாள்
மானுக்குப் பிள்ளைவள்ளி மான்பிணையுந்—தானும்
விருப்பிலே யாடுமலை நீறுவினைப் பஞ்சுப்
பொருப்பிலே நெருப்புப் பொறி. (7)

[முதுகிலே வந்த கட்டிற்கு மருந்துகட்டியபோழுது பாடியவை]

மண்சுமந்து வடுச்சுமந்த வள்ளறிருச் செவியின்
மறைசுமந்த கருப்பொருளை வழங்குகுரு நாதா
பண்சுமந்த திருப்பாடற் றொடைசுமந்த தோளா
பந்தமற மிதிக்கின்ற பங்கயப்பொற் றாளா
கண்சுமந்த வாறுமுகம் பன்னிரண்டு கையுங்
கன்னியர்கள் பாகமுமா யெழுந்தகட களிறே
புண்சுமந்த தன்றியொரு பொதிசுமந்து வருந்தப்
பொல்லாத தீவினையின் புணர்ப்பிருந்த வாறே (8)

### வேறு

அரியவுட லுனதுடைமை யடியனுன தடிமை
அறிவுகின தறிவுதர வருவதல துளதோ
உரியநல செயலுமுனது பெரியதிரு வருளே
உலகுதவிர் செயல்கரிய மலமுதவு செயலே

புரிவதிலே யடியனெனு முளநிலையு மருளிப்
பொன்னடியுந் தலைமீது பொருத்திவைக்க வேண்டும்
கரியசுர னுடலமிரு பகுதிபட வரியுங்
காந்திவடி வேலேந்து **கதிரைமலை** யானே. (9)

முதுகிற் கட்டுவந்த வரலாறு இந்நூலின் **92** ஆம் வெண்பாவிற் கூறப்பட்டுள்ளது.

★

**கதிரைமலைக் கர்ப்பூர வொளி**

அதிரவரு மாணிக்க கங்கைதனின் மூழ்கி
அன்பொடு சிவாயவென வருணீறு பூசி
முதிருமன் பானெஞ்ச முருகவிழி யருவி
முத்துதிர மெய்ப்புகள மூரவுரை குளறப்
புதியசெந் தமிழ்மாலை புகழ்மாலை சூடிப்
பொருவில்கந் தாசுகந் தாவென்று பாடிக்
**கதிரைமலை காணாத கண்ணென்ன கண்ணே**
**கர்ப்பூர வொளிகாணக் கண்ணென்ன கண்ணே.** (10)

**வேறு**

விதிவரைந் திடுபழைய வினையோடி மாயு
மிடிகொடும் பிணிசோக விதமான தேயு
மதியொடங் காரகன் முதலான கோளு
மருவிடும் பகையோடு மாறான நாளும்
அதிசுகந் தருஞான வழியான கூடும்
அளவிலன் பூறுமல மறுகாம லோடுங்
**கதிரையென் றோதுமலை கண்டகண் கண்ணே**
**கர்ப்பூர மெய்ச்சோதி கண்டகண் கண்ணே.** (11)

★

திருச்சிற்றம்பலம்.

## செய்யுண் முதற்குறிப்பகராதி

★

## பிழை திருத்தம்

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| viii | 26 | பறைறவைகளும் | பறவைகளும் |
| xxxii | 21 | கண்ணுதலாலின்பக்கழல் | கண்ணுதலானின்பக்கழல் |
| 24 | 7 | தேன்ற | தோன்ற |
| 46 | 25 | மலக்குணங்களில் | மலக்குணங்களின் |
| 50 | 9 | உணங்தான் | உணர்ந்தான் |
| 79 | 4 | பெறுமென்மது | பெறுமென்பது |
| 80 | 2 | யொலிப்பர் | யொலிப்பிப்பர் |
| 90 | 24 | இழுத்நுச் | இழுத்துச் |
| 108 | 23 | மறையாற் | மறைபாற் |
| 121 | 6 | அன்பருருக் | அன்பருரு |
| 141 | 22 | கரும்புக் கட்டின் | கரும்புக் கட்டியின் |
| 147 | 18 | கருபன் | கரும்பன் |
| 149 | 15 | விரும்பிவுண் | விரும்பியுண் |
| 162 | 23 | 83 | 84 |
| 163 | 25 | அலங்கரித்துங் | அலங்கரித்துக் |
| 170 | 21 | கோ்யிவ் | கோயில் |
| 11 | 22 | பறைறவை | பறவை |
| 175 | 19 | பேரிடறுற்றூராதலின் | பேரிடருற்றூராதலின் |
| 182 | 1 | சரணவபவனும் | சரவணபவனும் |
| 191 | 5 | கழிக்குழியை | கருக்குழியை |
| 200 | 11 | மெய்ப்புகளமூர | மெய்ப்புளகமூர |

★